# திருப்போரூர்
# அருள்தரு கந்தசுவாமிப்பெருமான் பிள்ளைத்தமிழ்

ஆசிரியர்
தவத்திரு சிதம்பர சுவாமிகள்



உரைவிளக்கம்
குன்றக்குடி ஆதீனப்புலவர்
**வித்துவான், க. கதிரேசன். எம். ஏ; பிஎட்**
பூவாளூர். 621 712
அலைபேசி. 98651 93754.

## தோரண வாயில்

கற்பவர் நெஞ்சைக் கனியச்செய்து உருக்குவது **திருப்போரூர்ச் சந்நிதிமுறை** என்கிற புகழ்வாய்ந்த பதினெட்டு நூல்களின் தொகுப்பு. **முறை** என்றசொல் பலபொருள்தருவதாயினும் **முறையீடு** என்றபொருள் சாலப்பொருந்துவதாகும். திருப்போரூர் முருகப்பெருமானாகிய அருள்தரு கந்தசாமிப்பெருமான் சந்நிதியில் முறையிடுதல் என்பதுஇதன்பொருள். இத்தொகுப்பு, பிள்ளைத்தமிழ் முதலாகப் பதினெண்இலக்கியங்கள் கொண்டது.

இவ்விலக்கியங்களை அருளியவர் அருட்டிரு சிதம்பரசுவாமிகள். இவர்களுடைய அருள்வரலாற்றை இவ்வலைத்தளத்தில் அடியேன் உரைவிளக்கம் தந்துள்ள “ திருப்போரூர்ச் சந்நிதிமுறை அலங்காரமும், திருவடிப்பற்றும் “ என்கிற பகுதியில் உள்ள தோரணவாயில் பகுதியால் அறியலாம். பிறசெய்திகள் வருமாறு :

பாலாற்றின் வளமும் நெய்தல்நிலவளமும் ஒருங்கமைந்தது திருப்போரூர் - நெய்தல் வளமையும் முல்லை வளமையும் உடையது. சிதைந்திருந்த திருக்கோயிலைச் சிறப்புறக்கட்டிய அருட்டிரு சிதம்பர சுவாமிகள்; இப்பெருமானின் பெருஞ்சிறப்புகளை உணர்ந்து ஓதிமகிழ அளித்ததே இச்சந்நிதிமுறை. இந்நூல், பெருமானின் பெரும்புகழைக் கற்பனை வளமும், சாத்திரமணமும் பொருந்தக் கூறுவது. இதன் “ திருப்போரூப் பிள்ளைத்தமிழ்.”இது, வேம்படிவிநாயகர் வணக்கம் உள்ளிட்ட 101 பாக்களுடையது. இனி, இப்பிள்ளைத் தமிழின் நறுமணம் நுகர்ந்து இன்புறுவோம்

**************************************

## திருப்போரூர் முருகன்

## பிள்ளைத்தமிழ்

************************

### வேம்படி விநாயகர்

( 1 ) அண்டகோ டிகளுடன் தந்தஉடல் யாவையும்
அரியமறை முதலகலையும்
அக்கரமும் மெய்ப்பதமும் ஐங்கலையும் மந்திரமும்
ஆனபத கதியும்வாக்கும்
மண்டிஉண் டாகவரு குண்டலியோ(டு) ஐஞ்சத்தி
மாமுகமெனப் படைத்தவள்ளிநா
யகன்மீது பிள்ளைஅம் தமிழ்சொலஎன்
மதியில்நின்(று) அருள்புரியுமால்
பண்டைமா மலதிமிரம் விண்டுபோ கக்கிரண
பானுகோ டிகள்என்னவே
பழஅடியர் அககமலம் அகலாது நின்(று)ஒளி
பரப்பிஆ னந்தம்உதவி
விண்டுவே முதலான அண்டர்மா முனிவர்நரர்
விக்கினம்அ கற்றிஆளும்
மேன்மைதரு போரூரில் நிம்பநீ ழற்குலவு
வேழமுகன் இருசரணமே.

**குறிப்புரை** : கோடி அண்டம். உடல்யாவையும்= உடம்பு, பொருள், பொன் முதலிய அனைத்தும். முதல= முதலிய. அக்கரம்= அகரம் முதலியஎழுத்து. மெய்ப்பதம்= உலகச்சொற்கள். ஐங்கலை= வித்யாகலை, நிவிர்த்திகலை, பிரதிட்டாகலை, சாந்திகலை, சாந்தியதீதகலை. மந்திரம்= ஈசானம் முதலிய பதினொரு மந்திரங்கள். மண்டி= நெருங்கி. குண்டலி= சுத்தமாயை. ஐஞ்சத்தி= பராசத்தி, ஆதிசத்தி, இச்சாசத்தி, ஞானசத்தி, கிரியாசத்தி. அம்பிள்ளைத் தமிழ்= சிறந்த பிள்ளைத்தமிழ். மாமல திமிரம்= மிகப்பெரிய ஆணவமல இருள். விண்டுபோக= சிதற. கிரண கோடி பானு= ஒளிரும் கோடிக்கணக்கான சூரியன். அககமலம்= உள்ளத்தாமரை. விண்டு= திருமால். அண்டர்= வானுலகினர். விக்கினம்= இடையூறு. நிம்பநீழல்= வேப்பமரத்தின் நிழல். வேழமுகன்= விநாயகன். இருசரணம்= இரு திருவடிகள்.

**பொழிப்புரை** : முதற்பிறப்புக்கு முன்னரே, ஆன்மாபற்றியிருந்த ஆணவமல் இருள் சிதற, ஒளிரும் கோடிக்கணக்கான சூரியன் என்னுமாறு பழஅடியார்களின் உள்ளத்தாமரைகளை நீங்காது நிலைத்துநின்று ஒளிபரப்பி, அதன்மூலம் பேரின்பத்தை அருளி, திருமால்முதலான தேவருலகினர், சிறந்த முனிவர்கள், மானிடர் முதலியோருக்குவந்த இடையூறுகளை அகற்றி ஆட்கொண்ட மேன்மைதரும் திருப்போரூரில் வேப்பமரநிழலில் எழுந்தருளிவிளங்கும் யானைமுகத்து விநாயரின் இரு திருவடிகளும்;

அண்டத்துக் கோடிக்கணக்கான உயிர்களுக்குத்தந்த உடம்பு, பொருள், பொன்முதலிய அனைத்தையும், சிறந்த வேதம்முதலிய கலைகளையும், அகரம்முதலிய எழுத்துகளையும், உலகச்சொற்களையும், வித்யாகலை முதலிய ஐந்துகலைகளையும் ஈசானம் முதலிய பதினோருமந்திரம், சொல்லாற்றல், வாக்கு ஆகியன நெருங்கி உண்டாகுமாறு தோன்றிய சுத்தமாயையுடன், பராசத்தி முதலிய ஐந்துசத்திகளையும் முகமாகப் படைத்துக்கொண்டவனும், வள்ளிநாயகிக்குக் கணவனுமாகிய முருகன்மீது அழகிய தமிழில் பிள்ளைக்கவி சொல்ல என் அறிவில் நிலைத்து அருள்புரியும்

**இலக்கணக்குறிப்பு** : ஐங்கலை, ஐஞ்சத்தி - தொகைக்குறிப்புகள். மலதிமிரம் - உருவகம்.

## 1. காப்புப் பருவம்

( இரண்டாம் மாதத்தில் பிள்ளையைக்காக்குமாறு –தெய்வங்களை வேண்டுதல் )

### திருமால்

************

( 2 ) பூமேவு பொய்கைப் பொறிச்சிறகர் வண்டினம்
பொங்கரின் விருந்(து)அயர்தரும்
போரூரின் முருகனைச் சீர்மேவு குமரனை
புனிதஞா னக்குரவனைக்
காமேவு கடவுள் பசுந்துணர் விரிந்துநறை
கடிமணத் தொடுபிலிற்றும்
கண்அகல் நிழலரசு சசிகணவ னுக்(கு)உதவு
கந்தவே ளைப்புரக்க
தூமேவு ஞானசத் திக்கடலின் மொண்டுசிற்
சொலிதசத் துவப்பொருப்பில்
தோம்அற இவர்ந்(து)உலகம் பரந்(து)உயிர்த்
தொகைவகைப் பயிர்கள்தழையத்
தேமேவு மதுரம் பழுத்(து)ஒழுகு மென்மொழித்
திருமின் கலந்துமிளிரச்
செய்யபே ரருள்மாரி பொய்யாது பொழிகின்ற
செங்கண்க ருங்கொண்டலே

**குறிப்புரை :** பொறிச்சிறகர் வண்டினம்= புள்ளிகளுடைய சிறகினைப்பெற்ற வண்டுகள். பொங்கர்= சோலை. விருந்து அயர்தரும்= விருந்துண்டு களிக்கும். குரவன்= குரு. கா= கற்பகச்சோலை. கடவுள் பசுந்துணர் விரித்து= தெய்வத்தன்மை வாய்ந்த பசியபூங்கொத்து மலர்ந்து. கடிமணத்தொடு தேன்பிலிற்றும்= சிறந்த நறுமணத்துடன் தேன்சுரக்கும். கண்அகல்நிழல் அரசு= இடம்அகன்ற தேவருலக அரசன் - தேவேந்திரன். சித்சொலி= ஞானம் ஒளிரும். தசத்துவப் பொருப்பு= பத்துஅவதாரங்களாகிய மலை. தோம்அற இவர்ந்து= குற்றமின்றி ஏறி. படர்ந்து= பரவி. உயிர்ப்பயிர் வகை தழைய= உயிர்களாகிய பயிர்கள் நன்முறையில் செழிக்க. திருமின்= மின்னலாகிய திருமகள். மாரி= மழை. செங்கண்= கருணைக்கண்கள். கருங்கொண்டல்= கருநிறமுடைய திருமாலே.

**பொழிப்புரை :** தூய்மையான ஞானசத்தியாகிய கடலின் நீரினை முகந்துகொண்டு, ஞானம் ஒளிரும் பத்துஅவதாரங்களாகிய மலையில் குற்றமின்றி ஏறி, உலகமெங்கும் பரவி, உயிர்களாகிய பயிர்கள் நன்முறையில் செழிக்க, மின்னலாகிய திருமகளுடன் கலந்துஒளிவீசி, சிறந்த பெரியஅருள் ஆகிய மழையைத் தவறாது பொழிகின்ற கருணைக்கண்களுடைய கரிய மேகமாகிய திருமாலே!

தாமரைமலர்களுடைய பொய்கையில்வாழும் சிறகுகளில் புள்ளிகளுடைய வண்டுகள், சோலைகளில் தேனாகிய விருந்துண்டு களிக்கும் திருப்போரூர் முருகனாகிய குமரப்பெருமானை; ஞானவடிவான புனிதனாகிய குருவை; கற்பகச்சோலையில் உள்ள தெய்வத்தன்மை வாய்ந்த கற்பகமரத்தின் வளமான பூங்கொத்துகள் மலர்ந்து சிறந்த நறுமணத்துடன் தேன்துளிக்கும் இடமகன்ற தேவருலக ஆட்சியை, சசிதேவியின் கணவனுக்கு - தேவேந்திரனுக்கு மீட்டுத்தந்த முருகப்பெருமானைக் காத்தருள்க. ( 1 )

( 3 ) **சதாசிவன்**

கார்என ஆர்உயிர் மீ(து)அரு ளேபொழி
கண்ணனை விண்ணவனைக்
கந்தனை எந்தையை வந்தனை அன்பர்
கடும்பகை கொன்றவனைச்
சீர்சம ராபுரி யாளனை மாளுறு

தேவர் மணாளனைஓர்
சின்மய ரூபனை நன்மைஎ லாம்உறு
சேயினை அருள்புரிக
ஓர்வுஅரி தாம்உயிர் யாவையும் நேர்வினை
ஒத்தும லப்பகைபோய்
ஒண்சுகம் மேவிட ஐந்தொழில் தந்திடும்
உத்தம சிற்பரமாய்ச்
சேர்உரு வாய்அரு வாய்இரு வகையும்
செறிபொரு ளாய்நிறைவாய்ச்
செம்முகம் ஐந்தொடு செம்மையில் நின்றுஅருள்
செய்தச தாசிவமே.

**குறிப்புரை** : கார்= மழைமேகம். கண்ணன்= கண்களுடையவன் வந்தனை= வணங்கும். கடும்பகை= கொடிய பகையாகிய ஆணவமலம். மாளுறு= இறக்கும். மணாளன்= நல்வாழ்வு தந்தவன். ஓர்சின்மயம்= ஒப்பற்ற ஞானமயம், உறுசேய்= மிக்க குழந்தையை. ஓர்வு அரிதாம்= எண்ணிப்பார்த்தற்கு அரிய. உயிரி= உயிர்ப்பொருள்கள், வினைநேர் ஒத்து= இருவினை நேராகி. மலப்பகை= பகையாகிய மும்மலம். ஒண்சுகம்= பேரின்பம். ஐந்தொழில்= படைத்தல் காத்தல் அழித்தல் மறைத்தல் அருளல். சிற்பரம்= ஞானமயனான மேலானபொருள். இருவகையும் செறி பொருள்= அருவமும் உருவமும் கூடிய அருவுரு - சிவலிங்கம். செம்மையில் நின்று= சிறந்து நின்று.

**பொழிப்புரை** : எண்ணவியலாத உயிர்ப்பொருள்கள் அனைத்தும் இருவினை ஒத்து, அதனால் தமது பகையாகிய மும்மலம் ஒழிந்து, வீடுபேற்றின்பமுற ஐந்தொழில்புரிந்து அருளும் மிகச்சிறந்த ஞானமயமான மேலானபொருளாய், அருவம் உருவம் இவை இரண்டும்கொண்ட அருஉருவமாக - சிவலிங்கவடிவில் ஞானநிறைவு உடையதாக, சிறந்த ஐந்துதிருமுகங்களுடன் சிறந்துவிளங்கி அருள்புரியும் சதாசிவமூர்த்தியே !

மழைபொழியும்கார்கால மேகம்போல் சிறந்த உயிர்கள்மேல் அருளையே பொழியும்கண்களுடையவனும், கந்தனும், எம்தந்தையும், வணங்கும் அடியவர்களுக்குப் பகையான மும்மலங்களை அழித்தவனும், சிறப்புவாய்ந்த திருப்போரூர்ப் பெருமானும், அருள்பொழியும் கண்களுடையவனும், இறப்புடைய தேவர்களுக்கு நன்னிலை அருள்கிறவனும், ஒப்பற்ற ஞானமே வடிவாகக் கொண்டவனும், நன்மைகள் அனைத்தும் மிக்கவனுமாகிய இக்குழந்தையைக் காத்தருள்க. ,

**விளக்கம்** : இருவினை ஒப்பு= நல்வினை தீவினைப் பயன்களை விருப்பு வெறுப்பின்றி அனுபவித்தல். ஐந்து திருமுகங்கள்= ஈசானம், தத்புருடம், அகோரம், வாமதேவம், சத்யோஜாதம். கந்தன்= உயிர்களுக்குப் பற்றுக்கோடானவன். தேவர்கள் இறப்புடையவர்கள் : “ செத்துப்பிறக்கின்ற தெய்வங்கள் மணவாள “ ( முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழ். மகுடம் ) **( 2 )**

**( 4 )** **பராசத்தி**

விடயஆ வாரகம் சொரூபஆ வாரகம் எனப்பகர் விதங்கள்ஆகி
விரிமலக் கங்குல்உயிர் விடயஞா னத்தினொடு மிகுசொருப ஞானத்தையும்
தடையதா கச்செய தனுவாதி நாலையும் தருமாயை அறிவினாலும்
தண்அருட் பேரறிவி னாலும்அத் தடைவிடும் தகுபரையை அஞ்சலிப்பாம்
அடலினோ(டு) எழும்அவுணர் உடல்வேறு கூறுபட அளகைவே தாளபூதம்
ஆடப்பெ ரும்கூகை கூவப் பருந்துநிழல் கூடச்சி வந்தவடிவேல்
நொடியில்ஏ வியகுகனை நெடியமால் மருகனை நிகரில்போ ரூர்முருகனை
நுணியகூர் அறிவுகொடு கருதுவோர் அமுதம்என நுவலும்ஓர் அருள்புரியவே.

**குறிப்புரை** : விடய ஆவாரகம்= பொருள்மறைப்பு. சொரூப ஆவாரகம்= உயிர்மறைப்பு. மலக்கங்குல்= ஆணவமல இருள். விடய ஞானம்= புலன்களால் பெறும்அறிவு. சொரூபஞானம்= திருவருள் அறிவு. தனுஆதி நான்கு= உடம்பை இடமாகக் கொண்ட மனம் புத்தி சித்தம் அகங்காரம். தடை விடுக்கும்பரை= மறைப்பாகிய தடைசெய்து மலபரிபாகம் செய்து, பின்னர் அத்தடையை நீக்கும் அருட்சத்தியாகிய பராசத்தி. அடல்= வலிமை. அலகை= பேய். கூகை= கோட்டான். கூவ= அலற. கூட=மிக. நுணிய= நுண்ணிய.

**பொழிப்புரை** : வலிமையொடு திரண்டுவரும் அசுரர்களின் உடம்பு இருவேறு கூறாகவும், பேய் வேதாளம் பூதம்ஆகியன தின்னப்பிணங்கள் கிடைத்ததால் கூத்தாடவும், பெரிய கோட்டான்கள் அலறவும், பிணந்தின்னவந்த பருந்துக் கூட்டத்தால் அவற்றின் நிழல்நிலத்தில் மிகுதியாகவும், குருதியால் சிவந்த கூரியவேலினை நொடிப்பொழுதில் ஏவியவனும், மாவலியிடம் உயரமாய் நீண்ட திருமாலுக்கு மருகனும் ஆகிய ஒப்பற்ற திருப்போரூர் முருகப்பெருமானை, நுட்பமான கூரிய அறிவினால் நினைப்பவர்களுக்கு, அமுதம் என்று சொல்லப்பெறும் அருள் புரியும் பொருட்டு;

பொருள் மறைப்பு, உயிர்மறைப்பு என்று சொல்லப்பெறும் பலவிதங்களாகி விரியும் ஆணவமல இருள், புலன்களால்பெறும் அறிவையும், மிகுந்த திருவருள்ஞானத்தையும் தடைப்படுத்த, உடம்பை இடமாகக்கொண்ட மனம், புத்தி, புத்தி, சித்தம், அகங்காரம் ஆகியவற்றைத்தரும் மாயை அறிவாலும் தண்ணிய பேரறிவாகிய ஞானத்தாலும் அத்தடையை நீக்கும் பராசத்தியை வணங்குவோம். ( 3 )

( 5 ) **விநாயகர்**

பகவதி கரஅணை மிசைதுயில் பயிலும்
இகலறு குமரனை இனி(து)அருள் புரிக
அகரமும் உகரமும் மகரமும் ஆகித்
திகழுறு பிரணவம் எழுசிறு களிறே.

**குறிப்புரை** : பகவதி= பராசத்தி. கர அணை= கைகளாகிய படுக்கை. இகல்= ஒப்புமை. அகரமும் உகரமும் மகரமும் ஆகி= ஓங்காரமாய். திகழுறு= விளங்கும். பிரணவம்எழு= பிரணவப்பொருளாய்த் தோன்றிய. சிறு= என்றும் மிக இளைய.

**பொழிப்புரை** : ஓங்காரப்பொருளாய் விளங்கித்தோன்றிய என்றும் மிகஇளைய விநாயகப் பெருமானே! பராசத்தியின் கைகளாகிய படுக்கையில் எப்போதும் துயிலும் ஒப்பற்ற முருகப்பிரானுக்கு 5இனிமையுண்டாக அருள்க. ( 4 )

( 6 ) **திருநீறு**

சோதி மகரக் குழைசெறிசுந் தரத்தோள் ஈராறு உடையானைச்
சுருதி இரைக்கும் தண்டையம்தாள் துணைஎன் முடியில் பொறித்தானை
மாது வளரும் சமராபுரி வாழ்வை வானோர் சிகாமணியை
வடிவேல் அரசை மயில்அரசை வந்து புறம்காத்(து) அளித்திடுமால்
ஆதி பகவன் ஞானவடி(வு) அழலில் பூத்து நித்தியமாய்
அணிந்தோர் தமக்கு வசீகரமாய் அருந்தி னோர்கட்(கு) ஆரமுதாய்
நீதி அறியும் பசுமலத்தை நீக்கும் ஒருநற் குறிகாட்டி
நிகழ்பே ரின்பக் கடல்ஊட்டி நின்ற புகழ்வெண் திருநீறே.

**குறிப்புரை** : செறி= நன்குபடியும். இரைக்கும்= பேரொலியுடன் போற்றும். மாது= அன்பு. புறம்காத்து= அருகில்இருந்து காத்து. ஆதிபகவன்= சிவபிரான். பூத்து= தோன்றி. நித்தியம்= நிலையாக. வசீகரம்= அழகு. அருந்தினோர்= உட்கொண்டோர். பசு மலத்தை= உயிரின் மும்மலங்களை. குறி= அறிகுறி.

**பொழிப்புரை** : ஞானவடிவான சிவபிரானின் ஒளிவிரியும் நுதல்கண் தீயில்தோன்றி நிலையாக அணிந்தவர்க்கு அழகுதருவதாய், உள்கொண்டவர்க்குச் சிறந்த அமுதமாய், அறமுணர்ந்த உயிர்களின் மும்மலம் நீக்கும் ஒரு நல்ல அடையாளமாய் விளங்கி எப்போதும்பேரின்பமாகிய கடலினை ஊட்டிநிற்கும் புகழ்வாய்ந்த வெண்மையான திருநீறே;

மகரவடிவான காதணி பொருந்தும் அழகிய பன்னிரு தோள்களுடையவனை, வேதங்கள் உரக்கப்போற்றும் தண்டையணிந்த தன்இருதிருவடிகளை என்தலையில் பதித்தவனை, அன்புவளரும் திருப்போரூர் வாழ்வாயிருப்பவனை, தேவர்களின் தலைமணியை, கூரிய வேலேந்திய அரசனை மயிலூர்தியுடைய அரசனை எண்ணிவந்து, அருகில் இருந்து காத்துக் கருணபுரியும். ( 5 )

( 7 ) **உருத்திராக்கம்**

அரிய மனமும் அறிவரிதாய் அருவாய் நிறைவாய் இருந்துமுனர்
அமரர் திரிபு ரம்செய்குறை அறையக் கேட்டு முக்கண்வழிக்
கரிய களச்செம் புயல்கருணை பொழியப் பெருகும் கடற்பிறந்து

கருதும் அடியார் பவக்கடலைக் கடத்தும் மணியைத் துதித்திடுவோம்
பெரிய தவத்துக் குறுமுனிஎம் பெருமான் செவிவாய் மடுத்(து)அருந்தப்
பிறங்கு ஞான மொழிநறவு பெய்யும் குமுத வாயானைத்
தெரியல் நறுமா முகைகுறமான் திளைக்கும் முலைக்கோடு உழஅலரும்
திருமார் பகனைச் சமரபுரி சேயைப் புறங்காத்(து) அளித்திடவே.

**குறிப்புரை** : அரிய= சிறந்த. முனர்=முன்பு. திரிபுரம்= முப்புர அசுரர்களாகிய தாரகாட்சன், வித்யுன்மாலி, வாணாசுரன். கரியகளம்= நஞ்சினால் கருமையடைந்த கழுத்து. பவக்கடல்= பிறவிக்கடல். கடத்தும்= கரையேற்றும். மணி= கண்மணி - உருத்திராக்கம். செவிவாய்= காதுகளில். மடுத்து அருந்த= கேட்டு உட்கொள்ள. நறவு= தேன். தெரியல்= மாலை. குறமான்=குறவர்குடி மான்ஆகிய வள்ளிநாயகி. முலைக்கோடு உழ அலரும்= கொங்கைகளாகிய மலைகலால் உழமகிழும்.

**பொழிப்புரை** : தவத்தில்மிக்க அகத்தியரும் எம்து சிவபிரானும் தனது செவிகளால் கேட்டு உட்கொள்ள உபதேசித்த எம்தலைவன் முருகனின் சிறந்து விளங்கும் ஞானமொழியாகிய தேனினைச் சொரியும் குமுதமலர் போன்ற வாயுடையவனை, மணக்கும் பருத்த மலர்மாலையணிந்த வள்ளிநாயகியின் முலைகளாகிய மலைகள் உழ மகிழும் திருமார்புடையவனை, திருப்போரூர் முருகப்பிரானை அருகிலிருந்து காத்துக்கருணை செய்ய;

சிறந்த மனத்தவரும் அறிவதற்குஅரியதாய், அருவமாய், பரிபூரணமாய் இருந்து; முன்னாளில் தேவர்கள் கூறிய முப்புரத்தார்செய்த துன்பங்களைக்கேட்டு; நஞ்சினால் கருநிறம்பெற்ற கழுத்தினரான செம்மேனியனாகிய மேகம் - சிவபிரான் - கருணைபுரிய, அதனால் கடல்போல் கருணைபெருகிய கண்களில் தோன்றி, தன்னை நினைக்கும் அடியவரைப் பிறவிக்கடலிலிருந்து கரையேற்றும் கண்மணியை எண்ணிப் போற்றுவாம்.

**இலக்கணக்குறிப்பு** : செம்புயல் - உருவகம். ( 6 )

( 8 ) **பஞ்சாக்கரம் - திருவைந்தெழுத்து**

கருதரிய பலஉயிர்கள் பந்தனைக் கார்க்கடல்
கரைஇவர வருகலனை அன்பர்உட் காட்சியை
அருமறையும் அறிவரிய அஞ்சுகப் பேற்றினை
அரியசிவன் உரியபெயர் ஐந்தினைப் போற்றுதும்
குரவுகமழ் குறவனிதைக் கொண்கனைக் கார்த்திகை
குடமுலையின் அமுதகடல் உண்(டு)அகத் தேக்கனை
தருணகும ரனைஇனிய தண்டலைச் சீர்ப்பொலி
சமரபுரி தனில்நிலவு கந்தனைக் காக்கவே.

**குறிப்புரை** : கருதரிய= எண்ணற்ற. பந்தனைக் கார்க்கடல்= ஆசையாகிய கரியகடல். கரை இவர்= கரைஏற. வருகலன்= ஏறிவரும் கப்பல். உட்காட்சி= மனத்தில் காணப்பெறுகிறவன். அறிவரிய= அறிவதற்கு அரிய. அஞ்சுகம்= கிளி. சிவன்உரிய பெயர்ஐந்து= சிவபிரானின் ஐந்தெழுத்துப்பெயர் நமசிவாய, குரவு= குராமலர். கொண்கன்= கணவன். கார்த்திகை= கார்த்திகைப்பெண்கள். குடமுலை= திரண்ட முலை, கடல் அமுதம்= கடல்போன்ற பால். தருண= இளமையான. தண்டலை= சோலை.

**பொழிப்புரை** : வள்ளிக் குறமகட்கு வாய்த்த குராமலரின் நறுமணம் கமழும் கணவனை, கார்த்திகைப் பெண்களின் திரண்ட முலைகளில் கடல்போல்சுரந்த பாலினைஉண்டு அவர்கள்உள்ளத்தில் தேங்கி இருப்பவனை, என்றும் இளமையான குமரனை, இனியசோலை சூழ்ந்த திருப்போரூரில் எழுந்தருளியுள்ள கந்தப்பிரானை;

எண்ணற்ற பலஉயிர்களும் ஆசையாகிய கரியகடலிலிருந்து கரையேறவரும் கப்பலை; அன்பர்களின் மனத்தில் காணப்பெறுகிறபொருளை, அரியவேதங்களும் அறிவதற்கு இயலாத கிளியாகிய மலைமகளின் மகனைக் காத்தருளச்; சிறந்த சிவபிரானின் திருப்பெயராகிய நமச்சிவாய என்ற ஐந்தெழுத்துடைய திருப்பெயரைப்போற்றுவோம்..

**விளக்கம்** :" நாதன் நாமம் நமச்சி வாயவே " என்ற திருப்பெயரில் உள்ள எழுத்துகள் ஒவ்வொன்றும் தனித்தனிப் பொருளுடையன. அவை: ந - திரோதான( மறைப்பு ) சத்தி, ம - மலம், சி - சிவம் , வ - அருள், ய - உயிர் ஆகியவற்றைக் குறிக்கும். கடல் மேற்பரப்பின் கருமை அதன்மிகுந்த ஆழம்குறித்தது - இவ்வுருவகம் நம்பேராசை குறிக்கிறது. ( 7 )

( 9 ) **திருமகள்**

பொற்குவடு பத்துநூ(று) இலகுமுடி தொறும் இரவி
பூணெனக் கொண்டுமதியம்
பொழிநிலவு வெள்ளத்தின் மிசைமிதந்து அழகுசெறி
புண்டரிகம் மண்டுபுயலை
அற்புதத் தொடுகொண்டு மிளிரஅப் புயல்நடு
அரும்புநால் வகைமலரொடும்
அம்சோதி மினல்ஒன்று இருந்தென இருந்(து)ஒளிர்
அணங்கினை நினைந்துதொழுவாம்
எல்செறி திருப்பரங் குன்(று)ஆவி நன்குடி
இரும்பொழில் திருவேரகம்
ஈறில்சீர் அலைவாய் விளங்குபழ முதிர்சோலை
என்னும்மறை புகழ்பதிதொறும்
கற்குவடு தொறும்இனிய நற்சமர புரியும்உறை
கடவுளைக் கடவுளர்எலாம்
கைம்மலர் குவிக்கஇரு கால்மலர் படைத்தஒரு
கந்தனை அளிக்கஎன்றே.

**குறிப்புரை** : பொற்குவடு= அழகிய சிகரங்கள். பத்துநூறு= ஆயிரம். முடி= துளசிமாலை.. இரவி= சூரியன். பூண் = அணிகலன். மதியம்பொழி நிலவு வெள்ளம்= முழுநிலாப்பொழியும் ஒளிவெள்ளம் - பாற்கடல். மிசை மிதந்து= மேல் அறிதுயில் கொண்டு புண்டரிகம் மண்டுபுயல்= தாமரைக்கண்கள் கொண்ட புயல் வண்ணன் ஆகிய திருமால். அப்புயல் நடு= அந்த மேகமாகிய திருமாலின் மார்பில். நால்வகை மலர்= கோட்டுப்பூ, கொடிப்பூ, நிலப்பூ, நீர்ப்பூ. மினல்= மின்னல். அணங்கு= திருமகள். எல்= ஒளி. இரும்பொழில்= மிக்கபெருமை பதி= தலம். கற்குவடு= குன்று / மலை. கடவுளைக் கடவுளர் எலாம்= முருகப்பெருமானை மற்ற கடவுளர் அனைவரும்.

. **பொழிப்புரை** : அருளொளி செறிந்த திருப்பரங்குன்றம், திருவாவினன்குடி, மிக்க பெருமைபொருந்திய திருஏரகம், எல்லையற்ற சிறப்புடைய திருச்செந்தூர், அருள் விளங்கும் பழமுதிர் சோலை ஆகிய மறைகள்போற்றும் தலங்கள், மலைகள் / தோறும்மற்றும் திருப்போரூரிலும் எழுந்தருளிய முருகப்பிரானை; பிறகடவுளர் அனைவரும் கைத்தாமரை குவித்து வணங்கவுள்ள திருவடித்தாமரைகள் கொண்ட ஒப்பற்ற முருகப்பிரானைக்காக்கும்பொருட்டு;

அழகிய சிகரங்கள் ஆயிரமுடைய மலைதோறும் சூரியனை அணிகலனாகக்கொண்டு, முழுநிலவு பொழியும் ஒளிவெள்ளமாகிய பாற்கடலில் அறிதுயிலோடு மிக்க அழகுசெறிந்த தாமரைக் கண்கள்கொண்ட கார்மேகம் ஆகிய திருமாலின் திருமார்பில், அற்புதமாகத் தொண்டுகொண்ட ஒளியுடன் கோட்டுப்பூ கொடிப்பூ நிலப்பூ நீர்ப்பூக்கள் சூடி, அழகிய ஒளிபொருந்திய ஒளிஒன்று இருந்ததுபோல் இருக்கும் திருமகளை நினைந்து வணங்குவோம்.

**விளக்கம்** : உருவகவிளக்கம் : பொற்குவடு பத்து நூறு இலகு முடி என்றது திருமாலின் மலைபோல் அகன்ற மார்பில் அணிந்த துளசிமாலைகளை. சூரியன் என்றது கௌஸ்துவமணிப்பதக்கத்தை. மதியம்பொழி நிலவு வெள்ளம் என்றது= திருப்பாற்கடலினை. புயல் என்றது திருமாலினை.

**இலக்கணக்குறிப்பு** : மினல் - இடைக்குறை. ( 8 )

.

( 10 ) **கலைமகள்**

நெய்தல்அம் காடுமிகு காவிபொரு வள்ளையும்
நிகழ்குமிழும் முகைமுல்லையும்
. நிறைநறைக் குமுதமும் தொடியுடைத் தோன்றியொடு
நேர்கன்னி காரமுகையும்
எய்தரிய நூபுரக் கமலமும் செறிகடவுள்
எகினம்வெள் ளைக்கமலம்மீ(து)

ஏர்பெற்ற மறைமுதல கலைசொற்(று) இருந்தென
இருந்தவளை அஞ்சலிப்பாம்
கைதைஅம் கானமும் புன்னைஅம் கானமும்
கானல்நெய் தற்கானமும்
கடிமணத் தொடுநறவும் மகரமும் தந்(து)இலகு
கல்யாண மாமறு(கு)என
மைதவழ் பொழில்புளினம் மலிகயல் புலவையும்
வளைஅலவன் உறுபசியையும்
வாரா(து) அகற்றிஒளிர் நெய்தல்அம் சமராபுரி
வருகுகனை அருள்புரியவே

**குறிப்புரை** : மிகுஅம்நெய்தல்காடு= அடர்ந்தஅழகியகூந்தல் ஆகிய காடு. காவி பொரு= குவளக்கண்கள் மோதும். வள்ளை= வள்ளைக் கொடியாகிய காது. நிகழ் குமிழும்= சிறந்து விளங்கும் குமிழம்பூ ஆகிய மூக்கு, நிறைமுகைமுல்லை= மிக்கமுல்லைஅரும்புகளாகிய பற்கள். நறை குமுதமும்= தேன்பொருந்திய வாயாகிய செவ்வாம்பல். தொடியுடைத் தோன்றி= வளையல் அணிந்த காந்தள் மலராகிய கை. கன்னிகார முகை= கோங்கரும்பை ஒத்த முலை. எய்தரிய நூபுரக் கமலம்= அடைவதற்கு அரிய சிலம்பணிந்த தாமரைகளாகிய பாதங்கள். எகினம் செறிகடவுள்= அன்னத்தில்ஏறும் பெண்தெய்வம். ஏர்பெற்ற கமலம் மீது= அழகிய வெண்டாமரைக்கண். மறைமுதல் சொற்று= வேதம் முதலியவற்றைச் சொல்லிக்கொண்டு. இருந்தென இருந்தவள்= அமர்ந்திருந்தது போல் இருந்த கலைமகள். கைதை= தாழை. அம்கானம்= அழகிய காடு. கானல் நெய்தல்கானம்= கடற்கரைச்சோலை. நெய்தல் மலர்க்காடு. கடி= மிக்க. நறவு= தேன். மகரம்= மகரந்தம். மா கல்யாணமறுகு= பெரிய திருமணவீதி. மை= மேகம். பொழில் புளினம்= சோலைவாழ்பறவை இனம். மலிகயல் புலவை= மணல் மேட்டிலுள்ள உலர்ந்த மீன்நாற்றம். வளைஅலவன்= வளையில் வாழும் நண்டு. நெய்தல் அம் சமராபுரி= நெய்தல் நிலத்து அழகிய திருப்போரூர்.

**பொழிப்புரை** : அழகிய தாழைக்காடு, அழகிய புன்னைக்காடு, கடற்கரைச் சோலைக்கண்ணதாகிய நெய்தற்காடு ஆகியவற்றின் மலர்களால் பெருகும் நறுமணத்தோடு தேனும், மணல் மேட்டிலுள்ள உலர்ந்து நாறும் மீன்களையும் வருபவர்க்குக் கொடுத்துவிளங்கும் பெரிய திருமண வீதிபோல், மேகம்தவழும் சோலைவாழ் பறவைக்கூட்டத்திற்கும் வளையில் வாழும்நண்டுகட்கும் வழங்கி, அவற்றுக்கு மிக்கபசி வராமல்செய்து விளங்கும் திருப்போரூரில் எழுந்தருளியுள்ள முருகனைக் காத்துஅருள்புரியுமாறு;

அடர்ந்த அழகிய கூந்தலாகிய காடும், குவளைகண்கள் மோதும் வள்ளைக்கொடியாகிய காதும், சிறந்த குமிழம்பூ ஆகியமூக்கும், மிக்க முல்லைஅரும்புகளாகியபற்களும், தேன்பொருந்திய செவ்வாம்பல் ஆகிய வாயும், வளையல் அணிந்த காந்தள் ஆகிய கையும், கோங்கரும்பாகிய முலையும்,அடைதற்கரிய தாமரைமலராகிய பாதமும் கொண்டு அன்னப்பறவைமேல் ஏறும் பெண்தெய்வம் ஒன்று, அழகிய வெண்டாமரைக்கண் இருந்து வேதம் முதலிய கலைகளைச் சொல்லிக்கொண்டு இருக்கும் கலைமகளை வணங்குவோம்.

**இலக்கணக்குறிப்பு** : இதில் உள்ள திருப்போரூர் வருணனை உவமையணி. கலைமகள் பற்றிய வருணனை முற்றுருவகவணி. ( 9 )

( 11 ) **பல தேவர்கள்**

எண்திசை யோர்வசு எண்மர்கள் வயிரவர்
எண்மர் மருத்துவரும்
ஈரிரு மூவரும் ஓரொரு பதின்மரும்
ஈரறு சூரியரும்
அண்டர் வியாழன் அடும்புய வீரர்
அலர்ந்த சரோருகமேல்
அந்தணர் ஓரெழு மங்கையர் சோமனும்
வந்(து)அரு ளேபுரிவார்
தண்டையும் நீடு சதங்கையும் நீள்ஒளி
தங்கிய கிண்கிணியும்

தாளிணை மாமலர் மீதினில் ஓசை
தழைந்திட வந்துஉமையாம்
ஒண்தொடி கொஞ்ச இருந்து குறங்கில்
உவந்(து)அருள் கொங்கைஅமு(து)
உண்டருள் கந்தனை அம்சம ராபுரி
ஒண்குமு ரேசனையே.

**குறிப்புரை** : எண்திசையோர்= ( கிழக்கிலிருந்து வலமாக ) இந்திரன்,அக்கினி, இயமன், நிருதி, வருணன்,வாயு, குபேரன், ஈசானன்ஆகிய காவலர். எண்வசு= அநலன், அநிலன், ஆபன், சோமன், தரன் துருவன், பிரத்யூடன், பிரபாசன் ஆகிய எண்மர். வயிரவர் எண்மர்= மகா வைரவர், உக்கிர வைரவர், சண்டாள வைரவர், குரோதன வைரவர், காபால வைரவர், பீடண வைரவர், சாகர வைரவர், மருத்துவர்= அசுவனிதேவர்கள். பதினோரு உருத்திரர்கள்: மாதேவன், அரன்(சிதன்), உருத்திரன், சங்கரன், நீலலோகிதன், ஈசானன், விசயன், வீமதேவன், பவோற்பவன், காபாலி, சௌமியன். ஈராறு சூரியர்= பன்னிரு சூரியர்= தாத்ரு, சக்கரன், அரியமன், மித்திரன், வருணன், அஞ்சுமான், இரண்யன், பகன், திவச்சுவான், பூடன், சவித்ரு, துவட்டன். அண்டர்= தேவர்கள். அலர்ந்த சரோருகமேல் அந்தணர்= நான்முகன். ஏழுமங்கையர்= பிராமி, சாமுண்டி, நாராயணி, மகேஸ்வரி, கௌமாரி, வராகி, இந்திராணி. சோமன்= சந்திரன். தழைந்திட= மிக. குறங்கு= தொடை - மடி.

**பொழிப்புரை** : தண்டை, சிறந்த சதங்கை, மிக்க ஒளியுடைய கிண்கிணி ஆகியன தாமரைமலர் ஒத்த இருதிருவடித்தாமரைகளில் சிறப்புடன் ஒலிக்கவந்து, உமையவளாகிய தாய்கொஞ்ச மடியில் இருந்து, மகிழ்வுடன் தாய்ப்பால் குடித்த முருகப்பிரானை; அழகியதிருப்போரூரில் எழுந்தருளியுள்ள ஞானஒளிபரப்பும் குமரேசனை;

எண்திசைப்பாலர், வசுக்கள் எண்மர், வயிரவர் எண்மர், மருத்துவர் இருவர், ஈரிரு மூவர் ஓரொரு பதின்மர், பன்னிரு சூரியர், தேவர்கள், நான்முகன், ஏழு மாதர்கள், சந்திரன் ஆகியோர் வந்துகண்டு அருள்புரிவார்கள். ( 10 )

## 2. செங்கீரைப் பருவம்

( குழந்தை ஒருகாலைநீட்டி, ஒருகாலை மடக்கி, இருகைகளையும் நிலத்திலூன்றித் தலைநிமிர்ந்து முகமசைய ஆடும்பருவம். இது ஐந்தாம் மாதநிகழ்ச்சி )

மும்மை உல(கு)எங்கும் பரந்(து)ஒளி பரப்பிடும்
முதற்பரை எடுத்(து)அணைத்து
மூதருள் புனிதநீர் நிறையஆட் டிப்பெருமை
மொய்த்தநித் தியஆடையால்
மெய்ம்முழுதும் ஒத்திஇரு வே(று)அற்ற அத்துவித
வெண்ணீ(று) அணிந்துமிளிரும்
வீறுபூ ரணநிலப் பொட்டுமிட் டுப்பெரிய
மெய்ஞ்ஞான தீபதட்டால்
அம்மருவும் ஆலத்தி சுற்றிமற்(று) இச்சையுடன்
ஆனஞா னம்கிரியைஎன்(று)
அருள்செவிலி யாயரங்(கு) அருகில்உற ஆறா(று)
அகன்றசிவ வாரியில்எழும்
செம்மைஆர் அமுதம்பு கட்டவள ரும்குழவி
செங்கீரை ஆடியருளே
திமிரமலம் அகலவரு குமரசர வணமுருக
செங்கீரை ஆடியருளே.

**குறிப்புரை** : மும்மை= மூன்று. முதற்பரை= முதன்மையான பராசத்தி. மூதருள்= முதிர்ந்த. மொய்த்த= செறிந்த. இருவேறற்ற அத்துவித வெண்ணீறு= இரண்டல்லாத - சத்திக்குரியது சிவத்திற்குரியது என்று பிரித்துக்கூறவியலாத திருவெண்ணீறு பூசி. வீறு பூரணம்= பெருமைபொருந்தப் பொலியும். தீபதட்டு= தீபாராதனைத் தட்டு. அம்= அழகு. அருள் செவிலியாய் அருளும் செவிலித்தாயாக. அரங்கு= அந்தரங்கம்.

இடம் ஆறாறு அகன்ற சிவவாரி= முப்பத்தாறு தத்துவமும் நீங்கிய சுத்த சிவானந்தமாகிய கடல். திமிர மலம்= இருள் மலம் - ஆணவமலம்.

**பொழிப்புரை** : மூன்றுஉலகமெங்கும் பரவி ஒளிபரப்பும் முதன்மையான பராசத்தி; குழந்தையைத் தூக்கி, மார்போடணைத்து நாடோறும் முதிர்ந்த அருளாகிய புனிதநீரினால் மிகநீராட்டி, பெருமைநிறைந்த ஆடையால் உடல்முழுதும்உள்ள நீரினை ஒற்றியெடுத்து, சத்திக்குரியது சிவத்திற்குரியது என்ற வேறுபாடில்லாத திருவெண்ணீறு பூசி, பெருமை பொருந்தப் பொலிவு உடைய நிலப்பொட்டு - மண்பொட்டு இட்டு, பெரிய மெய்ஞ்ஞானம்ஆகிய தீபமுள்ள தட்டினால் அழகுபொருந்திய ஆரத்திசுற்றி, இச்சை ஞானம் கிரியை என்ற அருள்வடிவான செவிலியாக அந்தரங்கமான இடம்சென்று, முப்பத்தாறு தத்துவங்கள் நீங்கிய சுத்த சிவானந்தமாகிய கடலில்தோன்றிய பாலமுதம் புகட்டவளரும் குழந்தையே! செங்கீரை ஆடியருள்க. இருள்மலமாகிய ஆணவமலம் நீங்கவரு குமரனே! சரவணனே! முருகனே! செங்கீரை ஆடியருள்க. ( 1 )

( 13 ) அஞ்(சு)அக் கரப்பரத் தொட்டிலில் சதுர்வேதம்
ஆனவடம் ஒருநாலையும்
ஆதியுடன் இச்சைஞா னம்கிரியை நாமம்உற்(று)
அருள்வளர்ந்(து) ஒளிர்சத்திகள்
தஞ்சக் கரம்கொடு பிடித்(து)அங்(கு) அசைத்திடத்
தகுபரையும் ஆதிசிவனும்
தான்உளம் மகிழ்ந்துறச் சோமனென ஒளிபொழி
தவளயா னைக்கடவுளும்
விஞ்சக் கரம்புனையும் முதல்வர்பதி னொருவரும்
விபுதர்களும் அரிபிரமரும்
வேணிமுனி வரரும்அருள் ஞானமுனி வரர்ஆதி
வியன்உலக ரும்பரவவே
செஞ்சக் கரப்பரிதி எனநிலவு போரூர
செங்கீரை ஆடியருளே
திமிரமலம் அகலவரு குமரசர வணமுருக
செங்கீரை ஆடியருளே.

**குறிப்புரை** : பரஅஞ்சு அக்கரம்= மேலான திருவைந்தெழுத்து. வடம்= கயிறு. ஆதியுடன்= முற்கூறிய தொட்டிலுடன். தஞ்சக்கரம்= பற்றுக்கோடாப் பிடித்து. அசைத்திட= ஆட்ட. தகு மகிழ்ந்து உற= தக்கவாறு மகிழ. சோமன்= நிலவு. தவள யானைக்கடவுள்= வெள்ளையானக்குரிய இந்திரன். விஞ்சக் கரம்புனையும்= அதிகமான கரங்களுடைய. முதல்வர் பதினொருவர்= பதினொரு உருத்திரர். விபுதர்=தேவர்கள். அரி பிரமர்= திருமால் நான்முகன். வேணி= சடை. வியன் உலகர்= அகன்ற இவ்வுலகவர். செஞ்சக்கரப் பரிதி= செந்நிறமுடைய வட்டவமான சூரியன். நிலவு= விளங்கும்.

**பொழிப்புரை** : மேலான திருவைந்தெழுத்தாகிய தொட்டிலைப்பிணைத்த நால்வேதங்கள்ஆகிய கயிறுகளைத் தொட்டிலுடன்கைகளால் பற்றிக்கொண்டு முழுமையான அருள்வளர்ந்து ஒளிரும் இச்சை ஞானம் கிரியை என்ற பெயருடைய சத்திகள்ஆட்ட, பராசத்தியும் ஆதிசிவனும் மனம்மகிழ, நிலவுபோல் ஒளிபொழியும் ஐராவதயானக்குரிய இந்திரனும், மிக்க கைகளுடைய முதல்வர்களாகிய பதினொரு உருத்திரர், தேவர்கள், திருமால், நான்முகன், சடைஉடைய முனிவர்கள், அருள்மிக்க ஞானமுனிவர்கள் முதலிய இவ்வகன்ற உலகவரும் பரவ, செம்மையான வட்டவடிவமுடைய சூரியனாக ஒளிபொழியும் திருப்போரூரனே! செங்கீரை ஆடியருள்க. இருள்மலமாகிய ஆணவமலம் நீங்கவரு குமரனே! சரவணனே! முருகனே! செங்கீரை ஆடியருள்க. ( 2 )

( 14 ) குஞ்சிமுடி உற்றசெஞ் சுடிகைஆ டச்செவிகொள்
கோலக்கு தம்பைஆடக்
குமுதம்என அமு(து)ஒழுகும் இதழ்கள்ஆ டக்கரம்
கொண்டபொற் றொடிகள்ஆடக்
கஞ்சமல ரைப்பொருவு நயனம்ஆ டக்கடி

தடத்(து)அசை வடங்கள்ஆட
கருதரிய முத்திஇன்(பு) உதவுசீ றடிமருவு
கனகநல் தண்டைஆட
அஞ்சுவடி வத்(து)அசுரர் திண்டாட அரிபிரமர்
ஆதிசுரர் கொண்டாடநீள்
அகிலசர அசரங்கள் நின்(று)ஆட எண்திசையோ(டு)
அண்டபகி ரண்டம்ஆடச்
செஞ்சர வணப்பொய்கை மஞ்சமிசை நிலவும்இறை
செங்கீரை ஆடியருளே
திமிலமலம் அகலவரு குமரசர வணமுருக
செங்கீரை ஆடியருளே.

**குறிப்புரை** : குஞ்சிமுடி உற்ற= தலைஉச்சியில் அமைத்த, செஞ்சுடிகை= அழகிய உச்சிப்பூ. குதம்பை= காதணி. இதழ்கள்= உதடுகள். கஞ்சமலர்= தாமரைமலர். அசைகடிதடம்= அசையும் பாலுறுப்பு. வடம்= அரைஞாண், சலங்கை முதலியன. அண்டம் பகிரண்டம்= அண்டமும் அண்டவெளியும். மஞ்சம்= இருக்கை.

**பொழிப்புரை** : தலை உச்சியில் அமைத்த அழகியஉச்சிப்பூ, காதில்அணிந்த காதணி, அமுதம் ஒழுகும் செங்குமுதமலர் போன்ற உதடு, கையில் அணிந்த பொன்வளையல்கள், தாமரைமலர் போன்ற கண்இமைகள், பாலுறுப்புக்குமேல் இடுப்பில் கட்டிய அரைஞாண் சலங்கை, எண்ணவும் இயலாத முத்தி இன்பம்அருளும் சிறந்ததிருவடிகளில் அணிந்ததண்டை முதலியன ஆடவும்; பிறர் அஞ்சும்வடிவமுடைய அசுரர்திண்டாட, திருமால் நான்முகன் முதலிய தேவர்கள் கொண்டாட, பெரிய உலகிலுள்ள இயங்குதிணை நிலைத்திணைப்பொருள்கள், எட்டுத்திசை, அண்டம் அண்டவெளி ஆகிய அனைத்தும் ஆட; சரவணப் பொய்கையில்சிறந்த இருக்கையில் விளங்கும் முருகப் பெருமானே செங்கீரை ஆடியருள்க. இருள்மலம் ஆகியஆணவமலம் நீங்கவரு குமரனே! சரவணனே! முருகனே! செங்கீரை ஆடியருள்க.

**இலக்கணக்குறிப்பு** : கடிதடம் - இடவாகுபெயர். திமிரமலம் - உருவகம். ( 3 )

( 15 ) ஐந்தொழிலும் என(து)இவைகள் ஆகும்சிருட்டிமுதல்
ஆனமுத் தொழில்சடத்தும்
அறிவிடத்(து) ஓரிரண் டும்வினைக்(கு) ஈடாய்
அவற்றைஉயிர் அறியாமையால்
முந்திவரு தன்னையும் பிறரையும் கருதிநனி
முதிர்விழைவு வெகுளிமருவி
முன்னுசுக துன்பங்கள் மன்னிஇரு வினைமேவி
மூடப்பி றப்பில்ஆழும்
பந்தம்உறும் உயிர்சுதந் திரம்இலி சடம்பாசம்
ஆனகரு விகள்முழுதுமே
பகருமற்(று) அவைநடத் திடும்ஒருவன் நான்இவை
பகுத்(து)உன் சுதந்திரம்அறச்
சிந்தனசெய் பந்தம்அறும் என்(று)எனக்(கு) அருள்குரவ
செங்கீரை ஆடியருளே
திமிரமலம் அகலவரு குமரசர வணமுருக
செங்கீரை ஆடியருளே.

**குறிப்புரை** : ஐந்தொழில்= படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல். முத்தொழில்கள்= படைத்தல், காத்தல் அழித்தல். சடம்= உயிரற்றவை. அறிவு= உயிருடையவை. இரண்டு= மறைத்தல் அருளல். வினைக்கு ஈடாய்= இருவினைகட்குச் சமமாக. முந்திவரு= முதன்மையான. முதிர்= முதிர்ந்த. விழைவு வெகுளி மருவி= விருப்பு கோபம். கொண்டு. முன்னு= நினைக்கும். மன்னி= நிலைபெற்று. இருவினை மேவி= புண்ணியம் பாவம்செய்து. மூடம்= மயக்கம். பந்தம்உறுஉயிர்= மலவயப்பட்ட உயிர். சடம். பாசம் ஆன கருவிகள் இரண்டு= பாசமாகிய புறக்கருவி அகக்கருவி ஆகிய இரண்டும். பகரும் மற்றவை ஒருவனால் சுதந்திரம் இன்றி நடத்திடும்= புண்ணியச் பாவச்செயல்களை

உயிர்சுதந்திரமின்றி வேறுஒருவனால் செய்யும். பகுத்துச் சிந்தனை செய். பந்தம் அறும்= மலக்கட்டுகள் ஒழியும்.

**பொழிப்புரை** : படைத்தல் காத்தல் அழித்தல் மறைத்தல் அருளல் என்றஇந்த ஐந்தொழிலில், படைத்தல் முதலிய மூன்றையும் - அறிவில்லாத - உயிரற்ற பொருள்களிடத்தும், மறைத்தல் அருளல் ஆகிய இரண்டையும் அறிவுடைய - உயிருள்ள பொருள்களிடத்தும் அவற்றின் வினைக்கு ஒப்பாக நடத்துவதை உயிர்கள் அறியாத காரணத்தால், அதற்கு உரியவர்களாகப் பழங்காலம்முதல் வரும் உயிர் தன்னையும் மற்றவரையும்நினைத்து, நன்குமுதிர்ந்த விருப்பு, கோபமாகியவற்றில் நிலைத்து நின்று வினைசெய்து, மயக்கம்தரும் பிறப்புகளில் மூழ்கும். மலத்தால் கட்டப்பட்ட சுதந்திரம் இல்லாத சடம் என்றும். பாசமாகிய கருவிகளின் மூலம் முன்சொன்னவாறு செயற்படுகிறவன் "நான்" என்னுமுயிர் என்றும்; இவற்றைப் பகுத்துப்பார்த்து உன்சுதந்திரம் இன்றிச்சிந்தித்துப்பார், இங்ஙனம் சிந்தித்தால் மலக்கட்டுகள் அறும் என்றும் எனக்கு அருளிய குருவே! செங்கீரை ஆடியருள்க. இருள்மலமாகிய ஆணவமலம் நீங்கவரும் குமரனே! சரவணனே! முருகனே! செங்கீரை ஆடியருள்க. ( 4 )

( 16 ) காம விடத்தால் மாமயல் கொண்டே நொந்தேனைக்
காருண் யத்தால் வாஎன வந்(து)ஆள் தந்தோனே
தீமை இழைத்(து)ஏழ் வாரிதி சென்றே நின்றேனை
சீர்அருள் பெற்றார் ஆர்கரை தந்(து)ஆள் எம்கோவே
மாமலம் உற்றே தோம்உறு நெஞ்சேன் உய்ந்(து)ஆர
வாய்மொழி நற்றேன் நீமிசை இந்தா எனாஉம்
சேமநி திப்போ ரூர்இறை செங்கோ செங்கீரை
தேவர் தமக்(கு)ஓர் மாமணி செங்கோ செங்கீரை.

**குறிப்புரை** : மாமயல்= மிக்க மனமயக்கம். ஆள்தந்தோன்= அடிமைகொண்டவன். ஏழ்வாரிதி= ஏழுகடல். ஆர்= அனுபவிக்கும். தோம்= குற்றம். சேமநிதி= பாதுகாப்புக்கு வைத்த பெருஞ்செல்வம்.

**பொழிப்புரை** : காமம் ஆகிய நஞ்சினால் மிக்க மனமயக்கம்கொண்டு வருந்திய என்னை, என்னிடம் வாஎன்று கருணையால் அழைத்து அடிமையாக ஏற்றவனே! ஏழுகடல்அளவு தீமைகள் செய்த என்னை, உனதுசிறந்த அருளைப்பெற்று அனுபவிக்கின்றவர் வாழும் கரையினை - இடத்தை அருளிஆளும் எம்தலைவனே! மும்மலத்தால் குற்றம்செய்த மனமுடைய நான் ஈடேறி இன்புற உனது அருள்மொழியாம் தேனினை, நீ இவ்வுலகில் இதோ பெற்றுக்கொள் என்று கொடுக்கும் சேமநிதியாகிய திருப்போரூர் இறைவனே! செங்கீரை ஆடியருள்க. தேவர்களுக்கெல்லாம் ஒப்பற்ற பெருமணியே! செங்கீரை ஆடியருள்க.

( 17 ) கள(வு)அறு ஞானிகள் உளமலர் மீதில் எழுந்(து)ஊ றும்தேனே
கடையனை மேவிய மலம்அற ஒர்குரு என்றே வந்தோனே
அள(வு)அறு சூரியர் எனமயில் ஏறி உவந்(து)ஊ ரும்கோவே
அகமுக மாய்ஒரு சுழிமுனை சேர்பவர் அங்(கு)ஏ யும்தேவே
இளநில வாள்நகை உறுகுற மாதை இயைந்(து)ஆ ளும்தோளா
எழில்அடி யார்முதல் அனைவரு மேநசை கொண்(டு)ஆ ரும்தாளா
தெளி(வு)உற வேஎன(து) அகம்நிறை பேரொளி செங்கோ செங்கீரை
திகழ்சம ராபுரி முருகச டானன செங்கோ செங்கீரை.

**குறிப்புரை** : களவு= வஞ்சனை. ஓர்= ஒப்பற்ற. ஊரும்= ஏறிவரும். ஏயும்= பொருந்தும். இயைந்து= கூடி. நசை= விருப்பம். ஆரும்= இன்புறும். சடானன= ஆறுமுகனே.

**பொழிப்புரை** : வஞ்சனை இல்லாத ஞானிகளின் மனமாகிய தாமரையில் தோன்றியூறுகிற தேனே! கீழான என்னைப்பொருந்திய மும்மலம் ஒழிய ஒப்பற்ற குருவாக வந்தவனே! எண்ணற்ற சூரியர்கள்போல் மயில்மேல் ஏறிவரும் அரசனே! மனதால் சுழுமுனையை நினைப்பவர்க்கு அவ்விடத்தில் பொருந்தும் தெய்வமே! பிறைபோன்ற - கூரிய ஒளிபொருந்திய பற்களுடைய வள்ளிநாயகியைக்கூடி ஆளும் தோள்களுடையவனே! அடியவர்முதல் அனைவரும் விருப்புடன் கொண்டாடும் அழகிய திருவடியனே! என்னுள்ளம் தெளிவுபெற நிறைந்த பேரொளியே! செங்கோ செங்கீரை. அருள்விளங்கும் திருப்போரூர் முருகனே! ஆறுமுகவனே! செங்கோ செங்கீரை. ( 6 )

( 18 ) மகபதி சக்கிரி மலர்அயன் நத்திய வண்சே ரும்காவே
மலம்அறும் முத்தர்கள் எனும்அளி சுற்றிய தண்சூ ழும்பூவே
இகலறு மெய்த்தவம் முழுவதும் உற்றவர் எண்கூ ரும்பேறே
எழில்அருள் பெற்(று)உயிர் மயில்கள் களிக்கஎ ழுந்(து)ஊ ரும்காரே
ககனசு ரர்க்(கு)ஒரு துணைஎன நெட்(டு)அயில் கொண்டே நின்றோனே
கடவுள் மடப்பிடி தனஇணை தைத்(து)ஒளிர் திண்தோள் மொய்ம்போனே
திகழ்மதி ஒத்(து)ஒளிர் சமரபு ரிக்(கு)இறை செங்கோ செங்கீரை
செறிதய(வு) உற்றவர் இதயபு ரிக்குக செங்கோ செங்கீரை.

**குறிப்புரை** : மகபதி சக்கிரி= இந்திரனாகிய அரசன். மலர் அயன்= தாமரைமலரிலிருக்கும் நான்முகன். சேரும் வண்கா= அடையும் வளமான சோலையே. அளி= வண்டு. இகல் அறு= பகையுணர்வு இல்லாத. எண்கூரும்= மிகநினைக்கும். உயிர்மயில்= உயிர்களாகிய மயில்கள். கார்= மேகம். ககன சுரர்- வானுலகத் தேவர். நெட்டு அயில்= நீண்டவேல். கடவுள் மடப்பிடி= தெய்வயானையம்மை. மொய்ம்போன்= வலியவன். தயவு செறியுற்றவர்= கருணை செறிந்தவர்.

**பொழிப்புரை** : தேவேந்திரனாகிய அரசனும், தாமரை மலரில் இருக்கும் நான்முகனும் விரும்பிய வளம்பொருந்திய சோலையே! மும்மலமில்லாத முத்தர்களாகிய வண்டுகள் சூழ்ந்துள்ள தண்ணிய மலரே! பகையுணர்வில்லாத மெய்யான தவம்முழுவதும் அடைந்தவர் மிகவும்நினைக்கும் பேறுடையவனே! அழகிய அருள்பெற்ற உயிர்களாகிய மயில்கள்மகிழ எழுந்துவரும் கார்மேகமே! வானுலகத்தேவர்களுக்குத் துணையாக நீண்ட வேலேந்தி அசுரருடன் போரிட்டவனே! தெய்வயானையம்மையின் இரு கொங்கைகளும் தைத்ததால் ஒளிரும் வலியதோள்களுடைய ஆற்றல் மிக்கவனே! நிலவுபோல் அருள்ஒளிரும் திருப்போரூரில் எழுந்தருளியுள்ள இறைவனே! செங்கோ செங்கீரை. கருணைசெறிந்தவர் இதயத்தலத்தில் உள்ளவனே! செங்கோ செங்கீரை. ( 7 )

( 19 ) குவளைப் பிழிசெங் குமுதப் பிழிகோ கனகப் பிழிகூடிக்
கோதறு சேதகம் ஆகிக் கூனல் கொழுஉழு சீதைதொறும்
தவளத் தரளத் தொடுபிழி ஊரல்த தும்பக் கடைசியர்தம்
தண்ணகை யொடும்இதழ் ஊறலொ டும்சம னாம்என உள்சினவிப்
பவளக் கடிகைப் பேரணி சரிதிகழ் பங்கய மென்கையால்
பனிலத் தவளத் திரளைத் திடரில் பழனக் கரைதரவே
திவள்உற் றிடுதுண் டீரநன் னாடா செங்கோ செங்கீரை
சீரூர் போரூர் வீரம யூர செங்கோ செங்கீரை.

**குறிப்புரை** : பிழி= தேன். கோனகம்= தாமரை. சேதகம்= சேறு. சீதை= உழுபடைச்சால். தவளத் தரளம்= ஒளிரும் முத்து. ஊரல்= ஈரம். தண்ணகை= இன்பம்தரும் முறுவல். இதழ் ஊரல்= வாயிதழில் ஊறும் தேன். சமனாம்= ஒக்கும். உள் சினவி= மனத்தில் சினந்து. பவளக்கடிகை= பவளத்தாலான தோள்வளை. சரி= கைவளை. தவளப் பனிலத்திரள்= ஒளிரும் சங்குகளில் உள்ள முத்துத்திரள். பழனத் திடரில் கரைதர= நன்செய்நில மேட்டுக்கரையில் சேர்க்க. திவள் உற்றிடு= விளங்கும். துண்டீர= துண்டீரன் ஆண்ட.

**பொழிப்புரை** : குவளைமலர், சங்குமுதமலர், தாமரைமலர் ஆகியவற்றின் தேன் ஒன்றுசேர்ந்து குற்றமற்ற சேறாக்கி, ஏரின்வளைந்த கொழுவால் உழும்பொழுது அமையும் உழுபடைச்சால்கள்தோறும் ஒளிபொருந்திய முத்துகளுடன் தேனின் ஈரம்மிக, அது உழத்தியரினின் இன்பம்தரும் முறுவலுடன் வாயிதழில்சுரக்கும் ஊரலைஒக்கும் என்று மனத்தில் சினந்து, பவளத்தாலான தோள்வளையுடன் கூட்டமாகக் கைவளையல்விளங்கும் தாமரை ஒத்தமென்மையான கையால், சங்குடன்கூடிய முத்துக் கூட்டத்தை, நன்செய்நில மேட்டுப்பகுதியாகிய கரையில் சேர்ப்பர். இவ்வாறு விளங்கும்துண்டீரன் என்றஅரசன்ஆண்ட வளமான நாட்டுக்குரியவனே! செங்கோ செங்கீரை. சிறந்த ஊராகிய திருப்போரூரில் மயில் ஊர்தியில் வீரம்மிக்கவனாய் விளங்குகிறவனே! செங்கோ செங்கீரை.

**இலக்கணக் குறிப்பு** : பிழி - காரணப்பெயர். இச்செய்யுள் உவமைத் தற்குறிப்பேற்றவணி. ( 8 )

( 20 ) புள்ளும் கிளியும் மயிலும் குயிலும் பொன்அம் சிறைஅனமும்
பொருகோ டரமும் கரியும் திரியும் பொங்கர்ப் புதுமலர்வாய்க்

கள்ளும் விள்ளும் இறால்இழி பிழியும் கனிவகை யின்சாறும்
காலாய் மடுவாய் ஆறாய் ஓடிக் கடல்புக எதிர்ஏறித்
துள்ளும் மகரம் புயலின(து) அகடு துணித்துச் சலம்மேவிச்
சுடர்வான் மகரம் சாடிக் கங்கை துளைந்துத் திரும்பிவரும்
தெள்ளும் வளம்உள தொண்டைநன் னாட செங்கோ செங்கீரை
சீரூர் போரூர் வீரம யூர செங்கோ செங்கீரை.

**குறிப்புரை** : புள்= வண்டு. பொன் அம்= ஒளியும் அழகும். அனம்= அன்னப்பறவை. பொரு கோடரம்= ஒன்றுடன் ஒன்றுபோரிடும்குரங்கு. புதுமலர்ப் பொங்கர்= புதுப்பூக்களுடைய சோலை. கள்= தேன். இறால்= தேனடை. மடு= ஆழமான இடம். எதிர்ஏறி= எதிர்த்து வந்து. மகரம்= மீன். புயலினது அகடு= மேகத்தின் வயிறு. . துணித்து= வெட்டி - துளைத்து, சலம்மேவி= கங்கையை அடைந்து. துளைந்து= அனுபவித்து. வான்மகரம் சாடி= கங்கையின் மீனை மோதி. தெள்ளும்வளம்= தெளிந்த வளமை.

**பொழிப்புரை** : வண்டும், கிளி, மயில், குயில், ஒளியும்அழகும் சிறகுமுடைய அன்னம், ஒன்றுடனொன்று சண்டையிடும் குரங்கு, யானை ஆகியன திரியும், புதுப்பூக்களுடைய சோலையில் பெருகியதேனும், விண்ட தேனடையிலிருந்து இறங்கும் தேனும், கனிவகைகளின் சாறும் வாய்க்காலாகிக் கூடி மடுவாகிப், பின் ஆறாகஓடிக் கடலில் கலக்க, அவ்வாற்றினை எதிர்த்துநீந்தித் துள்ளும் மீன் மேகத்தின் வயிற்றைப் பிளந்து, ஒளிரும் வானத்துக் கங்கையை அடைந்து, அந்நீரினை அனுபவித்து, அதிலுள்ள மீன்களுடன் மோதித் திரும்பிவரும் தெளிந்த வளமுடைய தொண்டை நாட்டவனே! செங்கோ செங்கீரை. சிறந்தஊராகிய திருப்போரூரில் மயிலூர்தியில் வீரம்மிக்கவனாய் விளங்குகிறவனே! செங்கோ செங்கீரை.

**இலக்கணக்குறிப்பு** : புள்ளும்.......கரியும்; கள்ளும் பிழியும் சாறும் - எண்ணும்மைகள். இச்செய்யுள் உயர்வு நவிற்சியணி. ( 9 )

( 21 ) ஓதிம சாலம் மேதிஇ னங்கள் உழக்கப் பேரேரி
ஒள்ளிய கமலப் பள்ளியை விண்(டு)அங்(கு) உயர்தண் டலைஏறத்
தா(து)அவிழ் தண்டலை ஞிமிறுகள் விரைசெறி தடமலர் மீ(து)ஏறத்
தடம்நீ ராடிய மடவார் வெருவித் தண்நதி நீர்ஏற
கோ(து)அறு நதிஉறை வாளைகள் தாவிக் குளிர்வயல் மடைஏறக்
குலவிய மடைதவழ் குடவளை பதறிக் கொழுவிய கமு(கு)ஏறத்
தீ(து)அற ஒளிர்தரு தொண்டைநன் னாட செங்கோ செங்கீரை
சீரூர் போரூர் வீரம யூர செங்கோ செங்கீரை.

**குறிப்புரை** : ஓதிமசாலம்= அன்னப்பறவைக் கூட்டம். மேதி= எருமை. உழக்க= கலக்க. பேரேரி= பெரிய ஏரி. பள்ளி= இருப்பிடம். விண்டு= வெளியேறி. உயர்தண்டலை= உயரமானமரங்களுடைய சோலை. ஞிமிறு= வண்டு. தடமலர்= குளத்துமலர். தடம்= குளம். குடவளை= பருமனான சங்கு.

**பொழிப்புரை** : எருமை இனம் பெரிய ஏரியைக் கலக்கியதால், அங்கிருந்த அன்னப்பறவைக் கூட்டம் ஒளிபொருந்திய தாமரைகளைவிட்டு அருகில்இருந்த உயரமான மரங்களுடைய சோலைக்குச் செல்ல; தேன்சுரக்கும் அச்சோலை வண்டுகள் மணக்கும் குளத்து மலர்களுக்குச் செல்ல, குளத்தில் நீராடிய மகளிர் அஞ்சி நதியின் தண்ணிய நீருக்குச்செல்ல, நதியில்வாழும் குற்றமற்ற வாளைமீன்கள் தாவி வயலின் குளிர்ந்த மடைகளுக்குச்செல்ல, அம்மடையில் தவழும் பருத்த சங்குகள் பதறிப்போய்க் கொழுத்த பாக்குமரங்களுக்குச்சென்று ஏற; குற்றமற்றுஒளிரும் தொண்டநன்னாடனே! செங்கீரை ஆடியருள்க. சிறந்த ஊராகியபோரூரில் மயிலூர்தியில் வீரம்மிக்கவனாய் விளங்குகிறவனே! செங்கீரை ஆடியருள்க.

**இலக்கணக்குறிப்பு** : இச்செய்யுள் ஏதுவணி. ( ஏது= காரணம் )

## 3. தாலப்பருவம்

( தால்= நாக்கு. நாவை அசைத்துப் பேசத்தூண்டுவது. இது ஏழாம் மாதநிகழ்ச்சி )

( 22 ) கறையின்(று) ஒளிரும் மதிமுகத்துக் கரும்(பு)அன் னாரும் ஆடவரும்
கலவித் தேறல் அயின்(று)அயின்று களித்துத் தருக்கி விளையாடும்

நிறையும் சோமத் சிலைத்தகடு நிரப்பிக் குலிசத் தூண்நிறுத்து
நிலைகொண்(டு) அரிய நவமணிகள் நிறையும் மாழைத் தசும்புநிரைப்
பொறைகொண்(டு) இலகும் பலமாடப் புனிதக் கொடிகள் கற்பகப்பூங்
பொங்கர்க் குறுந்தாள் நறுமுகையில் புடைக்கும் தோறும் மடல் அவிழ்ந்து
தறையில் நறுந்தேன் பெருக்(கு)ஊற்றும் சமர புரியாய் தாலேலோ
தமரக் கடலைக் கடைந்(து)அமுதம் தருவோன் மருகா தாலேலோ.

**குறிப்புரை** : கறை= களங்கம. கரும்பு அன்னார்= இனியமாதர். தேறல்= தேன். சோமத் தகடு= சந்திரகாந்தக்கல். குலிசத்தூண்= வைரத்தூண். மாழைத்தசும்பு= பொற்குடம். பொறை= தாங்கி. பொங்கர்= சோலை குறுந்தாள்= குட்டையான காம்பு. முகை= மொட்டு. தறையில்= நிலத்தில். பெருக்குஊற்று= பெருகிய தேனினூற்று. கடல்= பாற்கடல். தருவோன்= தந்த திருமால்.

**பொழிப்புரை** : முயல் - களங்கம் இல்லாமல் ஒளிவீசும் நிலவுபோன்ற முகமும் கரும்பு ஒத்த இன்சொல்லுமுடைய மகளிரும், ஆடவரும் புணர்ச்சித்தேன் தொடர்ந்து பருகி மகிழ்ந்து, செருக்கி விளையாடக்கூடிய, சந்திரகாந்தக்கல் பரப்பி, வைரத்தூண்நிறுத்தி, அரிய நவமணிகள் நிரப்பிய பொற்குடங்களை நிலையாக, வரிசையாக நிறைத்து விளங்கும் பலமாடங்களில்பறக்கும் புனிதம்உணர்த்தும் கொடிகள்; தேவருலகக் கற்பகமரச் சோலையில் உள்ள குட்டையான காம்பினைக்கொண்டு மணக்கும் மொட்டுகளில் மோதும்போதெல்லாம் அம்மொட்டுகள் மலர்ந்து நிலத்தில் மணம்மிக்க தேன்பெருக்கை ஊற்றக்கூடிய திருப்போரூரனே! தாலோ தாலேலோ. முழங்கும் பாற்கடலினைக் கடைந்து அமுதம்தந்த திருமால் மருமகனே! தாலே தாலேலோ.

**இலக்கணக்குறிப்பு** : தறை - எதுகைநோக்கியசெய்யுள்விகாரம். தருவோன் - வினையாலணையும் பெயர். ( 1 )

( 23 ) மகரப் பரவை அளறுபட மாயைத் திறம்ஆர் கிரவுஞ்ச வயமால்
வரைசெந் தூளிஎழ மதமா முகத்துச் சினத்(து)அவுணன்
அகலக் குலிச வரைதகர அரிமா முகப்பே ராயிரம்வாய்
அம்சோ ரிகள்நின்(று) அலைஎறிய அண்ட கூடத் தொடும்சூதம்
இகல்அற்(று) அலறி விழஅசுரர் எவரும் பதறிக் குடியோட
இலங்கும் அமரர் கலங்காமல் எழில்வான் உலகம் குடியேறத்
தகமை சுடர்நெட் டிலைவடிவேல் தடக்கை எடுத்தோய் தாலேலோ
தமரக் கடலைக் கடைந்(து)அமுதம் தருவோன் மருகா தாலேலோ.

**குறிப்புரை** : பரவை= கடல். வயமால்வரை= வலிமையான பெரியமலை. தூளி= தூள். மதமா முகம்= மதமுடைய யானைமுகம் - அவுணன் தாருகாசுரன். அகலம்குலிசவரை= மார்பாகிய வயிரமலை. அரிமாமுக= சிங்கமுகம். சோரி= இரத்தம்சூதம்= மாமரம் - சூரபத்மன். குடியோட= குடியழிய. தகமை= தகுதி. இலை= இலைவடிவான. வடி= கூரிய. தடக்கை= நீண்டகை.

**பொழிப்புரை** : மீன்களுடைய கடல்சேறாக, மாயையாக விளங்கிய கிரவுஞ்சம் என்னும் வலிய பெரியமலையின் நுண்ணிய தூள்பறக்க, மதமுடைய யானைமுகத்துச் சினமுடைய கஜமுகஅசுரனின் மார்புஆகிய வைரமலை பொடிபட, சிங்கமுகனின் பெரியஆயிரம் வாயிலிருந்து இரத்தம்வழிந்து அலைவீச, அண்டத்து எல்லையுடன் விளங்கிய சூரபத்மனாகிய மாமரம் ஆற்றலற்று அலறி விழ, அசுரர்அனைவரும் பதறிக் குடியுடன் அழிய, தேவர்கள் மனம்கலங்காமல் அழகு விளங்கும் வானுலகில் குடியேற, தகுதிவாய்ந்த நீண்ட இலைவடிவான கூரிய வேலேந்தியவனே! தாலோ தாலேலோ. முழங்கும் பாற்கடலினைக் கடைந்து அமுதம்தந்த திருமால் மருகனே! தாலோ தாலோ.

**விளக்கம்** : கஜமுகன், சிங்கமுகன், சூரபத்மன் மூவரும் முறையே மாயை, கன்மம். ஆணவம் இவற்றின் குறியீடுகள். வேலாகிய ஞானம், இவற்றையுடைய இம்மூவரையம் அழித்தமைகூறினார். ( 2 )

( 24 ) மூல நிலத்தில் அதோ முகமாய் முகிழ்த்து விழிஇன் பொடுதுயிலும்
மூரிப் பாம்பைக் கால்அனலைமூட்டி எழுப்பி நிலம்ஆறும்
சீல மொடும்போய்த் தரிசித்துச் செழுமா மதியின் அமுதகடல்
தேக்கி அகத்(து)அங்(கு) அசை(வு)அறுமோர் தெய்வத் தவத்தோர் உளவிழியில்

காலும் தீப மினல்பந்தங் கடிகூர் விறிசு கதிர்மதிபோல்
காட்டும் ஒளியாய் இவையாவும் கடந்(து)ஆங்(கு) அழிவில் பேரொளியாய்ச்
சால விளங்கும் விந்துவெனும் தடமா மயிலோய் தாலோ தாலேலோ
கடலைக் கடைந்(து)அமுதம் தருவோன் மருகா தாலே தாலேலோ.

**குறிப்புரை** : மூலநிலம்= மூலாதாரம். அதோமுகம்= கீழ்நோக்கிய முகம். விழி முகிழ்த்து= கண்ணை மூடிக்கொண்டு, மூரிப் பாம்பு= குண்டலி. கால்அனலை மூட்டி= பிராணவாயுவாகிய நெருப்பை. எழுப்பி நிலம். ஆறு= ஆறுஆதாரங்கள். உளவிழி= மனக்கண். காலும்= ஒளி கக்கும். விறிசு= தீப்பொறியுள்ள. விந்து= சுத்தமாயை. தட= பெரிய.

**பொழிப்புரை** : மூலாதாரத்தில் கீழ்நோக்கியவாறு கண்களை மூடிக்கொண்டு இன்பமுடன் உறங்கும்குண்டலினி சத்திக்குப் பிராணன் ஆகியவாயுவின்மூலம் அனலைமூட்டி எழுப்பி, ஆறுஆதாரங்களையும் அடைந்து உரியதெய்வங்களை வணங்கி, செழித்த முழுநிலவின் அமுதகடலினை உள்ளத்தில் தேக்கி, அவ்வுள்ளத்தில் அசைவின்றி நிலைத்த தெய்வத்தன்மை வாய்ந்ததவத்தினர் மனக்கண்ணில் ஒளிகக்கும் மின்னலாகவிளங்கி, தீப்பொறிமிக்க ஒளியுடைய நிலவுபோல் விளங்கும் ஒளியாக மிக்கு விளங்கும் விந்துவாகிய பெரியமயிலூர்தி உடையவனே! தாலோ தாலேலோ. பாற்கடலைக்கடைந்து அமுதம் தந்த திருமாலின் மருமகனே! தாலோ தாலேலோ.

**விளக்கம்** :

| ஆறு ஆதாரங்கள் : | இடம் | தெய்வம். |
|---|---|---|
| மூலாதாரம். | குதம்குறி இவற்றின்நடு. | விநாயகர் |
| சுவாதிட்டானம். | நாபிக்கும்குறிக்கும் நடு. | நான்முகன் |
| மணிபூரகம். | நாபி. | திருமால் |
| அனாகதம். | இதயம். | உருத்திரன். |
| விசுத்தி. | கண்டம். | மகேசன். |
| ஆக்ஞை. | புருவநடு. | சதாசிவம். |

( 4 )

( 25 ) காரார் திசைமலி போரார் களிறு கலங்கிப் பிளிறிடவே
கனக நிறத்துத் திருகு மருப்பில் கனிசின மொடுமோதிப்
பேரா யிரம்முடி உரகன் நெளிக்கப் பின்போய் முன்ஓடிப்
பேசறு வடவரை குலவரை திசைவரை பெயரும் படிதாவிப்
பார்சூழ் ஏழ்கடல் குமுறத் துள்ளிப் பனிவா னகம்மோதிப்
பகரறு கோளகை சாடிப் பீடுறு படிவரு தகருடையோய்
தாரார் பொழில்சூழ் போரூர் இறையே தாலோ தாலேலோ
சண்முக முக்கண் பண்ணவர் குருபர தாலோ தாலேலோ.

**குறிப்புரை** : கார் ஆர்= கரியநிறமுடைய. திசை= எண்திசை. மலிபோரார்= மிக்கபோரிடும். கனகநிறம்= பொன்னிறம். திருகு மருப்பு= திருகிய கொம்பு. கனி சினம்= கடுங்சினம். உரகன்= ஆதிசேடன். பின்போய் முன்ஓடிப்போய் மோதி= பின்னேபோய் பிறகு முன்னேறிவந்து மோதும். பனிவானகம்= குளிர்ந்த வானுலகம். பகரறு= எல்லை சொல்லவியலாத.. கோளகை= அண்டஉருண்டை, படி= நிலவுலகு. சாடி= குத்திக்கிழித்து. தகர்= ஆட்டுக்கடா. தார் = பூ - மலர். பண்ணவர்= இறைவன்- சிவபிரான்.

**பொழிப்புரை** : எண்திசைகளிலும் மிக்கபோரிடும் ஆண்யானைகள் மனம்கலங்கிப் பிளிறுமாறு, பொன்னிறமுடன் திருகியகொம்பினால் கடுஞ்சினத்துடன் மோதியும், புகழ்பெற்ற ஆயிரம்தலைகளுடை ஆதிசேடனாகியபாம்பு நெளியுமாறு முதலில் பின்னேசென்று உடனே முன்னேறி, அளவற்ற புகழுடைய மேருமலை, குலவரைகள், எண்திசை மலைகள் நிலைபெயருமாறு தாவிப்போய், உலகைச்சூழ்ந்த ஏழ்கடலும் குமுற, குளிர்ந்த வானுலகை மோதி, எல்லை கூறவியலாத அண்ட உருண்டை கிழியக்குத்திப் பூமிக்குப்பெருமையுற வரும் ஆட்டுகடாவை ஊர்தியாக உடையவனே! மலர்கள்மிக்க சோலைசூழ்ந்த திருப்போரூர் இறைவனே! தாலோ தாலேலோ. ஆறுமுகனே! முக்கண் இறைவனாகிய சிவபிரானுக்குக் குருவே! தாலோ தாலேலோ.

**விளக்கம்** : முருகன் ஏறி அடக்கியாண்டு செலுத்திய ஆட்டுக்கடாவின் வலிமையைக் கந்தபுராணம் தகர்ஏறு படலத்தில் காண்க. ( 5 )

( 26 ) அமரர் தமக்(கு)அன்(று) ஒருநாள் இரணிய அணிவட வரைமீதே

அறைதரு மும்மா யையினூ டுருவி அகண்டா காரமதாய்த்
திமிரம் அகற்றிய முச்சுட ருக்(கு)ஒளி செய்கா ரணஒளியாய்த்
திகழ்தரு புவன சராசரம் முழுதும் செறிபூ ரணவெளியாய்க்
கமையுறு மனவா சகமொடுகாயம் கண்(டு)அள விடஅருநின்
காட்சியை மாட்சிமை பெறமுன் காட்டிய கண்ணே யாவர்க்கும்
தமர்என நிலவிய சமரபு ராதிப தாலோ தாலேலோ
சண்முக முக்கண் பண்ணவர் குருபர தாலோ தாலேலோ.

**குறிப்புரை** : இரணிய அணிவட வரை= பொம்மயமான மேருமலை.. அகண்டாகாரம்= மிகப்பெரிய. திமிரம்= இருள். காரண ஒளி= மூலஒளி. முச்சுடர்= சூரியன் நிலவு அக்கினி. கமை= பொறுமை. காட்சி= அறிவு - ஞானம். தமர்= சுற்றம். அதிப= தலைவனே.

**பொழிப்புரை** : அன்றுஒருநாள் தேவர்கள் பொருட்டுப் பொன்மயமான மேருமலையில், புகழத் தக்கவாறு மும்மாயையில் ஊடுருவி, மிகப்பெரியதான இருளை அகற்றும் ஞாயிறு திங்கள் அக்கினி ஆகிய முச்சுடர்களுக்கும் ஒளிதரும்மூலஒளியாய்; விளங்கும் உலகிலுள்ள இயங்குதிணை நிலைத்திணை ஆகிய அனைத்திலும் வெளியாய்; பொறுமையுடனான மனம் சொல் உடல்ஆகியவற்றில் இருக்கும் அளவிடற்கரிய நின்ஞானநிலையில் நான்மாட்சிமைபெற வழிகாட்டிய என்கண்ணே! அனைவருக்கும் சுற்றத்தாராய் விளங்கும் திருப்போரூர்த் தலைவனே! தாலோ தாலேலோ. ஆறுமுகனே! முக்கண்களுடைய சிவபிரானாகிய இறைவனுக்குக் குருவாகிய மேலானவனே! தாலோ தாலேலோ. ( 5 )

( 27 ) கோளகை தடவிக் குடைபல நீடக் கொடிஎண் தசைமூடக்
கோதறு பேரணி சூரியர் மறையக் கொழுவிய வெயில்வீச
நீளிய சாமரை வீசப் பேரிகள் நீள்கடல் ஏழ்ஏழவே
நின்று முழங்கத் தெய்வத நகரில் நிரம்பும் அரம்பையர்தாம்
வேளை மருட்டும் விழித்தொழில் கைத்தொழில் வேறா காநடம்இட்டு
வரப்புயல் ஒத்தவன் முதலவர் மெய்ச்சிவர் அச்சுரர்கைத்
தாளம்அ(து) ஒத்தவெள் ளானையின் உற்றோய் தாலோ தாலேலோ
சண்முக முக்கண் பண்ணவர் குருபர தாலோ தாலேலோ.

**குறிப்புரை** : கோளகை=அண்ட உருண்டை. பேரி= பேரிகை. மெய்ச்சிவர்=சிவசாரூபத்தினர்.

**பொழிப்புரை** : தெய்வத்தன்மை விளங்கும் திருப்போரூரில்; அண்ட உருண்டையின் எல்லையைத் தொடும்குடைகள் பலவாக விளங்க, கொடிகள் எண்திசைகளையும் மறைக்க, அதனால் குற்றமற்ற - மிக்க - திரண்டசூரியர்கள் மறையவும், குடைகொடி ஆகியவை உலகிற்குமிக்க ஒளிவீசவும், நீண்ட வெண்சாமரைகள் இரட்டவும், பேரிகைகள் ஏழுபெரிய கடல்கள்போல் இடைவெளியின்றி முழங்கவும், அரம்பையர் வேலினை மருட்டும் விழிகள் கைகள் ஆகியன தம்முள் ஒத்துவிளங்குமாறு நடனமாடிவரவும், திருமால் முதலியவரும், சிவசாரூபம் பெற்றவர் முதலியவரும் தம்முள் ஒத்தவாறு கைத்தாளமிட, அயிராவணம் ஆகிய வெள்ளானையி.ல் வருகிறவனே! தாலோ தாலேலோ. ஆறுமுகமுடையவனே! முக்கண் இறையவனாகிய சிவபிரானுக்குக் குருவாகிய மேலானவனே! தாலோ தாலேலோ.

**விளக்கம்** : நடனத்தில் விழித்தொழில் கைத்தொழில் வேறாகாதல் கூடாது என்பதைக் " கைவழி நயனம் செல்ல " என்பர். மெய்ச்சிவராவார் சிவசாரூபர் - சிவனது உருவையே தன்னுருவாகப் பெற்றவர். இந்திரனுக்குரிய வெள்ளானை ஐராவதம், சிவபிரானுக்குரிய வெள்ளானை ஐராவணம். முருகன் சிவனேயாதலின் ஐராவணம் ஏறிவந்தான். " அயிவணம் ஏறாது ஆனேறு ஏறி " - என்று சிவபிரானைத் திருமுறை போற்றும். ( 6 )

( 28 ) தென்னங் காவைச் சூழப் பூகத் திரள்அவை புடைசூழத்
தேமா வினமற்(று) அவைபுடை சூழச் செறிதரு பலவின் இனம்
மின்னும் அவைபுடை சூழப் பெருவா ழைகா(டு) அவைசூழ்
மிளிர்கன் னற்கா(டு) அவைசூழப் புனல்மிகு நெற்ப ணைமருதம்

மன்னும் சூழப் பொன்னம் பூமியில் வானவர் வந்(து)இழிய
மலிசோ பானம் போலவி ளங்கிய வளனொடும் இளமாழைத்
தன்னம் திகழ்சா ரல்போ ரூர தாலோ தாலேலோ
சண்முக முக்கண் பண்ணவர் குருபர தாலோ தாலேலோ.

**குறிப்புரை :** பூகம்= பாக்கு. தேமா இனம்= இனிய மாமரஇனம். பணை மருதம்= பெருமைபொருந்திய நன்செய். மன்னும் சூழல்= நிலைத்த சூழ்நிலை. பொன்= சிறந்த. சோபானம்= படிமுறை. இள மாழை= இளமையான அழகு. தன்னம் - தண்ணம்= குளிர்ச்சி.

**பொழிப்புரை :** தென்னந்தோப்பினைப் பக்கத்தில் சூழ்ந்துள்ள பாக்குமரக்கூட்டத்தின் திரளும், அதனைச்சூழ்ந்துள்ள இனிய மாமரங்களும், அவற்றைச் சூழ்ந்துசெறிந்துள்ள பலாமரங்களும், அடுத்து ஒளிரும் உயரமான வாழைத்தோட்டமும், கரும்புத்தோட்டமும் சிறந்து விளங்கும் நீர்வளம் சூழ்ந்த மிக்கநெல்வயல்களும் பெற்ற பெருமைபொருந்திய அழகியவளமான திருப்போரூரில், தேவர்கள் வந்து விளையாடும் படிமுறையில் விளங்கும் சாரலுடைய திருப்போரூருக்கு உரியவனே! சிறந்த குளிர்ச்சிவிளங்கும் திருப்போரூரனே! தாலோ தாலேலோ, முக்கண்ணனாகிய சிவபிரானுக்குக் குருவான மேலானவனே! தாலோ தாலேலோ. ( 7 )

( 29 ) செங்கண் சிறுமின் ஒளிர்வன மேதிச் செழுமே கம்குழுமித்
திகழ்தரு வரைமிசை கனைகுர லொடும்தீம் பால்சொரி வெள்அருவி
வெங்கண் பணிமணி யின்குவை கழைமணி வெண்குவை பொங்(கு)ஒளிசேர்
வியன்நீ லக்குவை யொடுமுச் சங்கநல் வேணி எனும்படியே
துங்கப் பேரலை கொண்டு வரன்றித் துண்என்(று) இழிஒலியால்
துடிஅடி வரைமுழை தோறும் கண்படு சோலைச் சாரல்எலாம்
தங்கப் பொடியே மிளிர்போ ரூர தாலோ தாலேலோ
சண்முக முக்கண் பண்ணவர் குருபர தாலோ தாலேலோ.

**குறிப்புரை:** சிறுமின்= சிறிய விண்மீன். செங்கண் மேதி என்க. வெங்கண்= கொடிய பார்வை. பணி= பாம்பு. கழைமணி= மூங்கில் முத்து. நீலமணி= நீலநிற மணி. முச்சங்க நல்வேணி= திருவேணி சங்கமம். ( கங்கை யமுனை சரஸ்வதியின் கூடல் ) துங்கம்= பெருமை. வரன்றி= ஒதுக்கி. துண்= ஒலிக்குறிப்பு. துடிஅடி= யானை. முழை= குகை. கண்படு= உறங்கும். முக்கண்பண்ணவர்= முக்கண்ணனாகிய இறைவன் - சிவபிரான்.

**பொழிப்புரை:** சிறிய விண்மீன்போல் ஒளிரும் சிவந்த கண்களுடைய கரியஎருமைகளாகிய மேகங்கள் மலைக்கண் கூடி ஆரவாரத்தொடு இனியபாலினை வெள்ளியஅருவிபோல் சோரவிட, அது, கொடிய கண்களுடைய பாம்பின் நாகரத்தினஒளி, மூங்கிலின் மிக்கவெண்மையான முத்தின் ஒளி, பருத்த நீலமணிக்குவியல் ஒளியுடன் சேர்ந்து, மும்மணிகளின் ஒளியால் பெருமை பொருந்திய திருவேணி சங்கமம்போல் விளங்கி, மிக்கபேரலையுடன் ஒலித்து இறங்க, அவ்வொலியுடைய சாரல் குகைகளில் யானைகள் உறங்க, தங்கப்பொடிஒளிரும் சாரல்களுடைய திருப்போரூரனே! தாலோ தாலேலோ. ஆறுமுகனே! சிவபிரானுக்குக் குருவாகிய மேலானவனே! தாலோ தாலேலோ. ( 28 )

( 30 ) கஞ்சனை அன்று முனிந்து சிவந்(து)அருள் கையாய் தாலேலோ
காமனை வென்றவர் தோளில் உலாவிய காலாய் தாலேலோ
மஞ்சன்ம கன்கன வின்சொல் வழங்கிய வாயாய் தாலேலோ
மஞ்சள் வடம்செறி குஞ்சரி கொங்கைகொள் மார்பா தாலோ தாலேலோ
விஞ்சுறும் அன்பினர் பந்தனை கொன்(று)ஒளிர் விழியாய் தாலேலோ
வேடுவர் மங்கைஉ ளம்குடி தங்கிய மெய்யாய் தாலேலோ
தஞ்சென வந்தவர் உஞ்சிடு சமரா புராதிப தாலேலோ
சரவண பவனே குர(வு)அணி தருசண் முகனே தாலேலோ.

**குறிப்புரை :** கஞ்சன்= நான்முகன். முனிந்து=குட்டி. காமனை வென்றவர்= சிவபிரான். கால்= திருவடி. மஞ்சன்= மேகவாகனன் - இந்திரன். வழங்கிய= அஞ்சேல்என்று அருளிய வாய்= சொல். பந்தனை= துன்பம். மெய்= ஞானம். தஞ்சு= அடைக்கலம். உஞ்சிடு= ஈடேற்றம் பெறும். குரவு= குராமலர்.

**பொழிப்புரை** : முன்னாளில் நான்முகனைச் சினந்து குட்டியபோது சிவந்த கைகளுடையவனே ! மன்மதனை வென்ற சிவபிரானின் தோள்களை மிதித்து ஏறிய திருவடியனே! இந்திரனுக்கு மகனாகிய சயந்தனின் கனவில் தோன்றி அஞ்சேல் என்று அருளியவனே! மஞ்சற்கயிறு ஆகிய தாலியணிந்த தெய்வயானை அம்மையின் கொங்கைகளில் மார்புறப் படிகிறவனே! மேலான அன்பர்களின் துன்பங்களைத் திருக்கண்நோக்கால் அழித்து ஒளிரும் விழிகளுடையவனே! வள்ளிநாயகியின் மனத்தில் குடியேறிய ஞானியே! அடைக்கலமாக வந்தவர்க்கு வாழ்வளிக்கும் திருப்போரூர்க்கு உரியவனே! சரவணபவனே! குரவமலர்மாலை அணிந்த ஆறுமுகனே! தாலேலோ. ( 9 )

( 31 ) குண்டச் சமணக் கரிகளை அடுகோ ளரியே தாலேலோ
கும்பத்(து) இடுமென் பைந்திரு வில்தரு குழகா தாலேலோ
பண்டைத் தமிழ்நக் கீரன் சிறைவிடு பண்பா தாலேலோ
பச்சைக் கொடிகச் சுப்பொரு கலசப் பாலா தாலேலோ
மண்டைத் தலையில் பலிநசை கொண்டவன் மைந்தா தாலேலோ
வாரணம் ஐந்துக ரம்கொடு தழுவிய வாகா தாலேலோ
தண்டைஅம் தாளும் தோள்களும் அழகிய சதுரா தாலேலோ
சரவண பவனே குர(வு)அணி தருசண் முகனே தாலேலோ.

**குறிப்புரை** : குண்டர்= நேர்மை இல்லாதவர். சமணக்கரி= சமணர்களாகிய யானைகள். கோளரி= ஆண்சிங்கம். கும்பம்= பூரணகும்பம். பைந்திருவில்= அழகிய திருமகள்போல். தரு= செல்வம்தரும். குழகா= என்றும் இளையவனே. பச்சைக்கொடி= வளமான கொடிபோன்ற வள்ளிநாயகி. கச்சுக் கலசம்= கச்சுக்கட்டிய கொங்கை. பொரும்= முயங்கும். மண்டைத்தலை= பிரமர் மண்டைஓட்டில். பலிநசை கொண்டவன்= பிச்சையை விரும்பி ஏற்றவன் - சிவபிரான். வாரணம்= விநாயகர். வாகு= அழகு. சதுரம்= அறிவு.

**பொழிப்புரை** : நேர்மை இல்லாத சமணர்களாகிய யானைகளை வென்ற ஆண்சிங்கமே! பூரணகும்பத்தில் எழுந்தருளச்செய்த மென்மையான அழகிய திருமகள்போலச் செல்வம்தரும் என்றும் இளையவனே! முன்னொருநாளில் இனிய நக்கீரனைச் சிறையிலிருந்து விடுவித்த பண்பாளனே! வளமான கொடிபோன்ற வள்ளிநாயகியின் கச்சணிந்த கொங்கையில் முயங்கும் இளையவனே! பிரமனின் மண்டைஓடாகிய பாத்திரத்தில் இடும்பிச்சையை விரும்பி ஏற்றசிவபிரானுக்கு மகனே! விநாயகன் தனது ஐந்துகைகளாலும் தழுவிய அழகனே! தண்டையணிந்த திருவடிகளும், தோள்களுமுடைய அறிஞனே! சரவணபவனே! குரவமலர் மாலையணிந்த ஆறுமுகனே! தாலே தாலேலோ. ( 10 )

### 4. சப்பாணிப் பருவம்

( கைகொட்டக் கூறும்பருவம். இது ஒன்பதாம் மாத நிகழ்ச்சி. )

( 32 ) பொருனைநதி யில்படிந்(து) இளமரக் காவில்பு குந்துசந்தப் பொங்கரில்
புக்குமணம் நாறுதென் றல்குழவி விளையாடு பொதியப் பொலங்கு வட்டில்
திரைஎறியும் மணிஆழி அங்கையில் அடக்கியும் செந்தமிழ்க் கடல்விரித்துத்
திறமையுடன் உறையும்ஒரு குறுமுனி அகத்தினுள் திமிரம்அற மறைமுடி(வு)எனும்
அருளொளி பரப்புஞா னக்கொழும் சுடர்வைத்த ஆறுஆன னக்கொண்டலே
அன்பர்வாய் வண்குமுதம் விண்டுதண் தமிழ்நறவம் ஆரஎழும் ஒருமதியமே
தருணஉமை முககமலம் மலரவரு பரிதியே சப்பாணி கொட்டிஅருளே
தடமலைகள் நிகர்கரிகள் திரிசமர புரிமுருக சப்பாணி கொட்டிஅருளே.

**குறிப்புரை** : பொருனை= தாமிரவருணியாறு. படிந்து= நீராடி கா= சோலை. சந்தப்பொங்கர்= சந்தனமரச்சோலை. தென்றல் குழவி= இளந்தென்றல். பொலம்குவடு= பொலிவார்ந்த மலை. மணிஆழி= முத்துகளுடைய கடல். குறுமுனி= அகத்தியர். அகம்= உள்ளம். திமிரம்= இருள். ஆறு ஆனனம்= ஆறு திருமுகங்கள். கொண்டல்= அருள்பொழியும் மேகம். வாய்வண்குமுதம்= வாயாகிய வளமான செங்குமுதமலர். தமிழ்நறவம்= தமிழாகியதேன். ஆர= சுவைக்க. தருண உமை= வீடுபேற்றுக்கு வழிகாட்டும் உமையம்மை. தட= பெரிய. சமரபுரி= திருப்போரூர்.

**பொழிப்புரை** : தாமிரவருணியாற்றில் நீராடி, இளமரங்களுடைய சோலையில் புகுந்து, சந்தனமரச்சோலையில் புகுந்ததால் மணக்கும் இளந்தென்றல்வீசும் பொதியமலையில்வாழ்ந்து,

முத்துகளுடன் அலைஎறியும் கடலினை உள்ளங்கையில் ஏந்திப்பருகியும், செந்தமிழாகிய கடலினை விரிவாக அகத்தியம் என்ற நூலாகத்தந்தும் திறமையுடன் வாழும் அகத்திய முனிவரின் மனஇருள் ஒழிய, மறைகளின் முடிவாகிய அருள்ஒளியை உபதேசித்த ஞானக்கொழுஞ்சுடரான ஆறுதிருமுகமுடைய அருள்வடிவமான மேகமே! அடியவர்களின் வாயாகிய வளமான செங்குமுதமலர் மலர்மலர்ந்து போற்றும் தமிழ்த்தேனினைப் பருகஎழும் ஒப்பற்ற முழுநிலவே! வீடுபேற்றுக்கு வழிசெய்யும் உமையம்மை முகத்தாமரை மலரவரும் ஞாயிறே! சப்பாணிகொட்டியருள்க. பெரிய மலைகளொத்த யானைகள் திரியும் திருப்போரூரில் எழுந்தருளியுள்ள முருகனே! சப்பாணிகொட்டியருள்க.

**விளக்கம் :** உமையம்மை, வீடுபேற்றுக்குத் தகுதிபெறவேண்டிய உயிர்களுக்குப் பிறவியருளித் தகுதிபெற அருள்வதுடன், தகுதிபெற்ற உயிர்களுக்கு வீடுபேறு அருள முறையே மறைப்பாற்றலாகவும், அருளாற்றலாகவும் விளங்குவதால் தருண உமை என்கிறார்.

**இலக்கணக்குறிப்பு :** தமிழ்நறவம் ஆரவருமதியம்; முககமலம் ஆரவரு பரிதி -உருவகங்கள்.( 1 )

( 33 ) அலைகட லிடைப்பெரிய மகரமீன் நீர்கிழிய அம்பில் கடி(து)ஏகுமாறு
அர(வு)உயர்த் திடுகொடிக் குருகுலக் கோமகன் அடற்படைக் கடல்உடையவே
சிலைவலிய வாகுவல யப்புயப் பற்குணன் தேர்கடவி வெற்றி வளைவாய்ச்
செம்மலரில் வைத்துமறு மன்னர்செவி செவிடுறச் செல்இடித் தொனிமுழக்கும்
தொலை(வு)அறு பசுங்கதிர் எறிக்கும்மர கதநிறச் சுந்தரப் புயன்மருகனே
சுருதிமுடி(வு) ஆசனத்(து) உறைபரை முலைக்குடம் சொறிஅமுத வாரிநாறும்
தலைமைபெறு செங்குமுத வாயனே தூயனே சப்பாணி கொட்டிஅருளே
தடமலையை நிகர்கரிகள் திரிசமர புரிமுருக சப்பாணி கொட்டிஅருளே.

**குறிப்புரை :** அம்பில்= நீரில். ஏகுமாறு= செல்வதுபோல். கோமகன்= துரியோதனன். அடல்= ஆற்றல். வாகுவளையப்புயம்= தோள்வளை அணிந்த புயம். பற்குனன்= அர்ச்சுனன், வளை= சங்கு - பாஞ்சசன்னியம். மறு= எதிர். செல்இடி= மேகத்தின் இடி. பசுங்கதிர் எறிக்கும்= பசியநிறம் ஒளிரும். சுந்தரப்புயன்= அழகிய தோள்களுடைய திருமால். சுருதிமுடிவு ஆசனம்= உபநிடதங்களாகிய இருக்கை. அமுத வாரி= பாற்குடம்.

**பொழிப்புரை :** அலைகளுடைய கடலில் பெரியமகரமீன் நீரினைக் கிழித்துக் கொண்டு செல்வதுபோல், அரவத்தைச் சின்னமாகக் கொண்ட கொடியுடைய குருகுலஅரசனாகிய துரியோதனனின் ஆற்றல் வாய்ந்த கடல்போன்ற படைஉடைபடுமாறு, வில்லாற்றலில் வலிமையும், வாகுவளையம் அணிந்த தோள்களும் உடைய அருச்சுனனுக்குத் தேரோட்டியாகி, வெற்றிபொருந்திய பாஞ்சசன்னியம் என்ற சங்கைத் தனது வாயாகிய மலரிவைத்து எதிர்அரசர்கள் செவிடுபட இடிமுழக்கம்போல் ஊதியவனும் நிலைத்த பசியநிறமுடையவனும் ஆகிய கண்ணபிரானுக்கு மருகனே! வேதங்களின் முடிவான உபநிடதத்கை இருக்கையாகக் கொண்ட உமையவளின் முலையாகிய குடம் சொறிந்த பாற்கடல் மணக்கும் செங்குமுதமலர் போன்ற வாயுடைய தலைமையனே! சப்பாணி கொட்டிஅருள்க. பெரிய மலைபோன்ற யானைகள் உலவும் திருப்போரூர் முருகனே! சப்பாணிகொட்டி அருள்க. ( 2 )

( 34 ) ஈராறு பரிதிஈ ராறுமே ருதயத்(து) இருங்குழை சுமந்தபுயமும்
ஈரெட்டு ஒண்கலை மேவிக் களங்கமுயல் இன்றிச்செ ழுஞ்சுடர்விடும்
ஓராறு மதியம்ஈ ராறுதெய் வக்கமல ஒண்மலர் மலர்ந்தபடியே
ஒற்றுமை பெறக்கொண்டு நிற்றல்போ லத்திகழும் ஒளிவிழி சிறந்தமுகமும்
சீரார் படைக்கலக் கமலமும் மார்பமும் செய்யதண் டைத்தாளும்என்
திமிரம்அற என(து)அகம் குடிகொண்டு மீளாது திகழ்வீடு தருகுரிசிலே
தார்ஆர் சடைப்புனிதர் பாலாகு கக்கடவுள் சப்பாணி கொட்டிஅருளே
தடமலையை நிகர்கரிகள் திரிசமர புரிமுருக சப்பாணி கொட்டிஅருளே.

**குறிப்புரை :** ஈராறு பரிதி= பன்னிரு சூரியர். மேரு உதயத்து ஈராறு பரிதிஎன்க. இருங்குழை= பெரியகாதணி. ஒண்கலை= ஒளியாகிய கலைகள். களங்கமுயல்= களங்கமாகிய கறை. ஓர் ஆறு மதியம்= ஒப்பற்ற ஆறு முழுநிலவுகள் ஆகிய திருமுகங்கள், திமிரம்= அஞ்ஞானஇருள். குரிசில்= ஆண்களில் சிறந்தவன், தாரார்= நீண்ட.

**பொழிப்புரை** : பன்னிரு காதணிகளாக, மாமேருமலையில் உதிக்கும் பன்னிருசூரியர்களைச் சுமந்த தோள்களும், ஒளிநிறைந்த ஈரெட்டுக்கலைகளும்பொருந்திக் களங்கமாகிய கறையின்றி வளமுடன் ஒளிரும் மதியங்கள் அருளொத்து விளங்குவதுபோல் கருணைஒளி சிறந்து விளங்கும் விழிகளுடைய ஆறு திருமுகங்களும், சிறந்த படையினை ஏந்திய தாமரையாக விளங்கும் திருக்கையும், திருமார்பும். தண்டையணிந்த சிவந்ததிருவடிகளும் ஆகியவற்றுடன் அஞ்ஞானஇருள்ஒழிய என்உளத்தில் நிலையாகத் தங்கி வெளியேறாது, எனக்கு வீடுபேறுஅருளும் ஆண்மகனே! நீண்ட சடையுடைய சிவபிரான் அருளிய மகனே! குகனாகிய கடவுளே! சப்பாணி கொட்டியருள்க. பெரியமலைபோன்ற யானைகள் உலவும் திருப்போரூர் முருகனே! சப்பாணி கொட்டியருள்க.

**இலக்கணக்குறிப்பு** : காதணிகள் - சூரியர்கள்; மதியங்கள் - முகங்கள்; கை - தாமரை. அஞ்ஞானம் - இருள் - உருவகஅணிகள். மலையைநிகர் கரி - உவமையணி. ( 3 )

( 35 ) நனவில்வரு கனவில் சுழுத்தியில் பொறிகரண நற்புருடய னில்பகுதியும்
நவில்கால பரம்அதில்அ சுத்தமா யையும் விண்ணின் நண்ணுபூ ரணம்ஆயதோர்
உனல்அருவி யோமத்(து) இருஞ்சுத்த வித்தைமுதல் ஒருமூ வகைக்கருவியும்
ஒருபரம துரியத்து விந்துவும் மிளிர்விசுவம் உண்டதிசை உயர்நாதமும்
வினவலுறும் உபசாந்தம் அதனில்மா மாயையும் மிகுசொரூபம் அதனில்இருள
விள்ளும்என உரைசெய்துஎன் உள்ளமலம் அகலஅருள் விழிவழிப் பொழியும்முகிலே
தனபதியைஎ லுவன்என உளம்மகிழும் அரன்மதலை சப்பாணி கொட்டிஅருளே
தடமலையை நிகர்கரிகள் திரிசமர புரிமுருக சப்பாணி கொட்டிஅருளே.

**இப்பாடலின் குறிப்புரை, பொழிப்புரைகளை வல்லார்வாய் கேட்டுஅறிக.** ( 4 )

( 36 ) குலிசக் குழுச்சுலவு பூனதக் கிம்புரிக் கோடுநால் உடையவெள்ளைக்
குஞ்சரக் கும்பமிசை கொட்டல்போ லச்சிவன் குலவப் புயல்கொட்டல்போல்
மலைபெற்ற பைம்பிடிப் பால்உண்டு முத்தமிழ் மதம்பொழியும் அந்தநாளில்
மன்னுதத் துவமசியின் மும்மைப் பதங்களின் வகுத்(து)அறி வுறுத்துமுறைபோல்
கலகப் பிணக்(கு)உடை சமயப்பெ ரும்பறவை கடியுமொரு கருவிஅதுபோல்
கருதரிய பதிமுதல் திரிபொருளும் நிசம்எனக் கைக்குறிப்(பு) அறிவித்தல்போல்
தலைமைத் தமிழ்ச்சங்கம் அளவிட்ட விரககுக சப்பாணி கொட்டிஅருளே
தடமலையை நிகர்கரிகள் திரிசமர புரிமுருக சப்பாணி கொட்டிஅருளே.

**குறிப்புரை** : குலிசக் குழு= இடிஏறுகளின் குழு. சுலவு= சுற்றிய. பூனதக் கிம்புரி= பொன்னாலான பூண். கோடு நால் - நால்கோடு= நான்கு தந்தங்கள். கும்பம்மிசை= மத்தகத்தில். மதம்கொட்டல்போல்= மதநீர் கொட்டுதல்போல். . சிவன் குலவ= மங்களம் விளங்க. புயல்கொட்டல்போல்= மேகம் - மழை கொட்டுவதுபோல். மலைபெற்ற பைம்பிடி- இமயமலையில் பிறந்த அழகிய பிடி - பார்வதிதேவி. முத்தமிழ்மதம்= இயலிசைநாடகத் தமிழாகிய தேன். மன்னு= பெருமைபொருந்திய. தத்துவமசியின் மும்மைப்பதம்= தத்துவமசி என்பதற்குரிய மூன்று சொற்கள். அறிவுறுத்து முறை= கற்பிக்கும் முறை. பெரும்பறவை= பெரிய கழுகு. பதிமுதல் திரிபொருள்= பதி பசு பாசம் ஆகிய முப்பொருள். தலைமைத் தமிழ்ச்சங்கம்= முதற்சங்கம். விரக= வல்லவன். கும்பமிசை புயல் கொட்டல்போல் என்றுகூட்டுக

**பொழிப்புரை** : இடியேறுகளின் கூட்டம் சுற்றியதும், பொன்னாலான பூணிட்ட நான்கு தந்தங்கள் கொண்டதும் ஆகிய ஐராவதயானையின் மத்தகம் மதம் கொட்டுவதுபோலவும்; மங்களம் விளங்க மேகம் மழைகொட்டுவது போலவும்; இமயமலை ஈன்ற அழகிய பார்வதிதேவியாகிய பெண்யானைசொரியும் பால் பருகித், திருஞானசம்பந்தர் முத்தமிழாகிய தேன்பொழியும் அக்காலத்தில்; பெருமைபொருந்திய தத்வமசி என்பதற்குரிய மூன்றுசொற்களை வரையறுத்துக் கற்பிக்கும் முறைபோல், நினைத்தற்கரிய பதி பசு பாசம் .பற்றித் தம்முள் மாறுபட்டகருத்துடைய சமயங்களாகிய கழுகுகளை ஓட்டும் கருவிபோல், நினைத்தற்கரிய பதிபசு பாசம் ஆகிய மூன்றும் நித்தியமானவை என்று கைக்குறிப்பால் அறிவித்தல்போல், முதற்சங்கத்தில் அளந்து கூறிய வல்லவனே! குகனே! சப்பாணிகொட்டி அருள்க. பெரியமலைபோன்ற யானைகள் உலவும்திருப்போரூர் முருகனே! சப்பாணிகொட்டிஅருள்க

**விளக்கம்** : தத்வமசி என்பதற்குரிய மூன்று சொற்கள் : சுத்த துரியாதீதம், பர துரியாதீதம், இவற்றின் முடிவாகிய சிவ துரியாதீதம் என்பன. ( 5 )

( 37 ) கண்ணன் திருத்தங்கை முலைஅமுத கடல்உண்டு கனஞான வரைஇவர்ந்து
கருதரிய சுரர்முதல் பயிர்கள்தழை யப்பெருங் கார்அவுண மாசுணம்எலாம்
துண்என்(று) உளம்சுறுக் கிட்டுமுரி யச்செழுஞ் சுடர்விடும் தாரைநெடுவேல்
சோதிமின் மின்னிஎழு தீபச்சி கைப்பொருவு சுடிகைக் கொடிப்பேரிடி
எண்எண் திசைக்களிறு பிளிறிட இடித்துமுறை இன்னருள் பொழியும்முகிலே
இசைமுழவு பேரிகை வலம்புரி முழக்கமுடன் எழில்மங் கலச்சும்மையும்
தண்ணம் துறைப்பரவை யோ(டு)இகலு போரூர சப்பாணி கொட்டிஅருளே
தகைமைபெறு குறவனிதை விழிஇணைகள் குடிகொள்புய சப்பாணி கொட்டிஅருளே.

**குறிப்புரை** : கண்ணன் திருத்தங்கை= உமையம்மை. கனம்= மிகப்பெரிய. இவர்ந்து= ஏறி. சுரர்= வானோர். கார் அவுண மாசுணம்= கரிய அசுரர்களாகிய பாம்பு. துண் என்று= திடுக்கிட்டு. சுறுக்கிட்டு முரிய= விரைந்து ஒடிய. தாரை= கூர்மை. சோதிமின்= ஒளியாகிய மின்னல். தீபச்சிகைப்பொருவு= தீபத்தின் உச்சிச் சுவாலை ஒத்த. நெற்றிப்பட்டம். பேரிடி= பெருமுழக்கம். எண் எண்= மதிக்கத்தக்க எட்டு. முகில்= மேகம். மங்கலச்சும்மை= மங்கலமுழக்கம். பரவை= கடல் .இகலும்= ஒத்திருக்கும். தகைமை= உயர்வு.

**பொழிப்புரை** : திருமாலின் தங்கையாகிய உமையவளின் முலைப்பால் குடித்து, மிகப்பெரிய ஞானமலைமேல் ஏறி, எண்ணுதற்கியலாத தேவர்கள் முதலான பயிர்கள் தழைக்கும்பொருட்டு, கருமையான அசுரர்களாகிய பாம்புகள் எல்லாம் திடுக்கிட்டு விரைந்து ஓட - அழிய, வளமாக ஒளிரும் கூர்மையான நீண்டவேலின் ஒளியாகிய மின்னல் போல் ஒளிவிடும் தீபத்தின் உச்சியாக ஒளிவிடும் நெற்றிப்பட்டமுடைய மதிக்கத்தக்க எட்டுத்திசைக் களிறுகள் போல் முழங்கி, முறைப்படி இனிய அருள்மழை பொழியும் மேகமே! ஒலிக்கின்ற முழவு பேரிகை வலம்புரிச்சங்கு ஆகியவற்றின் முழக்கத்தை ஒத்திருக்கும் குளிர்ந்த அழகிய துறைகளுடைய கடலின் முழக்கமுடன் அழகிய மங்கலநிகழ்வுகளின் ஆரவாரமும் உடைய திருப்போரூர் முருகனே! சப்பாணிகொட்டிஅருள்க. உயர்ந்த வள்ளிநாச்சியாரின் இருவிழிகளிலும் குடிகொண்ட திருத்தோள்களுடையவனே! சப்பாணி கொட்டிஅருள்க. ( 6 )

( 38 ) மரகதப் பந்திநிறை பைங்கிரண மண்டிலம் வழங்குகுழை முகமதிகளும்
மாணிக்க மணிராசி இளவெயில் திசைவீசு மகுடம்நீ டியமுடிகளும்
கரகதிர்ப் பகல்எனச் சுடர்விரித்(து) ஒளிர்வயிர கடகநிறை செறிதோள்களும்
கறைஆலும் மதிமண் டலங்களென நித்திலம் கதிர்விடு மதாணிமார்பும்
திரகதச் செக்கரின் நிறத்துகில் மருங்குலும் திப்பிய நவமணித்
திரள்மண்டு தண்டைஅம் கமலமும் திகழஇச் சித்திரப் பைஞ்சிறைமயில்
குரகதத் தினைநடவி அடியவர்க்(கு) அருள்முருக சப்பாணி கொட்டிஅருளே
கூர்ஊர் அயிற்(கு)இறைவ போரூர் நகர்க்(கு)அதிப கொட்டிஅருள் சப்பாணியே.

**குறிப்புரை** : மரகதம்= நாகப்பச்சைமணி. பந்தி= வரிசை. பைங்கிரண மண்டிலம்= பசிய ஒளியுடைய நிலா. குழை முகமதி= காதணியுடைய முகமாகிய நிலவு. ராசி= கூட்டம். நீடியமகுடம் முடி. கரகதிர்= ஒளிரும் கிரணம். நிறை= மிகுதி. ஆலும்= பொருந்திய. மதாணி= பதக்கம். திரகதச் செக்கை= மாலைநேரச் செவ்வானம். திப்பியம்= சிறந்த. குரகதத்தினை நடவி= குதிரையைச் செலுத்தி. கூர் ஊர்= கூர்மையுடைய.

**பொழிப்புரை** : வரிசையாகப் பதித்த நாகப்பச்சை மணிகளின் வளமான ஒளிவழங்கும் காதணி அணிந்த முகநிலவும், மாணிக்கமணிக்கூட்டம் போல் இளஒளிவீசும் நீண்ட கிரீடங்களும், ஒளிரும் கிரணங்களுடைய சூரியன்போல் ஒளிவீசும் வயிரங்கள் வரிசையாகப் பதித்த கடகம் நிறைந்துசெறிந்த தோள்களும், முயற்கறைபொருந்திய வட்டமான நிலாப்போன்ற முத்துகள் ஒளிரும் பதக்கம் அணிந்த மார்பும், மாலைக்காலச் செவ்வானநிறம் போன்ற செந்நிற ஆடையும், சிறந்த ஒன்பான் மணிக்கூட்டம் நிறைந்த தண்டையணிந்த திருவடிகளும் விளங்க, அழகிய பசியசிறகுகளுடைய மயிலாகிய குதிரைமேல் ஏறிவந்து அடியவர்க்கு அருளும் கூர்மையான வேல்தாங்கிய முருகனே! சப்பாணி கொட்டிஅருள்க. ( 7 )

( 39 ) உடலின் குடர்நீ ளக்கொடு சென்(று)உ வணத்திரள் வட்டமிட
ஒள்ளிய செல்வப் பிள்ளைகள் பற்பல உயர்பட் டம்விடல்போல்
கடலில் படுகுரு திப்பெரு வெள்ளம் கண்குழி சிறுபலபேய்
கடிஅதள் மூடிய பேரிகை முழவு கரம்கொடு கரைகாண

மிடல்உற் றிடுபிண மாமலை தோறும்வியன்பேய் களிஆட்டம்
இட்(டு)ஆ டத்தலை வட்(டு)ஆ டக்கடு வெஞ்சூர்க் குலம்முழுதும்
கொடுமைத் திறமும் அறவேல் விட்டவ கொட்டுக சப்பாணி
கொற்றவ நற்சம ரப்பதி உத்தம கொட்டுக சப்பாணி.

**குறிப்புரை :** உடலின் நீளக்குடர் கொடு= பிணங்களின் உடலில் உள்ள நீண்ட குடலினைக் கொத்திச் சென்று. உவணம்= கழுகு. ஒள்ளிய= சிறந்த. படு= கலந்த. குழி சிறுகண்= உட்குழிந்த சிறியகண். கடி அதள்= வலிமையான தோல், மூடிய= போர்த்த. கரம் கொடு= கைகளில் பற்றிக்கொண்டு. கரைகாண= கரையினை அடைய. மிடல் உற்றிடு= மிக்க. வியன்= அதிகமான. தலைவட்டு= வீரர்களின் தலைகளாகிய வட்டாடும் காய். கடுவெம் சூர்க்குலம்= தீச்செயல்புரியும் அசுரர்கள். அற= ஒழிய. கொற்றவ= வெற்றியனே.

**பொழிப்புரை :** செல்வம்சிறந்த பற்பல சிறுவர்கள் வானில் பட்டம் விடுவது போல், பிணங்களின் உடம்பில் உள்ள நீண்ட குடலினைப் பற்றிக்கொண்டு கழுகுக்கூட்டம் வானில் வட்டமிட, கடலில் கலந்த குருதிவெள்ளத்தில் கண்குழிந்த பலசிறுபேய்கள் வலிமையான தோலால் மூடப்பெற்ற பேரிகை, முழவு ஆகியவற்றைப் பற்றிக் கொண்டு நீந்திக்கரையினை அடைய, மிக்க பிணமாகிய பெரியமலைகள்தோறும் அதிகமான பேய்கள் மிக்கஉணவு கிடைத்ததால் களிப்புடன் ஆட்டம்போட, வீரர்களின் தலைகளை வட்டுக்காய்களாக்கொண்டு பேய்கள் வட்டாட, தீச்செயல் புரியும் அசுரர் குலம்முழுவதும் அவர்கள் செய்த கொடுமைகளும் ஒழிய வேல்ஏவியவனே! சப்பாணிகொட்டுக!. வெற்றியாளனே! நல்லதிருப்போரூரில் எழுந்தருளியுள்ள உத்தமனே! சப்பாணிகொட்டுக.

சீதாப்பிராட்டியை கண்டுபிடிக்க அனுமன் வானில்தாவிப் பறந்தபோது, தன்னை விழுங்க வாய்பிளந்த அரக்கியின் வாயுட்புகுந்து வயிற்றைத் துளைத்துக்கொண்டு அரக்கியின் நீண்டகுடல் தனது உடம்பிலிருந்து தொங்கப் பட்டம்போல் பறந்தான் என்பார் கம்பர்.

**இலக்கணக்குறிப்பு :** இதன் முதலடியில் உவமையணி உள்ளது. ( 8 )

( 40 ) ஆடகத் திரள்மதிலும் மேல்நிலைச் சிகரிகளும் ஆணிமுத்(து) ஒளிர்மேடையும்
ஆழிதத்(து) அலைபொருவு பீடுடைக் கொடிகள்பல ஆடுபொற் குடமாடமும்
நீடுதெற் றிகளும்மணி சூளிகைச் செழுமனையும் நேர்செ லுத்தியதேர்களும்
நீர்நிறைத் திடுகுடமும் வாழைநற் கமுகினமும் நீள்நிலைப் பலதேர்களும்
சே(டு)உறத்திகழ் மகர தோரணப் பலமருகு தோறுமுத் தமிழோர்களும்
சீர்மறைத் தலைவர்பரி பூரணத் தவர்அளகை யாளன்ஒத் தவர்கள்யாவரும்
கூடிமொய்த்(து) ஒளிர்சமர மாநகர்க்(கு) ஒருமுதல்வ கொட்டிஅருள் சப்பாணியே
கூடலில் செழியன்அழல் கூன்அறப் புரியும்இறை கொட்டிஅருள் சப்பாணியே.

**குறிப்புரை :** ஆடகம்= மாற்றுஉயர்ந்த பொன். திரள்= பருத்த - அகலமான. மேல்நிலைச் சிகரிகள்= உயரமான கோபுரஉச்சி. ஆழிதத்து அலை= கடலில் தாவும் அலை. பொற்குட மாடம்= பொன்னாலான கலசங்களுடைய மாளிகை. தெற்றி= திண்ணை. மணிசூளிகை= அழகிய நிலாமுற்றம். நேர் செலுத்திய தேர்= நில்லாமல் ஓட்டிய தேர். நீர்நிறைந்திடு பொற்குடம்= நீர்நிறைந்த பொன்னாலான நிறைகுடமும் - பூரணகும்பம். நீள்நிலைப் பல தேர்கள்= நெடுநாட்களாக நின்றுகொண்டிருக்கும் தேர்கள். சேடு= அழகு. அளகையாளன்= குபேரன். கூடல்= மதுரை. அழல்= வெப்புநோய். இறைவ= தலைவனே.

**பொழிப்புரை :** மாற்றுயர்ந்த பொன்னாலான பருத்தமதில்களும், உயரமான கோபுரஉச்சிகளும், பதித்த ஆணிமுத்துகளால் ஒளிரும் மேடைகளும், கடலில் தாவும் அலைகள்போல் அசைந்துபறக்கும் பெருமைபொருந்திய பல கொடிகளும், பொன்னாலான கலசங்களுடைய மாளிகைகளும், உயரமான திண்ணைகளும், அழகிய நிலாமுற்றமுடைய வளமான வீடுகளும், நில்லாது ஓடிக்கொண்டிருக்கும் தேர்களும், நீர்நிறைந்த பூரண கும்பங்களும், எங்கும் மங்களம்பொங்கக் கட்டிய வாழையும் பாக்குக் குலைகளும், வரிசையாக நிற்கும் பலதேர்களும், அழகுறவிளங்கும் மகரதோரணம்கட்டிய பற்பல தெருக்கள் தோறும் முத்தமிழ்வல்லோரும், சிறந்தமறைஓதும் தலைவர்களும், முழுமையுற்ற சான்றோர்களும், குபேரனை ஒத்த செல்வரும் ஆக அனைவரும் மிகக்கூடியதால் ஒளியுறும்திருப்போரூர் மாநகரில் எழுந்தருளியுள்ள முதல்வனே! சப்பாணி கொட்டிஅருள்க. மதுரையில் கூன்பாண்டியனின் வெப்புநோயினையும் கூனினையும் தீர்த்த இறைவனே! சப்பாணி கொட்டி அருள்க.

**விளக்கம்** : முருகப்பெருமான் பிறப்புஇறப்பிலி. அருளாளர்திருஞானசம்பந்தர் பிறப்பும்அருட்சோதியில் சோதியில் கலப்பும் உடையவர். எனவே திருஞானசம்பந்தரை முருகப்பெருமானாகக் கூறுதல் சற்றும் பொருந்தாது. இங்ஙனம் கூறவைத்தது அக்கால வல்லாண்மை. ( 9 )

( 41 ) தீ(து)அறு கற்பக நல்தரு உற்ற சயக்குலி சப்பாணி
சேடன்உ டல்துயில் பச்சைநி றத்த செருச்செய் வளைப்பாணி
போதிடை உற்(று)உல கத்தைஅ ளித்த புதுக்கர கப்பாணி
பூசுரர் நற்றவர் கற்றவர் ஏத்துபு இத்தலம் உற்றார்கள்
மூதணி கைக்கம லத்தொ(டு) உவப்பு முகக்கம லப்போது
மூடவி ரிக்க உதித்தம திக்கதிர் ஒத்(து)எழு மெய்த்தேவே
கோ(து)அறு நற்சம ரப்பதி உத்தம கொட்டுக சப்பாணி
கூர்கொள் அயிற்படை உற்றக ரத்(து)இறை கொட்டுக சப்பாணி.

**குறிப்புரை** : தரு= மரம். உற்ற= வாழும். சயக் குலிசப் பாணி= வெற்றிபொருந்திய குலிசப்படை ஏந்திய இந்திரன். சேடன்= ஆதிசேடன். செருச்செய் வளை= போரில்உதவும் சங்கினைஏந்திய திருமால். போது இடைஉற்று= தாமரைமலரில் வாழ்ந்து, அளித்த= படைத்த. கரகப்பாணி= கமண்டலம் ஏந்திய நான்முகன். பூசுரர்= அந்தணர். ஏத்துபு= போற்ற. தலம்= உலகம். மூதணி= முதிர்ந்த அடியவர் கூட்டம். உவப்பு= மகிழ்ச்சி மூடவிரிக்க= கைகுவித்தும் விரித்து ஏந்தியும் வணங்கவும். முகத்தாமரை மலரவும். மதிக்கதிர்= நிலவின் தண்ணிய ஒளி. மெய்த்தேவு= ஞானமயனான இறைவன். அயிற்படை= வேலாயுதம்.

**பொழிப்புரை** : குற்றமில்லாத கற்பகமரநிழலில் குலிசப்படை ஏந்திவாழும் தேவேந்திரனும், பசியநிறத்துடன் ஆதிசேடனின்மேல் பள்ளிகொண்டு போர்க்குரிய சங்கினை ஏந்திய திருமாலும், தாமரை மலரில் வாழ்ந்து புதுமையாய் உலகைப்படைத்த நான்முகனும், அந்தணரும், நல்லதவத்தோரும், கற்றவர்களும், முதிர்ந்த அடியவர்களும் உன்னை வணங்க இங்குவந்து மிக்கமகிழ்வுடன் தமதுகைத் தாமரைகள் குவித்தும் விரித்து ஏந்தியும் வணங்க, உன்னருள்பெற்ற அவர்களின் முகத்தாமரை மகிழ்ச்சியால் மலர; நிலவின் தண்ணிய ஒளியாக சூரியனாக எழுந்தருளியுள்ள ஞானவடிவான தெய்வமே! குற்றமில்லாத நல்ல திருப்போரூர் உத்தமனே! சப்பாணி கொட்டுக. கூரிய வேலாயுதம் ஏந்திய இறைவனே! சப்பாணிகொட்டி அருள்க.

**விளக்கம்** : இப்பெருமான் நிலவாகவும் சூரியனாகவும் எழுந்தருளியுள்ளதால் வணங்கியவர்களின் கைத்தாமரை குவிந்தது, பெற்ற அருளால் முகத்தாமரை மலர்ந்தது என்றார்.

**இலக்கணக் குறிப்பு** : கைக்கமலத்தொடு உவப்பு முகக்கமலப்போது மூடவிரிக்க உதித்த மதிக்கதிர் ஒத்து - நிரல்நிறையணி. ( 10 )

## 5. முத்தப்பருவம்

( முத்தம்தரக் கூறுதல். இது பத்தாம் மாத நிகழ்வு )

( 42 ) கயல்கொக்(கு) உடும்பின் சிரசுகளும் கரிக்கோ(டு) ஏன முடைக்கோடும்
கழையும் கரும்பும் கமுகினமும் கதலி சாலி கடிக்கமலம்
புயல்நந்(து)ஆதி தருமுத்தும் புனலில் கனலில் புடவியினில்
பொன்றும் பொதியில் கேழ்ஒளிபோம் பொருந்தும் வினைஉண்(டு) அவைவேண்டேம்
இயல்புற்(று) ஒன்றான் அழி(வு)இலதாய் என்றும் புதுமை தரும்ஒளியாய்
எவர்க்கும் மதிக்க அரிதாகி இருந்து மிகுந்த மதுரம்எலாம்
முயல்வுற்(று) அளிக்கும் நின்கனிவாய் முத்தம் தருக முத்தமே
முகுந்தன் மருகா சமர புரிமுருகா முத்தம் தருகவே.

**குறிப்புரை** : சிரசு= தலை. கரிக்கோடு= யானைத்தந்தம். ஏனமுடைக் கோடு= காட்டுப்பன்றியின் தந்தம். கழை= மூங்கில். கதலி= வாழை. கடி= நறுமணம். புயல்= மேகம். நந்து= சிப்பி. கனல்= நெருப்பு. புடவியினில் பொன்றும்= உலகில் தன்இயல்பில் - ஒளியில் குன்றும். பொதியில்= சேமித்துவைத்தால். கேழ் ஒளி= நிறமும் ஒளியும். பொருந்தும்வினை= வாய்க்கும் தன்மை. அழிவுஇலதாய் இயல்புற்று. முயல்வுற்று= முயலும்போது. முத்தமே= என்விருப்பமாக விளங்குகிறவனே. முகுந்தன்= திருமால்.

**பொழிப்புரை** : என்விருப்பமாக விளங்குகிறமுருகனே! கெண்டைமீன், கொக்கு, உடும்பு என்ற உயிரிகளின் தலைபோன்ற ஒளியுடையதாய்; யானைத்தந்தம், காட்டுப்பன்றியின் தந்தம், மூங்கில், கரும்பு, பாக்குமரம், வாழை, மிக்கமணமுடைய தாமரைமலர், கடல்நீர் ஆகியன தரும்முத்துகள் இவ்வுலகில் அழிவனவாகும்; சேமித்து வைத்தால் அதில் பொருந்திய நிறமும் ஒளியும் போகும்; மேலும் விலையும் அம்முத்துக்கு உண்டு. எனவே அவைஎனக்கு வேண்டாம். எந்தஒன்றாலும் அழியாத இயல்புடன், எந்நாளும் புதுமையைத்தரும் ஒளியுடையதாய், எவராலும் விலைமதிப்பிட இயலாததாய் இருந்து; மிக்க இனிமையாய், யாவற்றையும் முயல்கிறவர்க்குத் தரும் உனது கொவ்வைக்கனி போன்ற இதழ்முத்தம் தருக. திருமால் மருகனே! திருப்போரூர் முருகனே! முத்தம் அருள்க.

**இலக்கணக்குறிப்பு** : கயல் கொக்கு ..........நந்து= எண்ணும்மைத் தொகைகள். இச்செய்யுள் உவமை விலக்குஅணி. ( 1 )

( 43 ) சந்தம் கமழ்மந் தாநிலத்தேர் தருக்கோடு இவர்ந்து பொறிஅளிகால்
தளைக்கும் முறுக்கு நாண்கழைக்கோ தண்டம் குழைத்து வளைத்(து)ஏற்றி
இந்தம் கவிகை அமுதநிழல் ஈயக் குயில்கள் விருது ஊத
இசைவா ரிதிப்பே ரிகை முழங்க இருள்மால் கரியும் சுகப்பரியும்
கந்தம் கமழும் குழல்படையும் கடவுள் வசந்த னொடுசூழக்
களித்து வருவோன் ஒளித்(து)ஏகக் காட்சி தருகட் டழகுடையோய்
முந்தும் தவத்தோர் பணிசரண முதல்வா முத்தம் தருகவே
முகுந்தன் மருகா சமரபுரி முருகா முத்தம் தருகவே.

**குறிப்புரை** : சந்தம்= சந்தனம். மந்தாநிலம் தேர்= தென்றல் ஆகிய தேர். இவர்ந்து= ஏறி. அளி= வண்டுகள். கால் தளைக்கும்= கால்களால் பற்றிக்கொள்ளும். முறுக்கு நாண்= முறுகேறிய கயிறு. கழைக்கோதண்டம்= கரும்பு வில். ஏற்றி= மலரம்பு பூட்டி. இந்து அம்கவிகை= முழுநிலவாகிய அழகிய குடை. இசை= ஒலிக்கும். வாரிதி= கடல். இருள் மால்கரி= இரவுஆகிய பெரியயானை. சுகப்பரி= கிளிஆகிய குதிரை. குழல்= கூந்தலுடைய மகளிர். கடவுள் வசந்தன்= நடத்துவோனாகிய வசந்தகாலம். வருவோன்= வரும் மன்மதன். ஒளித்து ஏக= மறைந்து பின்வாங்க. காட்சி தரு= காணுமாறு தோன்றும். முந்தும்= முதன்மையுடைய. பணி= வணங்கும். சரணம்= திருவடி

**பொழிப்புரை** : சந்தனம் மணக்கும் தென்றல்ஆகிய தேரில் செருக்குடன் ஏறி, புள்ளிகளுடைய வண்டுகள் கால்களால் ஒன்றையொன்று பற்றிக்கொண்ட முறுக்குடைய (வண்டுகளாகிய) நாண் கட்டிய கரும்பாகிய வில்லை நன்குவளைத்து, மலரம்பு பூட்டி, முழுநிலவாகிய அழகிய குடை இனிய நிழல்தர, குயில்கள் வெற்றிச்சின்னம் ஊத, ஒலிக்கும்கடல் போர்க்களத்துப் பேரிகையாக முழங்க, இருள்ஆகிய பெரியயானைப்படையையும் கிளியாகிய குதிரைப்படையையும் மணக்கும் கூந்தலுடைய மகளிர்ஆகிய காலாட்படையையும் நடத்துவோனாய் வசந்தகாலம்சூழ மிக்கமகிழ்ச்சியுடன் வரும் மன்மதனும் ஒளிந்துபின்வாங்கும் பேரழகனான முதல்வனே! முத்தம் தருக! திருமால் மருமகனே திருப்போரூர் முருகனே! முத்தம் அருள்க. .

**விளக்கம்** : மன்மதனுடைய தேர் முதலியவற்றைத் தொகுத்துக் கூறிய அழகு காண்க.

**இலக்கணக்குறிப்பு** : குழல் - அன்மொழித்தொகை. ( 2 )

( 44 ) பெருகும் கருணை சுரந்(து)ஒழுகும் பிராட்டி பசும்பொற் குடத்(து)அமுதும்
பிறங்கும் அறுவர் ஈறாறு பெரிய குரும்பை ஒழுக்(கு)அமுதும்
கருகும் சகரர்க்(கு) அருள்புரிந்து கடலின் அகடு கிழித்(து)ஒழுகு
கங்கைப் பெருந்தாய் ஆயிரமாம் கனிவாய் முத்தம் இடும்அமுதும்
குருகின் சிறையும் பிறைக்கொழுந்தும் கூடத் திகழ்செஞ் சடைப்பெருமான்
குமுதத் திருவாய் முத்தமிடக் கொழிக்கும் நறவும் மோனசுகம்
முருகும் ததும்பும் கனிவாயால் முத்தம் தருக முத்தமே
முகுந்தன் மருகா சமரபுரி முருகா முத்தம் தருகவே.

**குறிப்புரை** : பசும்பொன் குடம்= வளமான அழகிய குடமாகிய முலை. அறுவர்= கார்த்திகை மாதர் அறுவர். ஒழுக்கு= சுரக்கும். குருகின் சிறை= பறவையின் இறகு. கொழிக்கும்= பெருகும். நறவு= தேன். மோனசுகம்= மோனநிலையால் அமையும் இன்பம். முருகு= நறுமணம்.

**பொழிப்புரை:** முத்தாக விளங்குகிறவனே! மிக்க கருணைஊறிப் பெருகும் அம்மையின் வளமான அழகிய குடமாகவிளங்கும் கொங்கைகளின் பாலும், சிறந்த கார்த்திகைமாதர் அறுவரின் பருத்த பன்னிரு தென்னங்குரும்பைகளாகிய முலைகள் சுரந்த பாலும், வருந்திய சகரர்க்கு அருளிக் கடலின் வயிற்றைக் கிழித்ததால் பெருகிய சிறந்த கங்கைத்தாய் தனது கனிகளொத்த ஆயிரம் வாயினால் முத்தமிடும் அமுதமும், பறவையின் சிறகும் மூன்றாம்பிறையும் சூடிய செஞ்சடையப்பனாகிய சிவபிரான் முத்தமிடப் பெருகும் தேனும் ஆகிய இவற்றால் மோனநிலையால் அமையும் இன்பமும் நறுமணமும் பொருந்திய உனது அழகியவாயால் முத்தம்தருக. திருமாலுக்கு மருமகனே! திருப்போரூர் முருகனே! முத்தம் அருள்க

( 45 ) பனியில் குறிய துளிதூற்றும் பரவைத் தரங்கம் எடுத்(து)எறிந்த
பணிலத் திரளும் இரசிதப்பூம் பணிச்செப்(பு) ஏய்ந்த முரல்இனமும்
நனிமுற் றியசூல் உளைந்துசொரி நளிவெண் தரளத் திடர்தோறும்
நவைதீர் பவள வண்டல்வரை நடுவும் படவர் மடமகளிர்
இனி(து)உற்(று) இவர்ந்து பனைப்பாளை இருந்த கலச மதுஅருந்தி
இணர்கே தகையும் புனைப்போதும் எடுத்து முடித்துக் களித்(து)ஆடும்
முனிவர் குழாங்கள் புகழ்போரூர் முருகா முத்தம் தருகவே
முத்தார் கொத்தே அனாதிவரு முத்தா முத்தம் தருகவே.

**குறிப்புரை** : குறிய= நுட்பமான. பரவை= கடல். பணிலம்= சங்கு. இரசிதம்= வெள்ளி. பூ= அழகு. பணிச்செப்பு= வேலைப்பாடுடை அணிகலப்பேழை. எய்ந்த= ஒத்த. முரல் இனம்= சங்குப்பூச்சி இனம். உளைந்து= வருந்தி. நளி= குளிர்ச்சி. திடர்= மேடு. படவமகளிர்= செம்படவமகளிர். இவர்ந்து= ஏறி. கலசம்= பானை. கேதகை இணர்= தாழைமலர்க்கொத்து. புனைப்போது= புன்னை மலர். முத்துஆர்கொத்து= அழகிய முத்துமாலைக் கொத்து. அநாதிவரு= கணக்கிடவியலாக் காலம்தொட்டுத் தோன்றிய. முத்தன்= ஆணவம் கன்மம் மாயை இல்லாதவன்.

**பொழிப்புரை** : பெய்யும் பனித்துளிபோல் நுட்பமான துளிகளைத்தூவும் கடலலைகள் எடுத்து எறிந்த சங்குகளின் கூட்டமும், வெள்ளியாலான அழகிய வேலைப்பாடுடைய அணிகலப் பேழை போன்ற சங்கினமும் தம்கருமிகமுற்றியதால் வருந்திச் சொரிந்த குளிர்ந்த வெண்முத்துமேடுகளிலும், குற்றமற்ற பவளங்களுடைய வண்டல்மலைகள் நடுவுக்கும் செம்படவமகளிர் ஏறியிருந்து, பனைமரத்தின் பாளையில்இருக்கும் பானையில் சேர்ந்த கள்ளினைக் குடித்து, தாழைமலர்க்கொத்துடன் புன்னைமலர்சூடிக் களிப்புடன் விளையாடுவதும், முனிவர் கூட்டத்தால் புகழப்பெறுவதும் ஆகிய திருப்போரூர் முருகனே! முத்தம் தருக. அழகிய முத்துமாலைக் கொத்தே! கணக்கிடவியலாக் காலத்தில் தோன்றியவனாயுள்ள ஆணவகன்மம் மாயை இல்லாத முத்தனே! முத்தம் தந்தருள்க.

**இலக்கணக்குறிப்பு** : பனியில் - இல் - உவமஉருபு. ஏய்ந்த - ஏய்வு - உவமஉருபு. ( 4 )

( 46 ) பூனத மாழைக் கிண்கிணி பலவும் பொலிவொடு கணகணெனப்
புனிதத் தண்டையின் ஒலிகல கலெனப் பொற்றொடி நிரைஅதிர
மேல்நகும் அரைவடம் ஓசை தழைந்திட வியன்நவ மணிமாலை
விரவி அலம்பக் குண்டலம் ஒளிவிட மிளிர மணிச்சுடிகை
யான முடப்படம் ஆயிர மும்தள்ளாடத் தளர்நடை யிட்(டு)அம்மை
செவிக்(கு)இன் சுவைபெற மழலை அரும்பிழி செவ்வாயால்
மோனசு கம்தரு ஞானப் பிள்ளாய் முத்தம் தந்தருளே
முத்தமிழ் நற்சம ரப்பதி நாயக முத்தம் தந்தருளே.

**குறிப்புரை** : பூனதமாழை= சாம்பூனதப் பொன். நிரை= வரிசை. அரைவடம்= இடுப்பில் கட்டிய சலங்கைவடம். வியன்= சிறந்த. விரவி அலம்ப= பிறஒலிகளுடன் கலந்து ஒலிக்க. சுட்டிகை= நெற்றிச்சுட்டி. முடப்படம்= தொடைக்குமேல் பின்னேஉள்ள வளைந்த உறுப்பு (குண்டி). அரும்பிழி= சிறந்ததேன்.

**பொழிப்புரை** : சாம்பூனதப் பொன்னாலான பலகிண்கிணிகளும் கணகணப் பொலிவுடன் ஒலிக்க, புனிதமான தண்டை கலகல என்று ஒலிக்க, பொன்வளையல் வரிசை அதிர, மிகஒளிரும் அரைஞாணான சலங்கைஒலி பெருக, சிறந்த நவமணிமாலை பிறவற்றுடன் கலந்து ஒலிக்க, குண்டலம் ஒளிவிட, மணிகள் பதித்த நெற்றிச் சுட்டிகையின் ஒளி சிறக்க, நாகத்தின் வளைந்தஆயிரம்படம் போன்ற ஆசனவாய்ப்பகுதி (குண்டி)தள்ளாட, மென்மையாக நடந்துவந்து, அம்மையின் காதுகளுக்கு இனிமைதரும்

மழலைமொழியாகிய செந்தேன்போன்ற சொற்கள் பேசும் வாயால்பேசி மோனத்தின் இன்பம்தரும் ஞானக்குழந்தையே! முத்தம் தந்தருள்க. முத்தமிழ் வழங்கும் சிறந்த திருப்போரூர்த் தலைவனே! முத்தம் தந்தருள்க.

**விளக்கம்** : அணிந்த அணிகலன்கள், ஞானக்குழந்தை தளர்நடை இடும்போது எழுப்பிய ஒலி, ஒளி கூறினார். ( 45 )

( 47 ) இருள்மைப் படலம் கெடநுங் கும்சுடர் எழில்மா ணிக்கவரை
ஈரைந் துடன்அக் கிரிவந்(து) ஈரா(று) இணைவுறு பரிசதெனக்
கருடத் துவசனும் அறிவரி யான்அணி கடகத் தோள்தழுவி
கறையறு முழுமதி ஒருபத் தொன்று கலந்து மகிழ்ந்துறல்போல்
அருள்மொய்த்(து) ஒழுகு முகத்தொடு முகம்வைத்(து) அழகிய மழலைசொலி
ஐயன் உளம்களி பொங்குற முத்தம் அடிக்கடி தருவாயால்
முரு(கு)உற்(று) எழுநீ பத்தொடை அழகா முத்தம் தந்தருளே
முத்தமிழ் நற்சம ரப்பதி நாயக முத்தம் தந்தருளே.

**குறிப்புரை** : மை இருள்படலம்= மைபோல்கரிய இருளின் செறிவு. நுங்கும்= விழுங்கும் ஈரைந்து நடக்கிரி= பத்துவகை நடனமாடும் சிவபிரான் ( சதாசிவ மூர்த்தி, ஐந்து திருமுகங்கள் - தலைகள் உடையவர் ). ஈராறு இணைவுறு= பன்னிரு மலைபோன்ற முருகனின் தோள்கள். பரிசு= தன்மை கருடத்துவசன்= திருமால். அறிவறியான்= அறிவதற்கரிய சிவபிரான். முழுமதி ஒருபத்து ஒன்று= முழுநிலவுகள் பதினொன்று. ( சதாசிவ மூர்த்தியின் திருமுகங்கள் ஐந்து + முருகப்பிரானின் திருமுகங்கள் ஆறு = பதினொன்று ) சொலி= பேசி. முருகுற்று= நறுமணம் பொருந்தி.

**பொழிப்புரை** : இருள்போன்ற கரியஆணவப்படிவு கெட, அதனை விழுங்கும் மாணிக்கமலைகள் பத்துடன் ( சதாசிவமூர்த்தியின் தோள்கள் பத்துடன் ) முருகப்பெருமானின் திருத்தோள்கள் பன்னிரண்டும் வந்து சேர்ந்தாற்போல விளங்க; திருமாலாலும் பிறராலும் அறிவதற்கரிய சதாசிவப்பெருமானின் கடகமணிந்த தோள்களை முருகன் தழுவியதால் களங்கமற்ற முழுநிலவுகள் பதினொன்றுடன் (சதாசிவத்தின் திருமுகம் ஐந்து + முருகப்பிரான் திருமுகம் ஆறு = 11 ) கலந்து மகிழ்வதுபோல், அருள்எலாம் திரண்டு ஒழுகும் முகங்களுடன் முகம்வைத்து , அழகிய மழலை பேசி, சிவபிரான் மனத்தில் களிப்புமேன்மேல்மிக அடிக்கடி முத்தம்தரும் மணம்பரப்பும் கடம்பமாலை சூடியாஅழகனே! உன்திருவாயினால் எனக்குமுத்தம் தந்தருள்க. முத்தமிழ் முழங்கும் திருப்போரூரில் எழுந்தருளியுள்ள தலைவனே! முத்த்கம் தந்தருள்க. . .

**விளக்கம்** : திருமாலாலும் பிறராலும் அறிவதற்கரிய சிவபிரான் ஐந்தொழில் புரியக்கொண்ட திருவடிவம், ஐந்து திருமுகங்களுடன் கூடிய சதாசிவமூர்த்தி. சதாசிவ மூர்த்தியின் திருமுகங்கள் ஐந்துடன் முருகப்பிரானின் திருமுகங்கள் ஆறும் இணைந்ததால் திருமுகங்கள் பதினொன்று என்றார்.. சதாசிவமூர்த்தியின் திருமுகங்கள் ஐந்தாதலின் மாணிக்கமலைகளாக விளங்கும் திருத்தோள்கள் அவருக்குப் பத்து என்க. முகத்துடன் முகம்வைத்தல் பேரன்பின் வெளிப்பாடு ஆகும் ( 6 ).

( 48 ) பூவே பூவிற் பரிமள மேஅப் பூநிறை சுவைநறவே
பொங்கும் கடலே கடலின் உதித்(து)எழு புனிதத் தெள்ளமுதே
காவே காவில் கொஞ்சும் பஞ்ச வணக்கட வுள்கிளியே
கண்ணே கண்ணுறு பாவாய் பூவாய் கனியே கனிரசமே
தேவே தேவர் சிரோமணி யேஎன் சீருயி ரேஉயிரில்
செம்பொரு ளேஅருளே முழுமணி யேமணியில் தேசிகமே
மூவா மறையே மறையின் பொருளே முத்தம் தந்தருளே
முத்தமிழ் நற்சம ரப்பதி நாயக முத்தம் தந்தருளே.

**குறிப்புரை** : நறவு= தேன். பஞ்சவணம்= ஐவகை நிறம். கடவுள்= தெய்விகம். தேசிகம்= ஒளி. மூவா= முதிராத - அழியாத.

**பொழிப்புரை** : வெளிப்படை.

( 49 ) ஆடக நன்கத் தரியால் வேளுக்கு அம்பு திருத்துவபோல்
அலவன் குறுமுள் தாள்கொடு குவளையொ(டு) அம்புய இதழ்கிள்ளும்
ஓடையில் நீடும் கவையடி மேதிகள் உறுகுட மடியில் வரால்கள்
உகளி அடிக்கடி முட்டக் கன்றென உள்ளிச் சொரிவெள்ளம்
பீடுறு மாலைச் சாடிகொ ளா(து)எழு பிரசவெ ளத்துடனே
பெருகிக் கதலியின் மஞ்சளோ(டு) இஞ்சி பெருங்கழை செஞ்சாலி
மூடிநி றைக்கும் தொண்டநன் னாடா முத்தம் தந்தருளே
முத்தமிழ் நற்சம ரப்பதி நாயக முத்தம் தந்தருளே

**குறிப்புரை** : ஆடக நன் கத்திரி= பொன்னாலான பிடியுடைய கூர்மையான கத்திரிக்கோல். வேள்= முருகன். அம்பு= தளிர். அலவன்= நண்டு, கிள்ளும்= வெட்டும். நீடும்= மிக்க. உகளி= புரண்டு. மாலைச்சாடி= பெரியசாடி. பிரச வெளம்= பால்வெள்ளம். பெருங்கழை= பருத்த மூங்கில்.

**பொழிப்புரை** : பொன் பிடியுடைய கத்திரிக்கோலால் முருகப்பெருமானுக்குத் தளிர்மாலைகளை வெட்டிச்சீர்திருத்துவதுபோல், நண்டுகள் தமதுமுட்கள் கொண்ட குட்டையான கால்களால் குவளை மலர்களையும், தாமரைமலர்களையும் வெட்டும் ஓடையின்கண்ணே, பிளவுபட்ட குளம்புடைய மிக்க எருமைகளின் பெரியகுடம்போல் பருத்த மடியின்மேல், வரால்மீன்கள் அடிக்கடிபுரண்டு முட்ட, தமது கன்றுகள் பாலுக்காக முட்டுவதாகக் கருதிய எருமைகள் சொரிந்த பால்வெள்ளம், பெருமைபொருந்திய பெரியசாடிகளும் கொள்ளாது எழுந்து பெருகி, வாழை, மஞ்சள், இஞ்சி, பருத்தமூங்கில், செந்நெல் ஆகியவற்றை நிறைத்து மூடும் வளமான தொண்டநாட்டவனே! முத்தம் தந்தருள்க. முத்தமிழ் முழங்கும் சிறந்த திருப்போரூர்த் தலைவனே! முத்தம் தந்தருள்க.

**இலக்கணக்குறிப்பு** : கொளாது, வெளம் - இடைக்குறைகள். இச்செய்யுளின் முதலடியில் உவமையணியுள்ளது. ( 8 )

( 50 ) மாலைப் பொழுதில் பெடையொடு சிறைஅளி வனசக் கோயில்புக
வளர்மதி அமுத கரம்கொ(டு) இதழ்வா சக்கத(வு) அதுமூட
காலைப் பரிதி கரத்தால் அந்தக் கதவு திறந்துவிடும்
கடிமலர் ஏரிப் பெருமத(கு) எழுநீர் கதிர்வயல் புகஎதிர்போம்
சேலைச் சினைபடு களிறு துரத்தச் செறிநில(வு) விறி(சு)எனவே
சிதறிக் கன்னல் காடு முரிப்பத் தேன்முத் தொடுசொரியும்
மூலிச் சுதைநிகர் பாலிநன் னாடா முத்தம் தந்தருளே
முத்தமிழ் நற்சம ரப்பதி நாயக முத்தம் தந்தருளே.

**குறிப்புரை** : பெடை= பெண்வண்டு. சிறைஅளி= காமம்மிக்க ஆண்வண்டு. வனசம்= தாமரை. வாச இதழ்க்கதவு= மணமிக்க தாமரைஇதழாகிய கதவு. கடி= நறுமணம். எதிர்போம்= எதிர்த்து நீந்தும். சேலை= கெண்டைமீனை. சினைபடு சேல் என்க. விருசு= வாணம். சிதறி= பரவி. மூலிச்சுதை= மூலமான தேவாமுதம்.

**பொழிப்புரை** : மாலைநேரத்தில் பெண்வண்டொடு, காமம்மிக்க ஆண்வண்டு தாமரைவீட்டில் புக, அதுகண்டு ஒளிவளரும்நிலவு தனது அமுதமயமான கையால் அத்தாமரைமலரின் கதவாகிய இதழ்களை மூட, காலைஞாயிறு தன்கைகளால் அக்கதவினைத் திறந்துவிடும், இத்தகு மணமலர்களுடைய அந்த ஏரியின் பெரியமதகு வழியே வெளிப்படும் நீரை எதிர்த்துநீந்தும் சினைப்பட்ட கெண்டைமீனை ஆண்மீன் துரத்த, செறிந்தநிலவின் வண்ணம்வாணம்போல் சிதறி, கரும்புக்காட்டினை முரிக்க, கரும்பு, தேனையும் முத்தினையும் சொரியும். இத்தகு வளத்திற்கு மூலமான தேவாமுதம் போல்சிறந்த பாலாறு பாயும் நன்னாடனே! முத்தம் தந்தருள்க. முத்தமிழ் முழங்கும் சிறந்த திருப்போரூர்த் தலைவனே! முத்தம் தந்தருள்க. ( 9 )

( 51 ) சிமயம் மொய்த்(து)ஒன்(று) இமய வெற்பன் தவபலப்பைம் பிடிஅனாள்
செறிக ளிப்பண் புறஉ ரைக்கும் சிலசொல் கற்கும் சிறுகிளாய்
அமர ருக்கும் முனிவ ருக்கும் அடிய வர்க்கும்அமுதமே
அவுண ருக்கும் சமண ருக்கும் கொடிய வர்க்கும் அனலமே
குமுத நற்பங் கயம்மு ருக்குங் குலிகம் மிக்கும் சுதைநறாக்

குலவு கற்கண்(டு) இவைஇ ருக்கும் இதழ்அ ளைப்பைங் குழவியே
சமர நற்செம் பதிஅ ருக்கன் தருக முத்தம் தருகவே
தணிகை வெற்பன் சரவ ணத்தன் தருக முத்தம் தருகவே.

**குறிப்புரை** : சிமயம்= சிகரம். மொய்த்து ஒன்று= மிகப்பலவாகப் பொருந்திய. இமயவெற்பன்= மலையரசன் - இமவான். தவபலம்= தவவலிமை. களிப் பண்பு= மகிழ்ச்சிகுணம் பொருந்த. கிளாய்= கிளியே. அனலம்= நெருப்பு. முருக்கு= முள்முருக்க மலர். குலிகம்= சாதிலிங்கப்பூ. சுவை நறா= அமுதத்தேன். இதழ் அளை= இதழ்களில் - உதடுகளில் சேர்ந்த. குழவியே= குழந்தையே - முருகனே.

**பொழிப்புரை** : மிகப்பலவாகப் பொருந்திய சிகரங்கள் செறிந்த இமயமலை அரசன் ஆகிய இமவான்செய்த தவவலிமையால் அவன்மனைவியாகிய இளம்பெண்யானைஒத்த மேனை, அளவற்ற களிப்புடன் பண்புறக் கூறும் சிலசொற்களைக் கற்கும் சிறு கிளியே! ,அமரர், முனிவர், அடியவர் ஆகியோர்க்கு அமுதமாகவும், அசுரர், சமணர், கொடியவர் ஆகியோர்க்கு நெருப்பாகவும் விளங்குகிறவனே! செங்குமுதம், செந்தாமரை, முள்முருக்கம், சாதிலிங்கம் ஆகிய மலர்களை விஞ்சியபண்புகளுடன் அமுதத்தேன், கற்கண்டு இவை உதடுகளில் இருக்கும் பச்சைக்குழந்தையே! திருப்போரூர் ஆகிய சிறந்ததலத்தில் எழுந்தருளியுள்ள ஞான சூரியனே! முத்தம் தருக! தணிகை மலையனாகிய சரவணபவனே! தருக! முத்தம்தருக. ( 10 )

## 6. வருகைப் பருவம்

( நற்றாய் முதலியோர் வருக என்று அழைப்பது. இது பதினோறாம் மாதத்தது. )

( 52 ) விரைநறும் குழலினார் கொங்கைப் பெருங்குவடு மிகுதடக் கடல்உழக்க
வெள்ளைவா ளைக்களிறு கொள்ளுசூல் முகில்பிளிறி விள்ளக் கிழித்(து)அஃதுறு
நிரைதரும் கந்திக் குடக்கழுத்(து) அறமோதி நெட்டிலைக் கதலிசாடி
நீடுகன் னற்கா(டு) ஒடித்துப் பொறிச்சிறைய நீலவண்(டு) ஊதுகஞ்சத்
திரளொடும் பணைமண்டு நெற்றாள் உடைத்திடச் செறிதரள முகில்ஆதியில்
சிந்தப்பெ ரும்சோதி உடுமண் டிலத்தினில் திகழ்கின்ற மருதவேலி
மருவிஅம் புகழ்கொண்ட சமரபுரி தனில்நிலவு மஞ்ஞைவா கனன்வருகவே
மலிபுவனம் முழுவதும் கிடுகி(டு)என நொடியில்வலம் வருகந்த வேள்வருகவே.

**குறிப்புரை** : நறும்விரை= மணக்கும் மயிர்ச்சாந்து. குவடு= குன்று. தடக்கடல்= பெருங்கடல். உழக்க= புரள. வெள்ளை= வெள்ளி. வாளைக் களிறு= ஆண்வாளைமீன். வெள்ளி வாளைக்களிறு பிளிறி சூல் கொள்ளு முகில் விள்ளக்கிழித்து என்க. பிளிறி= பேரொலிஎழுப்பி. உறுநிரை= மிக்கவரிசை. கந்தி= பாக்கு. பொறி சிறைய= புள்ளிகள் பெற்ற சிறகுடைய. கஞ்சத்திரள்= தாமரைமலர்க் கூட்டம். முகில் செறி தரளம் ஆதி= மேகம் செறிந்த முத்துமுதலியன. உடுமண்டிலம்= விண்மீன் கூட்டம். மருதவேலி= நன்செய்நிலம் சூழ்ந்த. மஞ்ஞை= மயில். கிடுகிடுஎன= மிகவிரைந்து.

**பொழிப்புரை** : கூந்தலில், மணக்கும் மயிர்ச்சாந்து பூசிய மகளிர் கொங்கைகளாகிய பெரிய குன்றுதரும் இன்பக்கடலில் புரளவும்; வெள்ளிபோல் ஒளிரும் ஆண்வாளைமீன், சூல்கொண்ட மேகம் பிளவுபட மோதிக்கிழித்தும், மிக்க வரிசையாக உள்ள பாக்குமரத்தின் குலையால்வளைந்த கழுத்து ஒடிய மோதியும், நீண்ட இலைகளுடைய வாழையைச் சாடி, உயரமாக வளர்ந்த கரும்புக்காட்டினை ஒடித்து, சிறகில் புள்ளிகளுடைய வண்டுகள் மொய்த்து ஒலிக்கும் தாமரை மலர்க் கூட்டத்துடன் கூடிய நன்செய்யில் மண்டிய நெற்பயிரின் தாள்உடையவும், மேகத்தில் செறிந்த முத்து முதலியன சிந்துமாறு செய்யும். விண்மீன் கூட்டமளவும் வளர்ந்த நன்செய்நிலம் சூழ்ந்த அழகிய புகழ்கொண்ட திருப்போரூரில் எழுந்தருளியவனாகிய மயிலேறும் பெருமானே! வருக. கனியின் பொருட்டுப் பெரிய உலகம் முழுவதையும் மிகவிரைவாக நொடியில் வலம்வந்த முருகப்பிரானே! வருக.

**இலக்கணக்குறிப்பு** : கொங்கைப்பெருங்குவடு - உருவகம். தடக் கடல் - உரிச்சொற்றொடர். வெள்ளை வாளை - உவமத்தொகை. கிடுகிடு என - இரட்டைக் கிளவி. ( 1 )

( 53 ) பொன்னம் சிறைப்பேடை அன்னம் களிப்போடு புனலாட நிழல்கண்டதன்
புகலாவி யின்சேவ லுடன்ஊடி மாலையம் பொழுதில் கரந்(து)உறைதரத்
துன்னுறு மடல்கேத கைத்துணரை வெள்ளிதழ் தூயகஞ் சக்குழுவினை
சுரிமுகச் சங்கினைத் திரைஎறியும் நித்திலத் தொகுதியைச் சூல்இப்பியை

பன்னுநா ரைத்திரளை நாடிப் பசும்புனைப் பஞ்சரத் திடைகண்டுதன்
பவளவாய் அதின்வாய் மடுத்(து)அரு(கு) அணைத்துப் பரிந்(து)அதனின்முனி(வு)அகற்றி
மன்னும் தருக்கோடு திளைக்கும்நெய் தற்சமர மாநகர்க்(கு) இறைவருகவே
மலிபுவனம் முழுவதும் கிடுகி(டு)என நொடியில்வலம் வருகந்த வேள்வருகவே.

**குறிப்புரை :** பொன் அம்= சிறந்த அழகிய. சிறை= சிறகு. புகல் ஆவியின்= துணையான உயிர்போன்ற. கரந்து= மறைந்து. துன்உறு= செறிந்த. வெள் இதழ்= வெண்மையான மடல். கேதகைத்துணர்= தாழையின் கொழுந்தை. கஞ்சம்= தாமரை. சுரி= வளைவான. பஞ்சரம்=கூடு. மடுத்து= உட்கொண்டு. மன்னும்தருக்கு= பெருமைபொருந்திய செருக்கு.

**பொழிப்புரை :** மாலைப்பொழுதில் சிறந்த அழகிய சிறகினையுடைய பெண்அன்னம் களிப்புடன் நீராட, நிழலில் அதன் உடம்பினைக்கண்ட தனது உயிர்போன்ற துணையான ஆண்அன்னத்துடன் அது ஊடி மறைந்துகொள்ள, ஊடலைத்தீர்க்க ஆண்அன்னம் வெண்நாரைகள் வாழுமிடமாகிய செறிந்த வெண்மடல் கொண்ட தாழை, வெண்டாமரைக்கூட்டம் ஆகியவற்றை நாடித்தேடிச்சென்று, அங்கு அவற்றின் கூட்டில் இருக்கும்வளைந்த முகமுடைய சங்கு, அலைகள் எறிந்த சிப்பிஆகியவற்றைத்தேடித் தனது பவளம்போன்ற அலகாலெடுத்துக் கொண்டுவந்து அப்பெடைக்குஊட்டி, அதன் சினத்தைத்தீர்த்து அன்புடன் அதனைஅணைத்துக்கொண்டு பெருமையும் செருக்கும் கொள்ளும் நெய்தற்பரப்புடைய திருப்போரூர் முருகப்பெருமானே! வருக. பெரியஉலகம் முழுவதையும் விரைந்து ஒருநொடியில் கனியின்பொருட்டு வலம்வந்த விரும்பத்தக்கவனே! வருக. ( 2 )

( 54 ) குழைஅளவு தாவடி செலும்கயல் கண்கவுரி கொஞ்சிவிளை யாடுகிளியைக்
குழகர்வே ணிப்பிறைத் தோணிமிசை வைத்(து)அலை கொழித்தகங் கையில்விடுத்தும்
உழைவெருவி உகளவெம் புலிஅதளை ஆனனத்(து) உறவைத்து நகைகொட்டியும்
ஒளிர்மணிச் சுடிகைமுட வுப்படத்(து)அர வத்தை உலர்தலை முழைக்கண் உய்த்தும்
இழைபொருவும் ஆமைஓடு அதில்அறலை மொண்(டு)எரி அவித்(து)அரிமருப்பு வில்லுக்(கு)
எண்தோள் தயங்குபுரி நூல்நாண் வளைத்திட்(டு) எழில்கரத் திடைப்பிடித்து
மழைபொருவு களன்மடியில் விளையாடு குகசமர மாநகர்க்கு இறைவருகவே
மலிபுவனம் முழுவதும் கிடுகிடுஎன நொடியில்வலம் வருகந்த வேள்வருகவே.

**குறிப்புரை :** குழை அளவு= காதணிவரை. தாவடிசெலும்= அடிதாவிச் செல்லும். குழகர்= சிவபிரான். உழை= மான்கன்று. உகள= தாவிஓட. ஆனனம்= முகம். சுடிகை= உச்சி. முடவுப்படம்= வளைந்த படம். உலர்தலை= காய்ந்த மண்டைஓடு - பிரமகபாலம். முழை= துளை. இழைபொருவு= அணிகலன்ஒத்த. அறல்= நீர். அரிமருப்பு= காட்டுப்பன்றியின் தந்தம். புரிநூல்= முப்புரிநூல். மழைபொருவு களன்=மேகம்ஒத்த கழுத்துடைய சிவபிரான்.

**பொழிப்புரை :** காதணிவரை தாவிச்செல்லும் கெண்டைமீனொத்த கண்களுடைய உமையம்மை கொஞ்சிவிளையாடும் கிளியினைச் சிவபிரானின் பிறையாகிய தோணியில் வைத்து அலையெறியும் கங்கையில் விட்டும், மான்கன்று அஞ்சித்தாவி ஓடுமாறு புலித்தோலைத் தன்முகத்தில் மாட்டிக்கொண்டு மானின் அச்சத்தினை நகைத்தும், ஒளிரும் மணியை உச்சியில்கொண்ட வளைந்த படமுடைய நாகத்தை உலர்ந்த பிரமகபாலைத் துளையில் ஓடவிட்டும், அணிகலன்போல் அணிந்த ஆமையோட்டில் கங்கைநீரை முகந்து சிவன் கையில்ஏந்திய தீயினை அவித்தும், காட்டுப்பன்றியின் வளைந்ததந்தமாகிய வில்லுக்கு எட்டுத்தோள்களில் விளங்கும் பூணூலை நாணாகக்கட்டிக் கையில் ஏந்தியும் கார்மேகம்போன்ற கழுத்துடையவனாகிய சிவபிரானின்மடியில் அமர்ந்துகொண்டு விளையாடும் குகனே! திருப்போரூர் மாநகர் இறைவனே! வருக. பெரிய உலகம் முழுவதையும் ஒருநொடியில் விரைந்து வலம்வந்த விரும்பத்தக்க கந்தனே! வருக.

சிவபிரானிடம் உள்ளவற்றைக் கொண்டே விளையாடியதாகக் கூறும் நயம்காண்க ( 3 ).

( 55 ) மேருப்பொ ருப்பைஒரு தண்(டு)எனக் கொண்(டு)எழு வேலையை உறிஞ்சிவிட்டும்
விரிசக்ர வாளகிரி ஒருவாகு புரியாக வெவ்வலித் தோளில்இட்டும்
பேருற்ற கயம்எட்டும் எட்டுநா கம்கொடு பிணித்துச்செ விக்(கு)அணிந்தும்
பெரியபுவ னப்பொறைக் கமடம்அ(து) எடுத்துப் பிறங்குசில் எனவிடுத்தும்
சீருற்று விளையாடு பூதக்க ணத்தொடும் சென்றுசூர் வேட்டையாடும்

சேவகப் பெருமாள்என் ஆவியுட் பெருமாள் செயத்தேவர் முனிவர்பெருமாள்
மாரிப்பு யல்கருணை பொழிகின்ற போரூர மாயூர குகவருகவே
மலிபுவனம் முழுவதும் கிடுகி(டு)என நொடியில்வலம் வருகந்த வேள்வருகவே.

**குறிப்புரை** : தண்டு= ஆயுதம். விரி= நீண்ட. வாகுபுரி= தோளில் தூக்கும் வடம். பேர்= புகழ். கயம் எட்டு= திசையானைகள் எட்டு. நாகம்= நாகப்பாம்பு. பொறை= தாங்கும். கமடம்= ஆமை. சில்= அற்பம். சூர்= அசுரர். சேவகப்பெருமாள்= வீரனாகிய முருகன். ஆவியுள் பெருமாள்= உயிருள் உறைகிறவன்.

**பொழிப்புரை** : மாமேருமலையை ஓர் ஆயுதமாகக்கொண்டு எழுகடல்களையும் உறிஞ்சச்செய்து வெளிவிட்டும், நீண்ட சக்கரவாளமலையை ஒரேதோளில் சுமக்கும்கயிறாகத் தனது வலிமையான தோளில் சுமந்தும், புகழ்வாய்ந்த திசையானைகள் எட்டையும் எட்டுநாகங்களால் கட்டித் தன்காதணியாக அணிந்தும், பெரிய உலகைச் சுமக்கும் ஆமையை அற்பமாகவிளங்குவது என்று ஒதுக்கியும்சிறப்புடன் விளையாடும் பூதகூட்டத்துடன்போய் அசுரர்களை வேட்டையாடும் வீரனே! என்உயிருள் உறைகிற முருகனே! வெற்றிபொருந்திய தேவர்கள் முனிவர்கள் தலைவனே! கார்மேகம்போல் கருணைபொழியும் திருப்போரூரனே! குகனே! வருக. பெரியஉலகம் முழுவதையும் மிகவிரைந்து நொடியில் வலம்வரும் விரும்பத்தக்க கந்தனே! வருக.

**விளக்கம்** : பூதப்படையின் ஆற்றலைக் கூறுவதன் மூலம் அதனைஆளும் முருகப்பிரானின் பேராற்றலை உணர்த்தினார். ( 4 )

( 56 ) அளகுபல முட்டைதன் சிறைகொண்(டு) அணைக்குமா(று) அண்டரா சிகள்அனைத்தும்
அகலப் பெருஞ்சிறையில் விகலப் பொருட்போல் அடக்கிவைத் தும்விடுத்தும்
கள(வு)அகல வருசுத்த மாயைவெளி முழுவதும் கடந்(து)ஒரு கணத்தில்வந்தும்
கலிசுவே தத்தில்எழு சலராசி தந்(து)ஊழிக் காலஅழல் வெகுளிதந்தும்
புளகம்எழு மெய்ச்சிறை அடித்துப்பிர சண்டப் பெருங்கால் அளித்துநச்சுப்
புழைஎயிற்(று) உரகன்மணி இரவிதந் தும்சிறைப் பொருவில்நிழல் மதிஅளித்தும்
வளமையுடன் நடனம்இடு மாயூர போரூர மாவீர குகவருகவே
மலிபுவனம் முழுவதும் கிடுகி(டு)என நொடியில்வலம் வருகந்த வேள்வருகவே.

**குறிப்புரை** : அளகு= கோழி / பெண்அன்னம். ராசிகள்= கூட்டம். சிறை= சிறகு. விகலப்பொருள்= சிறியபொருள். களவு அகலவரு= வஞ்சனையின்றித் தோன்றும். கலி சுவேதம்= ஒலிக்கும் பாற்கடல். ஊழிக்கால அழல்= ஊழிக்காலத்துத்தீ. புளகம் எழுமெய்= மயிர்சிலிர்க்கும் உடம்பு. பிரசண்டகால்= சூறாவளி. உரகன்= பாம்பு - ஆதிசேடன். இரவி= சூரியன். பொருவில்நிழல்= ஒப்பற்ற குளிர்ச்சி.

**பொழிப்புரை** : பெண்அன்னம்தன் முட்டையை சிறகுகளால் அணக்குமாறுபோல, அண்டத்தில் கூட்டமாக உள்ள அனைத்தையும் தனது அகலமான பெரிய சிறகுகளால் மிகச்சறிய பொருள்போல் அணைத்தும், வெளிப்படுத்தியும்; வஞ்சனையின்றித்தோன்றும் மாயையாலான அண்டவெளிமுழுவதையும் ஒருநொடியில் கடந்தும்மீண்டுவந்தும்; வெண்மையான பாற்கடலில் தோன்றிய உயிர்களை வெளிப்படுத்தி ஊழிக்காலத்து நெருப்பையும், தனது சினத்தையும் தந்தும்; மயிர்சிலிர்க்கும் தனது உடம்பின் சிறகுகளை அடிப்பதன்மூலம் சூறாவளிக் காற்றை உண்டாக்கியும், விடமுடையதும் துளையுடையதும் ஆகிய பற்களையுடைய ஆதிசேடனின் மாணிக்கமணியை வெளிப்படுத்திச் சூரிய ஒளியை உண்டாக்கியும், ஒப்பற்ற குளிர்ச்சியான ஒளிதரும் நிலவை உண்டாக்கியும் மிகச்சிறந்த நடனமாடும் மயிலினை ஊர்தியாக உடையவனே! திருப்போரூரனே! பெருவீரனே! குகனே! வருக. பெரிய உலகம் முழுவதையும்மிகவிரைந்து நொடியில் வலம்வந்த குகனே! வருக.

**விளக்கம்** : வேல் பிளக்க, முருகப்பெருமானுக்குச் சூரபத்மன், மயிலாகவும் சேவலாகவும் வெளிப்பட்டதால் மயில் சேவல் ஆகிய இரண்டும் அவ்வரக்கனது பேராற்றல் உடையனவாகக் கூறும் இலக்கிய மரபுபற்றி இவ்வாறு உரைத்தார். ( 5 )

( 57 ) பூதம் புலன்பொறிகள் கரணம் குணம்பகுதி புகலறு கலாதிசுத்தம்
பொருவில்இரு மாயையும் காணவரு ஆணவப் பொங்(கு)இருளும் ஊடுருவியே
பேதம் களைந்(து)உயிர்ப் போதங்க லைந்துகலை பேசொணா நேர்மை வெளியாய்ப்
பேராயி ரம்கோடி சூரியரும் மட்கப் பிறங்கிஎழு ஞானஒளியாய்
ஏதம்கடந்(து)உள் புறம்(பு)ஆதி யாவைக்கும் இன்பபரி பூரணம்அதாய்

இல(கு)அருட்  சத்தியே சத்தியா கக்கையில் எடுத்தஞா னச்சேவகா
மாதம் கனங்கள்மும் மாரிபொழி போரூர மாயூர குகவருகவே
மலிபுவனம் முழுவதும் கிடுகி(டு)என நொடியில்வலம் வருகந்த வேள்வருகவே.

**குறிப்புரை** : பூதம்= ஐம்பூதங்கள். புலன்= ஐம்புலன்கள். பொறிகள்= ஐம்பொறிகள். கரணம்= அந்தக்கரணங்கள் - மனம் புத்தி சித்தம் அகங்காரம். குணம் பகுதி= இராசதம் தாமதம் சாத்துவிகம் ஆகிய குணங்களின் கூறுகள். கலாதி= 64 கலைகள். பொருவில் சுத்தம் இருமாயை= ஒப்பற்ற தூய சுத்தமாயை அசுத்தமாயை. காணவரு= இவற்றால் வரும். பொங்குஇருள்= மேன்மேலும் மிகும்இருள். கலைந்து= கடந்து. கலை பேசொணா= கலைகளால் கூறவியலாத. மட்க= ஒளிகுன்ற. அருட்சத்தியே சத்தியாக= அருளேவடிவான அம்மையையே தன் ஆற்றலாக - வேலாக.  சேவகன்= வீரன். கனங்கள்= மேகக்கூட்டம்.

**பொழிப்புரை** : நிலம் நீர் தீ வளி விசும்பு ஆகிய ஐம்பூதங்கள், கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்று அறியும் ஐயறிவுகள், மெய் வாய் கண் மூக்கு செவியாகி ஐந்து கருவிகள், மனம் புத்தி சித்தம் அகங்காரம் ஆகிய உட்கருவிகள், இராசதம் தாமதம் சாத்துவிகம் ஆகிய முக்குணங்களின் கூறுகள், 64 கலைகள், ஒப்பற்ற சுத்தமாயை அசுத்தமாயை ஆகியவற்றால் விளையும் ஆணவம் ஆகிய மேன்மேலும் மிகும்இருள் ஆகியவற்றைக்கடந்து, வேறுபாடின்றி, உயிர்களின் அறிவை - பசுஞானத்தைக் கடந்து, கூறுதற்கரிய நீதிவெளியாக விளங்கி, புகழ்வாய்ந்த ஆயிரம்கோடி சூரியர்களின் ஒளியும் குன்றவிளங்கித் தோன்றும் ஞான ஒளியாக நின்று, குற்றங்களைக்கடந்து, உயிர்களின் உள்ளும் புறம்பும் ஆகி, எவற்றுக்கும் முழுமையான இன்பமாக விளங்கி, அருட்சத்தியே சத்திஆயுதமாக - வேலாகக் கையில்ஏந்திய ஞானமே தனதுவடிவான வீரனே! மாதந்தோறும் மேகக்கூட்டம் மும்மழை பொழியும் போரூரனே! மயில் ஊர்தியனே! குகனே! வருக. பெரிய உலகம் முழுவதையும் மிகவிரைந்து நொடியில் வலம்வரும் கந்தனாகிய விரும்பத்தக்கவனே! வருக. ( 6 )

( 58 ) கருத்தே புகுந்து கதிகாட்டும் கண்ணே வருக மெய்ஞானக்
கரும்பே வருக கருணைபொழி காரே வருக ஆனந்தப்
பெருக்கே வருக யாங்கள்பெறும் பேறே வருக மறைசொல்கிளிப்
பிள்ளாய் வருக பிறங்குதெய்வப் பெம்மான் வருக குறமடந்தை
தருக்கே வருக மிடிஅகற்றும் தருவே வருக மன்பதைக்(கு)ஓர்
தஞ்சே வருக எமைஅளிக்கும் தாயே வருக பவப்பிணிக்கு
மருந்தே வருக மறையின்சீர்ப் பொருளான வள்ளல் வருகவருகவே
மறையின் சீர்மெய்ப் பொருளான வள்ளல் வருக வருகவே..

**குறிப்புரை** : கருத்து மனம். கதி= வீடுபேற்றுக்கு வழி. கண்= ஞானம். தருக்கு= களிப்பு. மிடி= வறுமை. தஞ்சு= அடைக்கலம் புகுமிடம்.

**பொழிப்புரை** : மனத்தில் புகுந்து வீடுபேற்றுக்கு வழிகாட்டும் ஞானியே! சிறந்த ஞானமாக விளங்கும் கரும்பே! கருணைமழைபொழியும் கார்மேகமே! ஆனந்த வெள்ளமே! நாங்கள் அடையும் நற்பேறே! வேதத்தால் ஓதப்படும் கிளிப்பிள்ளையே! அருள்விளங்கும் பெருமானே! வள்ளிநாயகியின் களிப்பாக உள்ளவனே! எமது வறுமையைப்போக்கும் கற்பகமரமே! உலகிற்கு வாய்த்த அடைக்கலப் பொருளே! எம்மைக்காக்கின்ற தாயே! பிறவிப்பிணி தீர்க்கும் மருந்தே! மறைகளில் விளங்கும் சிறப்புவாய்ந்த பொருளான வள்ளலே! வருகவருக. ( 7 )

( 59 ) வட்(டு)ஆட்(டு) ஆகும் எங்கள்பவம் மாற்ற வருக பொறிவேழம்
வணக்க வருக மனமாவை மாய்க்க வருக மலச்சிறையை
விட்(டு)ஆட் கொண்டு மெய்ஞ்ஞானம் விளக்கவருக வியன்அருளே
மேலீ(டு) ஆக்கி எங்கும்நிறை மிளிர்பே ரின்பம் தரவருக
தட்டா(து) இருந்த சிவமென்றும் தானென்(று) இளைக்கும்  மயல்அகற்றித்
தானே அதுவாய் அதுதானாய்த் தயங்கும் மோனம் தரவருக
மட்(டு)ஆர் சோலைச் சமரபுரி வாழ்வே வருக வருகவே
மறையின் சிரமெய்ப் பொருளான வள்ளல் வருக வருகவே.

**குறிப்புரை** : வட்டு ஆட்டு= சூதாட்டம். பவம்= பிறப்பு. பொறிவேழம்= ஐம்புலன்களாகிய மதயானை. வணக்க= கீழ்ப்படியுமாறு செய்ய. மனமா= மனமாகிய விலங்கு. வியன்= மேலான. மேலீடு= மேம்பட்டது. தட்டாது= குறைவின்றி. மயல் = மனமயக்கம். மட்டு= தேன். சிரம்= உச்சி.

**பொழிப்புரை** : சூதாட்டம் போன்ற எமது பிறவியை ஒழித்து வீடுபேறுதரவும், புலன்களாகிய மதயானையை அடக்கிக் கீழ்படியவைக்கவும், மனமாகிய விலங்கின் தன்மையை ஒழிக்கவும், எம்மை மும்மலமாகிய சிறையிலிருந்து மீட்டு ஆட்கொண்டு மெய்ஞ்ஞானம் வழங்கவும், மேலான அருளை அனைத்தினும் மேம்பட்டதாக்கி அருள்ஒளிரும் பேரின்பம் தரவும், தன்னைக் குறைவின்றி உள்ள சிவபரம்பொருள் என்று தருக்கும் மனமயக்கம் நீக்கிச் சிவம்தானாகவும் தான்சிவமாகவும் விளங்கும் மௌனநிலைதரவும் வருக. தேன் சொரியும் சோலைகளுடைய திருப்போரூரில் எம்வாழ்வுப்பொருளாக உள்ளவனே! வருகவருக. உபநிடதங்கள் கூறும் ஞானவடிவான வள்ளலே! வருக வருக.

**விளக்கம்** : " சூது, சிறுமை பல செய்து சீரழிக்கும் " என்பதுபொய்யாமொழி (934). பிறப்பும் இத்தகையதே என்றார். " உரனென்னும் தோட்டியான் ஓரைந்தும் " என்ற திருக்குறளில் தொகைக்குறிப்பாக வந்த ஓரைந்து என்பது "பொறிவேழம்" என்று வந்தது. இதில் பொறிஎன்பது ஆகுபெயர். தானே அதுவாய் அதுதானாய் என்பது சிவத்துடன் ஆன்மா வேறுபாடின்றிக்கலந்த அத்துவிதநிலை குறிப்பது.

**இலக்கணக்குறிப்பு** : வட்டாட்டு ஆகும் பவம்- உவமையணி. பொறிவேழம், மனமா, மலச்சிறை - உருவகங்கள். ( 8 )

( 60 ) உயிருள் மருவு திமிரம்இரிய ஒளிரும் அளவில் பரிதியே
உததி பொருவு கருணைஅமு(து)என் உளனுள் உதவு மதியமே
இயலின் மதுரம் முழுதும்அறியும் இசைகொள் பெரிய புலவனே
இரவும் பகலும் நினையும்அடியர் இதய நகரின் அரசனே
கயிலை இறைவர் மகிழஒருசொல் கழறு பரம குரவனே
ககன சுரர்கள் முடிகள்தடவு கமல சரணக் கடவுளே
மயிலின் முதுகில் உதயகுமரன் வருக வருக வருகவே
மகிமைதழுவு சமரபுரியன் வருக வருக வருகவே.

**குறிப்புரை** : மருவு= பொருந்திய. திமிரம்= ஆணவம். உததி= கடல். இயல்= இயற்றமிழ். இசை= புகழ். ஒருசொல்= ஓங்காரம். ககன சுரர்கள்= வானுலகத் தேவர்கள். மகிமை= பெருமை.

**பொழிப்புரை** : உயிருள் பொருந்திய ஆணவஇருள் ஓட அளவிடற்கரிய ஒளிவீசும் ஞாயிறே! கடலினை ஒத்த கருணைஅமுதத்தை என்னுள்ளத்தில் உதவும்வெண்ணிலவே! இயற்றமிழின் இனிமைமுழுவதையும் அறிந்த புகழ்வாய்ந்த பெரும்புலவனே! இரவும் பகலும் இடைவிடாது உன்னை நினைக்கும் அடியவர்களின் இதயமாகிய நகரத்தின் அரசனே! சிவபிரான் மகிழ ஓங்காரப்பொருள் உரைத்த மேலான குருவே! வானுலகத்தேவர்கள் தத்தம் தலைகள் பொருந்த வணங்கும் தாமரைத்திருவடியனே! மயிலின் முதுகில் ஏறிவரும் உதயஞாயிறு போன்று என்றும் இளையவனே! பெருமை பொருந்திய திருப்போரூர்க்கு உரியவனே! வருக வருக வருக. ( 9 )

( 61 ) அறைய அரிய கருவிஅடவி அருக ஒழுகு நதியமே
அறிவில் சமய அரிகள்வெருவி அலற முடுகு சரபமே
நிறைகொள் பரம சுகமெய்அடியர் நினைவில் உதவு பிரமமே
நிகழும் அயனும் அறியஅரிய நிமல ஒளியுள் மதுரமே
கறைகள் இரிய எனதுமனது கஞலி நிலவு புணரியே
கலக வினைஅ னலைஅடுநல் கருணைபொழியும் எழிலியே
மறைகள் குலவு கமலசரணன் வருக வருக வருகவே
மகிமை தழுவு சமரபுரியன் வருக வருக வருகவே.

**குறிப்புரை** : அறைய அரிய= அளவிடற்கரிய. கருவி= மேகம். அருக= சிறிதாகத்தோன்றுமாறு சமய அரிகள்= சமயச் சிங்கங்கள். சரபம்= சரபப்பறவையே ( சரபப்பறவை, நரசிம்மத்தின் வெறியை அடக்கிய எண்கால் பறவை ) பிரமம்= இறைவன். நிகழும்= ஞானஒளியுடைய. நிமலம்= மலம்ஏதும் இல்லாத. கஞலி= விளங்கி. நிலவு= நிலைபெற்ற. புணரி= கடல். வினைஅனல்= இருவினையாகிய நெருப்பு. அடு= அணைக்கும். குலவு= கொண்டாடும்.

**பொழிப்புரை** : அளவிடற்கரிய மேகக்கூட்டத்தால் காடும்சிறியது என்றுகூறுமாறு பெருகிஓடும் பேராறே! அறிவற்ற சமயச்சிங்கங்கள் அஞ்சிப்புலம்ப விரையும் சரபப்பறவையே! முழுமையான மேலான சுகம் அனுபவிக்கும் அடியார்களின் மனத்தில் தோன்றி உதவும் இறைவனே! ஞானஒளியுடைய நான்முகனாலும் அறிவதற்கரிய மலமில்லாத ஒளிவடிவான இனிமையனே! என் உள்ளக்களங்கங்கள் ஓட என்மனத்தில் நிலவி விளங்கும் கடலே! பிறவிக்கலகம் விளைவிக்கும் நெருப்பினை அணைக்கக் கருணையாகிய மழைபொழியும் மேகமே! வேதங்கள் கொண்டாடும் தாமரைத் திருவடியனே! பெருமை பொருந்திய திருப்போரூரனே! வருக வருக வருக. ( 10 )

.

### 7. அம்புலிப்பருவம்

(இவனுடன் விளையாடவா என்று செவில, சந்திரனை அழைப்பது. இது பன்னிரண்டாம் மாதத்தது)

( 62 ) மானை ஆகம் தழுவுவாய் இவனும் உழைதந்த மானை ஆகம் தழுவுவான்
வனைசடைக் கங்கைஅலை தவழ்குழவி நீஅதின் மடித்தலக் குழவிஇவனும்
தேன்அனைய மொழிஅறுவர் மகிழவரு வாய்இவன் திகழும்அவர் மகிழவருவான்
சிவன்அடியும் முடியும்நீ அறிதிமற்(று) இவன்சிறுவிரல் சுட்டிஅறிவான்
சோனை மழைஎன அமுதுபொழி கிரணன் நீஇவன் சுககருணை அமுதுபொழிவான்
துன்இருள் கிழித்துஎழும் சோதிநீ இவன்அடியர் துகள்இருள் கிழித்தசோதி
ஆனஇம் முறைமைகொடு நீநிகர்தி யால்மகிழ்ந்(து) அம்புலீ ஆடவாவே
அருமறையின் ஒலிநிலவு சமரபுரி முருகனுடன் அம்புலீ ஆடவாவே.

**குறிப்புரை** : மான்= களங்கம். உழைதந்த மான்= மானீன்ற வள்ளிநாயகி. வனை= அலங்கரிக்கப்பெற்ற. அதின்= அதுபோல். மடித்தலக்குழவி= மடியில் அமரும் குழந்தை. அறுவர்= விண்மீன் ஆகிய மகளிர். அவர்= அம்மாதர் - கார்த்திகை மாதர். சிவன் அடியும் முடியும்= சிவனிடம் சரணடைந்ததால் காலும், அவன்தன் தலையில் சூடிக்கொண்டதால் முடியும். சோனைமழை= இடைவிடாச் சிறுமழைத் தூறல். துன்= செறிந்த. துகள்= குற்றம். .

**பொழிப்புரை** : நிலவே! நீ களங்கமாகிய மானை உன்உடம்பில் பெற்றுள்ளாய். இம்முருகன் மானீன்ற மான் ஆகிய வள்ளியை உடம்பொடு தழுவுவான். நீ மேலான அலங்கரிப்பைப் பெற்ற சடையில் உள்ள கங்கை அலையில் மூன்றாம் பிறையாகத் தவழும் குழந்தை. அதுபோல் இவன் அவனது மடிஇடத்தில் தவழும் குழந்தை. நீ இன்சொல்பேசும் விண்ணகமாதர் அறுவர் மகிழ வாழ்கிறவன். இவன் கார்த்திகைமாதர் மகிழவந்தவன். நீ சிவனைச் சரணடைந்தபோது அவனது திருவடியையும் அவன் தலையில் சூட்டிக்கொண்டதால் முடியையும் அறிந்தவன். இவன் அச்சிவபிரானது அடிமுடியைத் தனது சிறிய விரலால் சுட்டிக்காட்டி அறிவான். நீ இடைவிடாத சிறுதூறல்போல் அமுதம்பொழியும் கிரணங்கள் உடையவன். இவன் அனைவர்க்கும் சுகம்தரும் கருணைமழை பொழிகிறவன். நீ செறிந்த இருளைக் கிழித்துத் தோன்றும் ஒளியுடையவன். இவன் அடியவர்களின் குற்றமாகிய இருளை ஓட்டும் ஒளிவடிவன். இவ்வகையிலான ஒற்றுமைகளால் நீ இவனை ஒப்பாய் என்பதால் மகிழ்ந்து அம்புலியே! இவனுடன் விளையாடவா. சிறந்த மறைகளின் ஒலிவிளங்கும் திருப்போரூர் முருகனுடன் அம்புலியே! இவனுடன் விளையாடவா. ( 1 )

( 63 ) சுரர்சிலர்க்கு அமு(து)உதவி நீதேய்வை கதிஅமுது தொல்லுயிர்க்(கு) உதவிநிறைவான்
தோம்உறு களங்கன்நீ இவன்அடியர் கனவினும் சொல்லுறு களங்கம் அறியார்
உரஅரவி னுக்குநீ வெருவுவாய் அஃதும்இவன் ஊர்பரிக்(கு) ஒருகவளமாம்
உலகைவலம் வரஉனக்(கு) ஒருதினம் செல்லும்இவன் ஒருநொடியில் ஓடிவருவான்
இரவினுக்(கு) உரியஒளி நீஇவன் அகம்புறத்(து) எக்காலும் மிக்கஒளியான்
எய்துதண் அளிசிலர்க்(கு) உடையைநீ அனைவர்க்கும் இவன்எண்ணும் தண்அளியினான்
அரன்முதல் எவர்க்கும்ஒரு குரவன்இவன் ஆதலால் அம்புலீ ஆடவாவே
அருமறையின் ஒலிநிலவு சமரபுரி முருகனுடன் அம்புலீ ஆடவாவே.

**குறிப்புரை** : சுரர்= தேவர்கள். கதிஅமுது= ஈடேற்றமாகிய அமுதம். தொல்லுயிர்= அழிவற்ற உயிர். தோம்= குற்றம். உரஅரவு= வலிமைவாய்ந்த இராகுகேது பாம்புகள். ஊர்பரி= ஏறிவரும் குதிரையாகிய மயில். சிலர்= கணவனொடு / காதலனொடு வாழ்கிறவர். எண்ணும்= நினைக்கும்

**பொழிப்புரை** : நீ தேவர்கள் சிலர்க்கு அமுதம் பரிமாறியபோதும் நாளும் தேய்வாய். இவன் அழிவற்ற உயிர்களுக்கு ஈடேற்றம் அருளியபோதும் பரிபூரணனாகவே இருக்கிறான். நீ கறையாகிய குற்றம்பொருந்திய களங்கமுடையவன், இவனது அடியவர்கூடச் சுட்டிச்சொல்லத்தக்க களங்கம் அறியார். நீ வலிமைவாய்ந்த இராகு கேதுஎன்ற பாம்புகட்கு அஞ்சுவாய், அவை இவனது ஊர்தியாகிய மயிலுக்கு ஒரு கவளஉணவே ஆகும். உனக்கு இவ்வுலகை வலம்வர ஒருநாள் ஆகும், இவன் ஒருநொடியில் உலகை வலமாக ஓடிவருவான். நீ இரவில் மட்டும் ஒளிர்கிறவன், இவன் அடியவர் அகம்புறம் இரண்டிலும் எக்காலமும் ஒளிர்கிறவன். நீ தம்முள் சேர்ந்திருக்கும் காதலர்கட்கும் இல்லறத்தார்க்கும் மட்டுமே மகிழ்ச்சி தருகிறவன், இவன் தன்னை நினைக்கும் அனைவர்க்கும் கருணைகாட்டி மகிழ்விப்பவன். சிவபிரான் முதலிய எவர்க்கும் இவன் குருவாவான், நீ அப்படியல்லன். எனவே அம்புலியே இவனோடு விளையாடவா. சிறந்த மறைகளின் ஒலி விளங்கும் திருப்போரூர் முருகனுடன் அம்புலியே! விளையாடவா. ( 2 )

( 64 ) மயிலும்அயி லும்கொண்டு வன்பகை தவிர்க்கலாம் மலரடித் தோணிகொண்(டு)உன்
மாறாத பவசலதி ஏழும் கடக்கலாம் வானுலகு தொழவாழலாம்
வெயில்ஒளியும் நிகரல எனப்புகல மெய்ஞ்ஞானம் மிக்கஒளி பெற்றுய்யலாம்
வீடகத்(து) இருந்(து)அமு(து) அருந்தலாம் மிகுதுகள் சிறைகடியலாம்
குயில்அனைய மொழியார் முகத்தினுக்(கு) ஒப்(பு)எனக் கூறாத பெருமையுறலாம்
கொடியகய நோய்அகன்று எப்பொழுதும் ஒல்காத குலிசம்என வடிவுபெறலாம்
அயிலைமுள ரிக்கரம் கொண்டசே வகனுடன் அம்புலீ ஆடவாவே
அருமறையின் ஒலிநிலவு சமரபுரி முருகனுடன் அம்புலீ ஆடவாவே.

**குறிப்புரை** : அயில்= கூரியவேல். பவசலதி= பிறவிக்கடல். வீடு= வீடுபேறு. துகள் சிறை= களங்கமாகிய சிறை. கயநோய்= தட்சனுடைய சாபத்தால் வந்த சயரோகம். ஒல்காத= சுருங்காத - குறையாத. முளரிக்கரம்= தாமரைக் கரம்.

**பொழிப்புரை** : நீ இவனுடன் விளையாட வந்தால்; இவனது கூரிய வேல் மயில் இவற்றின் துணைகொண்டு உன்கொடிய பகைவர்களை வெல்லலாம்; இவனது தாமரை மலர்போன்ற திருவடித் தோணிமூலம் இதுவரை கடக்காதிருக்கும் உன்பிறவிக்கடல் ஏழினையும் கடக்கலாம்; தேவர்களும் வணங்க வாழலாம்; சூரியனின் ஒளியும் ஒப்பாகாது என்று பிறர்கூறுமாறு மெய்ஞ்ஞானம் மிக்க ஒளியைப் பெற்று ஈடேறலாம்; வீடுபேற்றில் இருந்துகொண்டு அமுதம் துய்க்கலாம்; நீங்காது இருக்கும் மிக்ககளங்கமாகிய சிறையினை ஓட்டலாம்; குயில்போன்ற இன்சொல்கூறும் மகளிர் முகத்திற்கு ஆண்மகனாகிய நீ ஒப்புஎன்று பிறர் கூறாத பெருமையைப் பெறலாம்; தட்சனது சாபத்தால் ஏற்பட்ட கொடிய சயரோகத்திலிருந்து விடுபட்டு இந்திரனது குலிசாயுதம் போன்ற வலிமையான உடம்பு பெறலாம். எனவே கூரிய வேலினைத் தாமரைமலர் போன்ற கையில் ஏந்திய இவ்வீரனுடன் அம்புலியே! விளையாடவா. சிறந்தமறையின் ஒலிவிளங்கும் திருப்போரூர்முருகனுடன் அம்புலியே! விளையாடவா.

( 65 ) கஞ்சாத னத்தனைச் சிறையிடுவன் முத்தமிழ்க் கவிஞனைச் சிறைவிடுப்பன்
கரியகுன்(று) அடுவன்இருள் கடியும் குணக்குன்று கனகும்ப னுக்(கு)அருள்வன்
எஞ்சாத கடல்அழித்(து) அரிவை முரு காஎன்(று) இசைக்க அருள்வா ரிதிதருவன்
இகல்அவுணர் களைகட்(டு) அடைந்த கடவுளர்எனும் இரும்பயிர் தழைப்பவைப்பன்
நஞ்சாய சமணர்கழு ஏறவிட்(டு) அடியர்நா டொறும்ஈ டேறவருவன்
நவைதழுவு புத்தன்முடி இடறிஅழல் அடும்என்பை நளினமங் கைக்(கு)இணைசெய்வன்
அஞ்சா(து)இருந்திடேல் இவன்வெகுளி கொள்ளுமுன் அம்புலீ ஆடவாவே
அருமறையின் ஒலிநிலவு சமரபுரி முருகனுடன் அம்புலீ ஆடவாவே.

**குறிப்புரை** : கஞ்ச ஆதனன்= தாமரையை இருக்கையாகக் கொண்ட நான்முகன். கவிஞன்= நக்கீரர். கரியகுன்று= கிரவுஞ்சமலை. அடுவன்= தூளாக்குவான். கனகும்பன்= பெரிய அகத்தியர். வாரிதி= கடல். களைகட்டு= களைபிடுங்கி. கழுவேற விட்டது சமணரை. புத்தநந்தி முடியைஇடறியது, அழல் என்பை = வெந்த எலும்பை. நளினமங்கை = திருமகள். சமணரைக் கழுவேற்றியது புத்தநந்தியை இடறியது வெந்த எலும்பைப் பெண்ணாக்கியது ஆகியன திருஞானசம்பந்தர்க்குரியன.

**பொழிப்புரை** : இவன் நான்முகனைச்சிறையில் அடைப்பான், முத்தமிழ்க் கவிஞனாகிய நக்கீரரைச் சிறைவிடுப்பான். கரிய கிரவுஞ்சமலையத் தூளாக்குவான் பெரியகுணக்குன்றான அகத்தியர்க்கு அருள்புரிவான். மிகப்பெரிய கடலினை அழித்து, அழைத்தபெண் முருகாஎன்று உன்னை அழைத்த அளவில் அவளுக்கு அருட்கடலினைத் தந்தான். மாறுபட்ட அசுரராகிய களைகளைப் பறித்தெரிந்து, தன்னைச் சரணடைந்த கடவுளராகிய பயிர்கள் தழைக்கச்செய்தான். நஞ்சாக விளங்கிய சமணர்கள்களைக் கழுவேற்றி அடியவர் நாடோறும் ஈடேற வருவான். குற்றமுடைய புத்தநந்தி இறக்கவும், தீயில் வெந்த பூம்பாவை எலும்பைத் திருமகள் போன்ற பெண்ணாகவும் செய்தான். எனவே இவனுக்கு அஞ்சாமல் இருக்காதே! இவன் உன்னைச் சினக்குமுன் இவனுக்குஅஞ்சி அம்புலியே! இவனுடன் விளையாடவா. சிறந்த மறையின் ஒலிமுழங்கும் திருப்போரூர் முருகனுடன் அம்புலியே! விளையாடவா.

**விளக்கம்** : ஊனுடம்புடன் பிறந்து அருட்செயல்கள் புரிந்த பிறமூவரை ஒதுக்கித் திருஞானசம்பந்தரைமட்டும்முருகனாகக் கூறியது அக்கால ஆதிக்கமனத்தைப் புலப்படுத்துகிறது. ( 4 )

( 66 ) முக்கண்நா யகன் அரிய திருநுதல் குறுவியர்வின் மூரிவடவையின் உதித்தோன்
மூதண்ட கோளகை கிழித்(து)எழுந்(து) ஆயிர முகந்தொறும் வெகுளிபொழியத்
தக்கன்மக சாலையுள் புக்கியங்(கு) உறைகின்ற சதகோடி தேவரையெலாம்
சாடிக்கொ ழுங்குருதி ஆடிப் பெருந்தூளி ஆடித்த ருக்கிஆடி
மிக்கஉன(து) உடலம்ஒரு கறியாக மாநிலம் மிகுத்தபே ரம்மியாக
மேன்மைதரு பாதவெங் குழவிகொ(டு) அரைத்தனன் வியர்வினல் அவனைஉதவும்
அக்கடவுள் கண்கனலம் இக்குழவி நீவிரைந்து அம்புலீ ஆடவாவே
அருமறையின் ஒலிநிலவு சமரபுரி முருகனுடன் அம்புலீ ஆடவாவே.

**குறிப்புரை** : முக்கண் நாயகன்= சிவபிரான். மூரிவடவை= வலிமையான வடவைத்தீ. உதித்தோன்= தோன்றிய வீரபத்திரக்கடவுள். அண்ட கோளகை= உருண்டையான அண்டம். மகசாலை= தக்கனுடைய யாகசாலை. சதகோடி= நூறுகோடி. சாடி= அடித்து. தூளியாடி= தூளாக்கி. உனது= சந்திரனாகிய உனது. மிகுத்த= மிகப்பெரிய. பாதவெங் குழவி= பாதமாகிய சினம்மிக்க அம்மிக்குழவி. வியர்வினால்= வியர்வையால். அவனை= வீரபத்திரக்கடவுளை. கண் கனல் அம்இக்குழவி= கண்ணின் தீப்பொறியால் வெளிப்பட்ட அழகிய இக்குழந்தை - முருகன்.

**பொழிப்புரை** : குறுவியர்வையாகிய வலிமையான வடவைத்தீயில் தோன்றிய வீரபத்திரக்கடவுள், தொன்மையான அண்ட உருண்டையைக் கிழித்துக்கொண்டு, ஆயிரம் இடங்கள்தோறும் சினம்பொழிய, தக்கனது யாகசாலையில் புகுந்து அங்கிருந்த நூறுகோடி தேவர்கள் அனைவரையும் அடித்துக் குருதிமயமாக்கி, மிக்க தூளியாக்கி, செருக்குடன்ஆடி, அங்கிருந்த சந்திரனாகிய உனது உடம்பைக் கறியாகவும், பெரிய உலகை மிகப்பெரிய அம்மியாகவும், மேன்மைதரும் தனது பாதத்தைத் சினம்மிக்க அம்மிக்குழவியாகவும் கொண்டு அரைத்தான். வியர்வையால் வீரபத்திரக் கடவுளை உதவிய அந்தச்சிவபிரானின் நுதற்கண் தீயால் வந்தவனே அழகிய இக்குழந்தை. எனவே அம்புலியே! விரைந்து இவனுடன் விளையாடவா. சிறந்த மறைஒலி விளங்கும் திருப்போரூர் முருகனுடன் அம்புலியே! விளையாடவா. ( 5 )

( 67 ) விரவுபல அண்டங்கள் உட்டை எனவைத்து விளையாடு பைங்கழற்காய்
விரிகருவி ஆ(று)ஆறும் இவன்ஏவல் தலைகொண்ட வீறுஊழி யக்காரராம்
பொரு(வு)அரிய இருமாயை இவன் உளம் நினைத்தபடி புரிகின்ற தாதியர்களாம்
பூரணத் திரள்ஞான வாரிஎழு சுவைஅமு(து) போசனம் இவன்தனக்கே
கருதரிய மறைநாலும் இவன்அர(சு) இருக்கும்ஒரு கதிர்மணிச் சிங்க அணையாம்
ககனசுரர் அனைவரும் இவனைப்ப ணிந்துகை கட்டும்பெ ரும்சேனையாம்
அரிபிரமர் இவனுக்(கு) அமைச்சராம் ஆதலால் அம்புலீ ஆடவாவே
அருமறையின் ஒலிநிலவு சமரபுரி முருகனுடன் அம்புலீ ஆடவாவே

**குறிப்புரை** : விரவு= கலந்த. உட்டைப் பைங்கழற்காய்= உருண்டையான வளமான கழற்சிக்காய். விரிகருவி ஆறு ஆறு= பலவாக விரிந்துள்ள தத்துவங்களின் கருவிகள் 36 . அவை ஆன்ம தத்துவம் 24 + வித்யா தத்துவம் 7 + சிவதத்துவம் 5 = 36. பொருவுஅரிய= ஒப்பற்ற. இருமாயை= சுத்தமயை

அசுத்தமாயை. அமுதுபோசனம்= அமுதமாகிய உணவு. கதிர்மணிச் சிங்கஅணை= ஒளியுடன் அழகுமுடைய அரியணை. ககனர்= வானுலகத்தவர்.

**பொழிப்புரை** : தம்முட்கலந்துள்ள அண்டங்கள் இவன் விளையாடும் உருண்டையான வளமான கழற்சிக்காய்கள். மிகுந்துள்ள 36 கருவிகளும் இவனது ஏவலைமேற்கொண்டு பணிசெய்யும் ஆற்றல்மிக்க பணியாளர்கள். ஒப்பற்ற இருமாயைகளும் இவன்மனம் நினைத்தபடிச் செயற்படும் தாதியர்கள் - அடியவள்கள். ஞானக்கடலில் முழுமையாய்த்திரண்டு எழுந்த சுவையான அமுதம் இவனுக்கு உணவு. நினைப்பதற்கரிய நான்மறைகளும் இவன் வீற்றிருந்து அரசுபுரியும் ஒளியும் அழகுமுடைய அரியணைகள் . வானுலகத்தவர் அனைவரும் இவனுக்கு அமைச்சர்கள். இத்தகு சிறப்பும் ஒப்பற்ற உயர்வும் பெற்றவன் இவன் ஆதலால் இவனுடன் அம்புலியே! விளையாடவா. சிறந்தமறையின் ஒலிமுழங்கும் திருப்போரூர் முருகனுடன் அம்புலியே! விளையாட வா.

**இலக்கணக்குறிப்பு** : இச்செய்யுள் இயைபு உருவகவணி. ( 6 )

( 68 ) மேகசா லங்கள்ளன நீலக்க லாபம் விரித்துவிச் சித்ரகிரிபோல்
விண்டுவினை மேவிஓர் சண்டநா கத்(து)அணை விடுத்தவனை வேலை மூழ்கப்
பாகுவா ரிதிஅளறு படமொண்டு சிவலோக பரியந்தம் மேவிநின்று
பரமன்உல கும்பரந் தாமன்உல கும்பரி மளிக்கின்ற கமலன்உலகும்
போகமிகு கற்பகா டவிநீழல் வாழ்வே பொலிந்தபுரு கூதன் உலகும்
புகலறு மதிஉலகு கதிஉலகு இவ்வுலகு பொங்கப் பொழிந்துமீளும்
ஆகுஇறைவர் பின்வரும் தோகைஇறை தன்னுடன் அம்புலீ ஆடவாவே
அருமறையின் ஒலிநிலவு சமரபுரி முருகனுடன் அம்புலீ ஆடவாவே.

**குறிப்புரை** : மேகசாலம்= மேகக் கூட்டம். கலாபம்= தோகை. விசித்ரகிரி= அதிசயிக்கத் தக்கமலை விண்டு= வெளிப்பட்டு. சண்ட நாகத்து அணை= கொடிய பாம்பு அணை. விடுத்து= வெளியேற்றி. அவனை= திருமாலினை. வேலை மூழ்க= பாற்கடலில் மூழ்கச்செய்து. வாரிதி பாகுபட மொண்டு= கடல்நீர் பாகு ஆகுமாறு கலக்கி மொண்டு. பரியந்தம்= வரை. மேவிநின்று= பறந்துபோய். பரமன்= சிவபிரான். பரந்தாமன்= திருமால். கமலன்= நான்முகன். கற்பக் அடவி= கற்பகக்காடு. புருகூதன்= இந்திரன். கதி= மோட்சம். பொழிந்து= சேற்றுடன் கொண்டுவந்த நீரினைப்பெய்து. ஆகு இறைவர்= பெருச்சாளி ஊர்தியர் - கணபதி. தோகைஇறை= முருகன்.

**பொழிப்புரை** : மேகக்கூட்டம் போல்தனது நீலநிறத் தோகையை விரித்து, அதிசயிக்கத் தக்க மலைபோல் வெளிப்பட்டுச் செயற்பட்டு; கொடியநாக அணையை நீக்கி, அதில் அறிதுயில் கொண்டுள்ள திருமாலினை வெளியேற்றி அவனைக் கடலில் மூழ்கச்செய்து; கடல் நீர்பாகு ஆகுமாறு சேற்றுடன் கலக்கி, அதனை மொண்டுகொண்டு சிவலோகம் வரைசென்று, சிவலோகம், வைகுந்தம், மணக்கும் தாமரையில் உள்ள பிரமனதுஉலகம், போகப்பொருள்கள் மிக்க கற்பகக்காட்டின் நிழலில் பொலிவுடன் வாழும் இந்திரனுலகம், புகழ்வாய்ந்த சந்திரனுலகம், மோட்சஉலகம் ஆகிய இவ்வுலகங்களில் முன்பு தான் மொண்டுவந்த சேற்றுடன்கூடிய கடல்நீரினை மிகுதியாகப்பொழிந்து மீண்டுவருவதும், பெருச்சாளி ஊர்தியுடைய விநாயகருக்குப் பின்னேவருவதும் ஆகிய மயிலை ஊர்தியாகக் கொண்ட முருகனுடன் அம்புலீ! விளையாட வா, சிறந்தமறைகளின் ஒலிவிளங்கும் திருப்போரூர் முருகனுடன் அம்புலீ! விளையாடவா. ( 7 )

( 69 ) புலன்மறுகு பொறியைஉறு கமடமென உட்கொண்டு பொருமுக் குணங்கள்வென்று
பூரகம் இரேசகம் தாரகம் எனும்தொழில் புகன்றகா லில்பயின்று
கலகமறு நடுநாடி சென்றுமுச் சுடர்களின் கதிர்மண் டலம்கடந்து
கணபணா டவிஉரகன் முடியில் துளக்கம்அறு கம்பத்தின் அசைவற்றுளோர்
மலஇரவு விடியும்மிகு துற(வு)உணர்வு நசையறுதல் மலிகுணக் குன்றின்முடிமேல்
மன்னுஞா னக்கதிர் எழுந்துஒளி பரப்பமா றாதுதச நாதம்முழுதும்
அலகில்பவத் துயில்அறக் கூவுசே வலனுடன் அம்புலீ ஆடவாவே
அருமறையின் ஒலிநிலவு சமரபுரி முருகனுடன் அம்புலீ ஆடவாவே.

**குறிப்புரை** : . கமடம்= ஆமை. உட்கொண்டு= அடக்கிக்கொண்டு. முக்குணம்= தாமதம் இராசதம் சாத்துவிகம். பூரகம்= மூசுக்காற்றினை உள் இழுத்தல். இரேசகம்= மூச்சுக்காற்றை வெளிவிடல். தாரகம்= வாயுவை உள்ளேயே நிறுத்துதல். கால்= மூச்சுக்காற்று - பிராணக்காற்று . பயின்று= பழகி. கலகம்= கேடு. நடுநாடி= மூலாதாரத்தினின்று உச்சித்துவாரம் வரை இருக்கும்நாடி. முச்சுடர்= ஞாயிறு திங்கள் அக்கினி. கதிர் மண்டலம்= ஒளிக்குவியல். கண பணாடவி உரகன்= பருத்த படமுடைய பாம்பு. துளக்கம் அறு= அசைவற்ற. கம்பத்தின்= தூண் போல. மல இரவு= மும்மல இருள்

**பொழிப்புரை** : ஐம்புலன்களையும் அவற்றுடன் பொருந்திய பொறிகளையும் அவற்றைப்பெற்ற உயிரின் முக்குணங்களையும் தன்னுறுப்புகளை அடக்கும் ஆமைபோல் அடக்கி, பூரகம் இரேசகம் தாரகம் ஆகிய செயல்புரியும் பிராணக்காற்றில் பழகி, கேடில்லாத நடுநாடிவழியே போய், ஞாயிறு திங்கள் அக்கினி ஆகியமுச்சுடர்களின் ஒளிக்குவியலைக் கடந்து, பருத்த படமுடைய பாம்பின் - மூலதாரத்தின் - தலையில் அசைவில்லாத தூண்போல் இருக்கின்றவர்களின் மும்மலமாகிய இருள்ஒழிந்து, விடியும்வரை - ஈடேற்றம் பெறும்வரை மிக்க துறவுஉணர்வு ஆகிய பற்றற்ற தன்மைமலிந்த குணக்குன்றானவர்களின் உச்சியில் பெருமைபொருந்திய ஞானக்கதிர் எழுமாறு பத்துவிதமான ஓசையும் எண்ணற்ற பிறவியும் ஆகியன ஒழியக்கூவுகின்ற சேவலுடைய முருகனுடன் அம்புலியே! விளையாடவா. சிறந்தமறைகளின் ஒலிவிளங்கும் திருப்போரூர் முருகப்பெருமானுடன் அம்புலியே! விளையாடவா.

**விளக்கம்** : புலன் அடக்கமும் பொறியடக்கமும் ஒருசேரப்பெற்ற ஆமைபோல் துறவுஉணர்வு உடையவர் விள ங்குதல் குறித்தார்.

" ஒருமையுள் ஆமைபோல் ஐந்துஅடக்கல் " என்பதுபொய்யாமொழி. ( 8 ).

( 70 ) கானவர் குலமட மானை மணந்த கடம்பன் கரைபொருநீர்க்
கஞ்சச் சரவண அணைமிசை தனில்நனி கண்துயில் சிறுகுழவி
ஆனவன் மனைவி வளர்த்திடும் மகன்இவன் அம்மான் உரலோடே
அளைதிருடிக் கட்டுண்ணி இடையன் அனையும் சிறுவாலை
ஊனம்இல் அத்தன் பித்தன் இவற்(கு) என்(று) உன்னி இருந்துவிடேல்
உலக சராசரம் இவன் முத்தொழில் விடவுண்டோ கண்டிகொலோ
வானவர் சேனா பதியுடன் ஆடிட வாஅம் புலிவாவே
மலிசம ராபுரி முருகன(து) அருகே வாஅம்புலி வாவே.

**குறிப்புரை** : கானவர்= வேடர். மான்= வள்ளி நாச்சியார். சரவண கஞ்ச அணை= சரவணப் பொய்கையின் தாமரைப் படுக்கை. சிறுகுழவி= சிறுகுழந்தை - முருகன். ஆன் அவன் மனைவி= பசுக்களையுடைய நந்தகோபனின் மனைவியகிய யசோதை. மகன்= மகனாகிய கண்ணன். இவன் அம்மான்= இவனுக்கு மாமன். அளை= வெண்ணெய். உரலோடே கட்டுண்ணி= உரலுடன் கட்டைபெற்றவன். இடையன்= ஆயர்குலத்தவன். அனையும் சிறுவாலை= பெற்றதாய் - உமையவள் - வாலைப் பருவத்தினள். ( வாலை= பன்னிரு வயதுப்பெண் ) அத்தன்= தந்தை. உன்னி= நினைத்து. சராசரம்= இயங்குதிணைப் பொருள் நிலைத்திணைப் பொருள். விட உண்டோ= இதைகாட்டிலும் சிறப்பு வேறு இல்லை.. கண்டிகொலோ= பார்ப்பாயாக. மலி= அருள்மலிந்த.

**பொழிப்புரை** : வேடர்குலத்து மானாகிய வள்ளியை மணந்த கடம்பன் இவன். கரையில் மோதும் அலைகளுடையதாகிய சரவணப்பொய்கையில் இருக்கும் தாமரைமலராகிய படுக்கையில் நன்குஉறங்கும் சிறுகுழந்தை என்றும், பசுக்களுடைய நந்தகோபனின் மனைவியாகிய யசோதையின் வளர்ப்புப்பிள்ளை என்றும், இவனின் மாமன் - கண்ணன் வெண்ணெய் திருடியதால் உரலில் கட்டப்பட்ட இடையன் என்றும், இவன்தாய் பன்னிருவயது இளம்பெண் என்றும், குற்றமில்லாத தந்தை பித்தன் என்றும் இவனைப்பற்றித் தாழ்வாக எண்ணி வராதிருக்காதே. உலகத்து இயங்குதிணைகள் நிலைத்திணைகள் அனைத்தும் இவனது முத்தொழில்களால் அமைவன. இதைக்காட்டிலும் வேறுசிறப்பு இல்லை. எண்ணிப்பார்ப்பாயாக. தேவசேனாபதி யாகிய இவனுடன்விளையாட வா. அம்புலியே! அருள்மலிந்த திருப்போரூர் முருகன் அருகில்வா. அம்புலியே விளையாட வா.

**விளக்கம்** : முருகனின் தாய் கன்னி, தந்தை யோகி :

" முன்பு உலகு ஈன்ற முகிழ்முலைக் கன்னியோடு
இன்புறும் யோகி எழுபுவிக்கு அரசே. " ( சிதம்பரச் செய்யுட்கோவை 31.)

" பான்மொழி கன்னியாகும் பவன்பிரமச் சாரியாகும் "

**இலக்கணக்குறிப்பு :** அனை - இடைக்குறை. உண்டோ - ஓகாரம் எதிர்மறை. ( 9 )

( 71 ) குறுமுள் தாள்நெட் டிதழ்வெண் கமலக் கோயில் இருந்தவள்தன்
கொழுநன் தொழில்தந் திடவோ பச்சைக் கொண்டல் தனக்(கு) இணைசெயவோ
தறுகண் சிறுகண் தழைசெவி வெள்ளைத் தந்திக்(கு)) அர(சு)உறையும்
தருநிழல் தரவோ துருவன் இருக்கும் தங்கக் கிரிதரவோ
பிறவிப் பகையைத் தெறவோ தண்கலை பிரியா(து) அருள்தரவோ
பேசரும் மருவிலர் யாவரும் நிற்கப் பேரருள் யா(து)அறியேம்
மருவுற் றுளஉனை வாவா என்றனன் வாஅம் புலி வாவே
மலிசம ராபுரி முருகன(து)அருகே வாஅம் புலிவாவே.

**குறிப்புரை :** இருந்தவள்= கலைமகள். தொழில்= படைப்புத்தொழில். பச்சைக் கொண்டல்= திருமால். இணை= ஒத்தது - காத்தல் தொழில். தழை= அகன்ற. வெள்ளைத் தந்திக்கு அரசு. ஐராவதம் யானைக்கு அரசனான இந்திரன். ( ஐராவதம் - இந்திரனின் யானை. ஐராவணம் - சிவபிரானுக்கு உரியயானை ) நிழல்= கற்பகமரத்தின் நிழல். தங்கக்கிரி= பொன்மலை = மேருமலை. தெற= அழிக்க. தண்கலை=குளிர்ந்த ஒளி. பேசரும் மருவிலர்= குறிப்பிடத்தக்க களங்கம் இல்லாதவர் - மும்மலங்கள் அற்றவர். நிற்க= ஒதுக்கிவிட்டு. பேரருள்= உன்னை அழைத்த மாபெரும் கருணை. மரு= களங்கம்.

**பொழிப்புரை :** மிகச்சிறு முள்ளுடைய தாளும், நீண்ட இதழ்களும் கொண்ட வெண்டாமரையில் வாழும் கலைமகள் கணவனான நான்முகனுக்குப் படைப்புத்தொழில் தரவோ, வளமான மேகம்போன்ற திருமாலுக்கு அதனைஒத்த காத்தல்தொழில் தரவோ, அஞ்சாமையும் சிறுகண்களும் அகன்றகாதுகளும் கொண்ட வெள்ளையானையாகிய ஐராவதம் ஏறும் இந்திரனுக்குக் கற்பகமரநிழல் தரவோ, துருவன் இருக்கும் பொன்மலையாகிய மேருமலையை அவனுக்குத் தரவோ, எமது பிறவியாகிய பகையை அழிக்கவோ, குளிர்ந்தஒளி பிரியாத அருளைக்கொடுக்கவோ செய்யாததன்றியும், மும்மலங்கள் இல்லாதவர் அனைவரையும் ஒதுக்கிவிட்டும், மாறாக உன்மேல் எழுந்தபேரருள் யாதுஎன்பதை யாங்கள் அறியோம். களங்கமுடைய உன்னை விளையாடவா என்று அம்புலியே! உன்னை அழைத்தான். இத்தகு அருள்மலிந்த திருப்போரூர் முருகப்பிரானுடன் அம்புலியே! விளையாடவா.

**விளக்கம் :** களங்கமில்லாத பிறர் அனைவர்க்கும் அருள்புரியாது, களங்கமுடைய நிலவாகிய உன்னைத் தன்னுடன் விளையாட அழைத்ததால் இவன் அருமைஉணர்ந்து விளையாடவா என்றார். ( 10 )

## சிறுபறைப்பருவம்.

( பறைஇசை முழக்கக் கூறுதல். இது இரண்டாம்ஆண்டு நிகழ்ச்சி. )

கனககுவ(டு) எனநிலவு வீரவா குத்தலைவர் ககனமுக(டு) அளவும்இரதக்
கணமணி முழக்கும் கவள்குழி திறந்துபாய் கலுழிமத கரிமுழக்கும்
மனகதியி னைப்பொருவு குரகத முழக்கொடு வயப்பூத கணமுழக்கும்
வால்வளை முழக்கும்அதி பேரிகை முழக்கும்அகல் வானவர்கள் முடிமுழக்கும்
பனகஅணை துயிலும்அவன் முதலினோர் உபயதிசை பல்லாண்டு சொல்முழக்கும்
படி(று)அவுண மா(சு)உனக்(கு) உறும்எனச் செவிபுகப் பண்(டு)சூர் வென்றசதுரா
தினகரனை நிகர்சமர புரியில்உறை குமரவேள் சிறுபறை முழக்கியருளே
செறிகலப மயில்முதுகின் உதயசின் மயதூய சிறுபறை முழக்கியருளே.

**குறிப்புரை :** கனககுவடு= பொன்மலை - மேருமலை. கவுட்குழி= கன்னக்குழி. கலுழி= காட்டாறு. கரி= யானை. மனகதி= மனத்தின்வேகம். குரகதம்= குதிரை. வயம்= வலிமை / வெற்றி. வால்வளை= வெண்சங்கு. முடிமுழக்கு= திருமுடிகள் ஒன்றோடொன்று மோதும் முழக்கம். பனக அணை= பாம்பு மெத்தை. உபயதிசை= இருபுறம். படிறு அவுணமாசு= குற்றமுடைய அசுரர்களின் கொடுமை. உனக்கு உறும்= தீர்க்காத பழி உன்னைச்சேரும். செவிபுக= கேட்டதும். சதுரா= சமர்த்தனே. தினகரன்= சூரியன். கலபம்செறி= தோகைசெறிந்த. உதய= தோன்றுகிறவனே. சின்மய= ஞானியே.

**பொழிப்புரை :** குற்றமுடைய அசுரர்களின் கொடுமையைத் தீர்ப்பது உன்கடன் என்ற சொல்கேட்டதும், மேருமலைபோன்று விளங்கும் வீரவாகுத்தேவரின் வானளவு உயர்ந்த தேரில்கட்டிய

கூட்டமான மணிகளின் முழக்கமும், கன்னக்குழி திறந்து பாயும் காட்டாறுபோன்ற மதம் பெருக்கும் யானைப்படையின் பிளிறலும், மனோவேகத்தை ஒத்த குதிரைபடையின் முழக்கமும், வெற்றிபொருந்திய வீரர்களாகிய பூதக்கூட்டமுழக்கமும், வெண்மையான சங்குகளின் முழக்கமும், மிக்க பேரிகைகளின் முழக்கமும், காலாட்படையாக வந்தஅகன்றவானுலகில் வாழ்வோர்செறிவால் தம்முள் மோதிக்கொண்டபோது அவர்களின் திருமுடிகள் மோதிக்கொள்ளும் முழக்கமும் சூழச்சென்று முன்னாளில் அசுரர்களை வென்ற சமர்த்தனே! சூரியனை ஒத்த ஒளிபொருந்திய திருப்போரூரில் எழுந்தருளியுள்ள குமரவேளே! தோகைகள் செறிந்த மயிலின் முதுகில் தோன்றுகிற இளையஞானமயனே! தூயவனே! சிறுபறை முழக்கியருள்க.

**விளக்கம்** : முழக்கங்கள், போர்க்களக் காட்சியையும், படைப்பெருக்கத்தையும், அவற்றின் இயக்கத்தையும் குறிப்பன.

**இலக்கணக்குறிப்பு** : செறிகலாப மயில் - செறிகலாபம் - இனம் விலக்கிய அடைமொழி. **( 1 )**

( 73 ) குடமுழா வாணன்ஈ ராயிர கரங்கொடு குமுகுமுஎன வேமுழங்கக்
கொண்டலின் நிறக்கடவுள் முழ(வு)ஒலி முழக்கவிரி கோகனக மாளிகையினான்
தடமருவு கைத்தாள நல்தொனி முழக்கஅம் தமருகத்தொ னிமுழக்கத்
தார்அளி முழக்கமறை நூபுரம்முழக்கவிரு(து) ஆள்கள்தா ளம்முழக்க
அடல்நதி இரைக்கமணி அரவுகள் இரைக்கஉழை அலறமுய லகன்நெளிஉற
ஆடகம ணிச்சபையின் நாடகம் இழைத்(து)உமைக்(கு) அன்புசெயும் இன்பவடிவோன்
திடமருவு குமரனே சமரபுரி முருகனே சிறுபறை முழக்கியருளே
செறிகலப மயில்முதுகின் உதயசின் மயதூய சிறுபறை முழக்கியருளே.

**குறிப்புரை** : குடமுழாவாணன்= இசைகருவியாகிய குடமுழா இசைப்போன்.. குமுகுமு= ஒலிக்குறிப்பு. கோகனகம்= தாமரை. தடம்= பெருமை. தொனி= ஒலி. தார் அளி= மாலையில் அமர்ந்த வண்டுகள். மறை நூபுரம்= மறைகளாகிய சிலம்புகள். அடல்= ஆற்றல். இரைக்க= ஒலிக்க. உழை= மான்கன்று. ஆடகமணிச் சபை= அழகியபொன்னம்பலம். நாடகம்= திருக்கூத்து. திடம்= வலிமை..

**பொழிப்புரை** : தோலிசைக் கருவியாகிய குடமுழா முழக்குவோன் தனது ஈராயிரம் கைகளால் குமுகுமு என்(று)அதைமுழக்க; கார்வண்ணத் திருமால் முழவினை முழக்க; தாமரையாகிய மாளிகையில் வாழும் நான்முகன் தமது கைகளால் தாளம்போட; அழகாக உடுக்கை, ஒலிஎழுப்ப; மலர்மாலயில் வண்டுகள் முழங்க; மறைகளாகிய சிலம்புகள் முழங்க, விருதுடையோர் தாளம் முழக்க; ஆற்றல் வாய்ந்த கங்கையாறு முழங்க; தன் உடம்பில் அணிகலனாக அணிந்த நாகமணியுடைய அரவுகள் ஒலிக்க; பக்கத்தில் முயலகன் தன் உடம்பை நெளிக்க அழகிய பொன்னம்பலத்தில் நடனமாடி உமையம்மைக்கு அன்புகாட்டும் - இன்பம்வழங்கும் பேரின்ப வடிவான பொன்னம்பலவனின் வலிமைமிக்க மகனே! திருப்போரூரில் எழுந்தருளியுள்ள முருகனே! சிறுபறை முழக்கியருள்க. தோகைகள் செறிந்த மயிலின் முதுகில் அமர்ந்த இளைய ஞானமயனே! சிறுபறை முழக்கியருள்க.

**இலக்கணக்குறிப்பு** : குமுகுமு - இரட்டைக்கிளவி. இச்செய்யுள் சொல்பொருள் பின்வருநிலையணி. **( 2 )**

( 74 ) ஆறுசம யக்கடவுள் வேறுவே றன்(று)யான் ஒருவனே அங்கங்(கு)இருந்(து)
அன்பர்க்கு முத்திதரு வித்(து)என்று யாவர்க்கும் அறிவித்த வதனமணியே
வீ(று)அசுரர் துஞ்சவெம் சிறைவிண்டு வானவர்கள் விண்ணகத்(து) அமு(து)அருந்த
வெற்றிமுர(சு) அன்(று)உனது சேனைவா ரிதியிடை வியப்புற முழங்குமுறைபோல்
மாறுபடு காமாதி வெம்படைகள் துஞ்சிட மலச்சிறை கழன்றுஞான
மாவிண் ணகத்(து)இருந்(து) ஆனந்த அமு(து)எனது வாய்மடுத்(து) உண்ணஅறிவில்
தேறுமறை நாதம்என நினதுமுள ரிக்கரச் சிறுபறை முழக்கியருளே
செறிகலப மயில்முதுகின் உதயசின் மயதூய சிறுபறை முழக்கியருளே.

**குறிப்புரை** : ஆறுசமயம்= சைவம் பசுபதம் மாவிரதம் காளாமுகம் வாமம் வைரவம். தருவித்து= தரும் மூலப்பொருள். வதனம்= முகம் - அருள்நோக்கம். விண்டு= தகர்த்து. சேனை வாரிதி= படைக்கடல். மாறுபடு= ஆன்மிகப் பயணத்திற்கு மாறுபட்ட. காமாதி= காமம் மோகம் மதம் மாச்சரியம். கழன்று= விடுபட்டு. முளரிக்கரம்= தாமரைக்கை.

**பொழிப்புரை** : ஆறுவகைப்பட்ட சமயக்கடவுளர் தம்முள் வேறுவேறானவரல்லர், அவர்அனைவராகவும் நான் ஒருவனே மூலப்பொருளாக அவ்வச்சமயங்களில் இருந்துகொண்டு அடியவர்களுக்கு முத்திதருகிறவன் என்று அனைவர்க்கும் அறிவித்த அருள்நோக்கமுடையவனே! வீரமுடைய அசுரர்கள் மடிய, அவர்களால் சிறைப்படுத்தப்பட்ட தேவர்களை மீட்கச்சிறையினைத் தகர்த்து, தேவர்கள் தமது வானுலகில் அமுதம் உண்ண அன்று வெற்றிமுரசு கொட்டிய உனது படைக்கடலிடை அனைவரும் வியக்க முழங்கிய வெற்றிமுரசின் முழக்கம்போல்; ஆன்மிகப் பயணத்திற்கு எதிரான காமம் முதலிய கொடியபடைகள் அழிய, மும்மலச்சிறையில் இருந்து விடுபட்டு, ஞானவடிவான வானுலகில் இருந்து பேரின்பஅமுதம் பருக ஆன்மாவின் அறிவில் முழங்கும் தெளிந்த மறைமுழக்கம்போல் உனது தாமரைக்கையால் சிறுபறை முழக்கியருள்க. தோகைகள் செறிந்த மயிலின் முதுகில் வரும் இளைய ஞானவடிவடிவனே! தூயவனே! சிறுபறை முழக்கியருள்க.

**விளக்கம்** : சிவபரம்பொருளே அனைத்துச் சமயங்கட்கும் தெய்வம் : " அறுவகைச் சமயத்தோர்க்கும் அவ்வவர் பொருளாய் " ( சித்தி. சுபக், பாயிரம் ) " யாதொரு தெய்வம் கொண்டீர் அத்தெய்வமாகி ஆங்கே மாதொரு பாகனார்தாம் வருவர் " ( சித்தி. சுபக். 25 )

**இலக்கணக்குறிப்பு** : இச்செய்யுள் உவமையணி. ( 2 )

( 75 ) கட்டைமுள் தழுவுதாள் நெட்டிதழ் உடுத்தசெங் கமலநான் முகஎகினமும்
கவுத்துவ மணிப்பணியொ(டு) அம்போரு காடவி கலித்தபச் சைப்பன்றியும்
மட்(டு)உலவு சீர்பாதம் இன்றளவும் கண்டிலா வானவனும் ஓரொருவரை
வழிவரும் சரியாதி வருவித்து வீடுதரும் வனைதமிழ்க் காழிமேவி
எட்டுணையும் அறிவரும் அனந்தரீ வரைவதுவை என்றுபெயரிட்(டு) அழைத்(து)அங்(கு)
இரும்(பு)உண்ட நீரில் திரும்பாத வீடுதரும் இனியகவு ரியர்விளக்கே
திட்டமொடு வரம்உதவு சமரபுரி முருகவேள் சிறுபறை முழக்கியருளே
செறிகலப மயில்முதுகின் உதயசின் மயதூய சிறுபறை முழக்கியருளே.

**குறிப்புரை** : உடுத்த= சூழ்ந்த. நான்முகஎகினம்= அன்னமாய்த் திருமுடி தேடிய நான்முகன். பணி= அணிகலன். அம்போருக அடவி= தாமரைக்காடு. கலித்த= செழித்த. பச்சைப்பன்றி= பசியநிறத்துத் திருமால்.. மட்டுலவு= தேன்சொரியும். வானவன்= இந்திரன். ஓரொருவரை= ஒவ்வொருவரையும். வழிவரும்= முறைப்படி வந்த. சரியாதி= சரியை கிரியை யோகம் ஞானம். வனை தமிழ்= அழகிய தமிழ்ப்பா. அனந்தரீ= முடிவற்றதான. வரைவதுவை= மணக்கும் திருமணம். இரும்பு உண்டநீரில் திரும்பாத= பழுத்த இரும்பில் பட்டநீர் ஆவியாகி மீண்டுவராததுபோல். கவுணியர் விளக்கே= கவுணியர் குலத்து விளக்கான திருஞானசம்பந்தரே. திட்டம்= பூரணம் - முழுமையான. .

**பொழிப்புரை** : பருத்த முள்தண்டுடன் நீண்ட இதழ்கள் சூழ்ந்த செந்தாமரையில் இருந்து அன்னப் பறவையாய்ச் சிவபிரானின் திருவடிதேடிய நான்முகனும், தனது மார்பில் கவுத்துவமணிபதித்த அணிகலனுடன் தாமரைக் காடாக விளங்கும் திருமகளைத் தாங்கிச் செழித்து, சிவபிரானின்திருவடிதேடிய பசியநிறத்துப் பன்றியாகிய திருமாலும், இந்திரனும் இன்றுவரை சிவபிரானின் தேன்சொரியும் சிறப்புவாய்ந்த திருவடிகளை கண்டாரில்லை. ஆனால் தன்திருமணம் காணவந்த ஒவ்வொருவர்க்கும் முறைப்படிவந்த சரியை கிரியை யோகம் ஞானம் உண்டாக்கி, பழுக்கக்காய்ந்த இரும்பில்பட்ட நீர் மீண்டுவராதது போன்று முடிவற்றதான - மற்றீண்டு வாரா வீடுபேற்றினை வழங்கிய இனியவனும், கவுணியர் குலத்துத்திருவிளக்கும் அழகிய தமிழ்ப்பா அருளியவருமாகிய சீர்காழித் திருஞான சம்பந்தராய்த்தோன்றி, முழுமையான வீடுபேறு அருளும் திருப்போரூர் முருகப்பெருமானே! சிறுபறை முழக்கியருள்க. தோகைகள் செறிந்த மயிலின் முதுகில்வரும் ஞானமயனும் தூயவனும் ஆகிய முருகவேளே! சிறுபறை முழக்கியருள்க.

**விளக்கம்:** முன்புபோல் இங்கும் கருவாய்ப்பட்டுப் பிறந்த திருஞானசம்பந்தரை முருகனாகவே சொல்லப்பெற்றுள்ளது. முருகப்பிரான் பிறப்பும் இறப்பும் இல்லாதவன் என்பது உணர்ந்தும் இங்ஙனம் கூறியுள்ளது ஒருசாராரின் வல்லாண்மையின் விளைவு - காலத்தின் கோளாறு என்று கொள்க.

**இலக்கணக்குறிப்பு** : நான்முக எகினம்,பச்சைப்பன்றி - உருவகங்கள். ( 4 )

( 76 ) வெளியில்வளி அசைவற்று நின்றவாறு அமலஉளம் மிளிர்பரத்(து) இலயமாகி
மெய்த்தவம் இழைப்பவர்க்கு) அகல்வான நதிநீர் வியன்தொளைக் கரம்நிமிர்த்(து)அங்கு

அளியொடு கரிமொண்டு குண்டிகை நிறைப்ப அலவன்பகைக் கவிகள்தாவி
அங்கண் பசுங்கனி கொணர்ந்துவந் திக்கஅனுதினமும் அவர்அறையும் மறைநூல்
கிளிகள்பயி லக்ககன கந்தருவர் வந்(து)அமுத கீதநாதம் முழக்கும்
கிளர்சந்த னப்பொங்கர் மலிசாரல் கயிலையங் கிரிவார வளம்நிகர்க்கும்
தெளிவுதரு சமரபுரி தனில்நிலவு குமரவேள் சிறுபறை முழக்கியருளே
செறிகலப மயில்முதுகின் உதயசின் மயதூய சிறுபறைமுழக்கியருளே.

**குறிப்புரை** : வெளியில்= வெட்டவெளியில். வளிஅசைவற்று= காற்றின் இயக்கமின்றி. நின்றவாறு= நின்றதுபோல். பரத்து= பரம்பொருளில். இலயமாகி= நிலைத்து. வானநதிநீர்= ஆகாயகங்கை நீர். வியன்தொளை= பெரியதுளை. கரம்= துதிக்கை. கரி= யானை. குண்டிகை= கமண்டலம். வன் பகைஅல கவிகள்= கொடியபகை இல்லாத - நட்புடைய - குரங்குகள். வந்திக்க= வணங்க. ககன கந்தருவர்=வானுலகக் கந்தருவர். கீத நாதம்= இசைஒலி. கிளர்= பூந்தாது. வாரவளம்= திரண்டவளம். தெளிவு= வாழ்க்கையில் தெளிவு.

**பொழிப்புரை** : வெட்டவெளியில் இயக்கமுடையகாற்று இயக்கமின்றி நின்றதுபோல், மலங்களற்ற மனம் பரம்பொருளிடம் நிலைத்தநிலையில் மெய்யானதவம் செய்வோர்க்கு, அகன்ற வானுலகக் கங்கைநீரை, யானைகள் தனது பெரியதுளையுடைய கையினைநீட்டி அன்புடன் முகந்து தவத்தோரின் கமண்டலத்தில் ஊற்றி நிறைக்க; அத்தவத்தோருடன் நட்புடைய குரங்குகள் தாவியோடி அவர்களிருப்பிடத்திற்கு வளமானகனிகளைக் கொண்டுவந்து தந்துவணங்க; நாடோறும் அத்தவத்தோர் சொல்லும் மறையினைக் கிளிகள்பயில; வானுலகக் கந்தருவர் அமுதமயமான இசைஒலி முழங்கும் திரண்ட வளமுடைய சந்தனச்சோலைகள் மிக்க சாரலுடைய கயிலைமலையின் சாரலை ஒத்த சாரலுடையதாய் வாழ்வில் தெளிவுதரும் திருப்போரூரில் எழுந்தருளியுள்ள முருகப்பிரானே! சிறுபறை முழக்கியருள்க. தோகைகள்செறிந்த மயிலின் முதுகில்வரும் ஞானமேவடிவானவனும் தூயவனும் ஆகிய முருகப்பிரானே! சிறுபறை முழக்கியருள்க.

**இலக்கணக்குறிப்பு** : இச்செய்யுள் உவமையணி. ( 5 )

( 77 ) புகர்படு தொண்டை நிமிர்த்துச் சிகிவாய் பொரு(வு)அக் கரிமதியின்
பொங்(கு)அமு(து)அள்ளிப் பிடிகளி பெருகப் போழ்வாய் வழிஊற்றி
மகஉடு தடவும் பொழில்படு முகில்வாய் மணிநீர் திணிதரளம்
வாரி இறைத்துக் கற்பக நற்குழை மலர்நறை செறிதரவே
தகர முறித்துக் கயம்உனி பகுவாய் தந்தப் பிடிநுதலைத்
தைவந்(து) அருகில் அணைத்து மணந்திடு சண்பக மலர்துயிலும்
குகைபடு சாரல் போரூர் இறையே கொட்டுக சிறுபறையே
கொந்(து)உறு முத்தமிழ் மெத்த வளர்த்தவ கொட்டுக சிறுபறையே.

**குறிப்புரை** : பிடி= பெண்யானை. புகர்= புள்ளி. தொண்டை= துதிக்கை. சிகிபொருவு= மலைபோன்ற. அக்கரி= அந்தஆண்யானை. வாய்= வாயில். போழ்வாய்= பிளந்த - திறந்த. மக உடு= பெரிய விண்மீன்கள். தடவும்= உராயும். படுமுகில்வாய்= தோன்றிய மேகத்திலிருந்து. மணிநீர்= தூய நீர். தரளம்= முத்து. கற்பகக் குழை நறைமலர்= கற்பகமரத்தின் தளிருடன் தேன்பொருந்திய மலர். தகர முறித்து= உடையுமாறு முறித்து. கயம் உனி= இளமையை நினைத்து. பிடிநுதல்= பெண்யானையின் நெற்றி. மணந்திடு துயிலும்= = அணைத்துக்கொண்டு உறங்கும். கொந்து உறு= குவியலாக அமைந்த

**பொழிப்புரை** : பெண்யானையானது தனது துதிக்கையை நிமிர்த்தி, மலைபோன்ற அந்த ஆண்யானையின் பிளந்தவாயில் நிலவிலிருந்து பெருகும் அமுதத்தைஊற்றியபின், திறந்தவாயில் பெரிய விண்மீன்களை உராயும் சோலையில் தோன்றிய மேகத்திலிருந்து தூயதண்ணீரினை மிக்க முத்துகளுடன் வாரி ஊற்றியபின், கற்பகமரத்தின் இளந்தளிருடன் கூடிய தேன்செறிந்த மலருடைய கிளையினை உடையுமாறு முறித்து இளமையை நினைந்து தனக்குத்தந்த அப்பெண்யானையின் அன்பினை எண்ணி, அந்தப்பெண்யானையை அணைத்துக்கொண்டு உறங்கும் குகைபொருந்திய சாரலுடைய திருப்போரூர் முருகப்பிரானே! சிறுபறை கொட்டுக. குவியலாக முத்தமிழை மிகநன்குவளர்த்தவனே! சிறுபறை கொட்டுக.

( 78 ) அளைகடை முடைகது வியதளிர் வடிவத்து ஆய்ச்சியர் மத்(து)ஒலியும்
அம்குட மடிமுலை விம்மிக் கன்(று)உளி ஆன்நிரை கத்(து)ஒலியும்

கிளைபடு தொளைவழி விரல்விடு தொறுவர்கள் கீதக் குழல் ஒலியும்
கேழ்செறி கானக் கோழிகள் முறைமுறை கிட்டிக் கூ(வு)ஒலியும்
விளைதரு தளவத்(து) அளிபல விளரி விளக்கிய சீர்ஒலியும்
விடியற் காலைக் கடலைப் பொருவமி குத்(து)எழு மாமுல்லைக்
குளமலி கண்ணன் தருபோ ரூர்இறை கொட்டுக சிறுபறையே
கொத்(து)உறு முத்தமிழ் மெத்த வளர்த்தவ கொட்டுக சிறுபறையே.

. **குறிப்புரை** : அளை= தயிர். முடை கதுவிய= முடைநாற்றம் படிந்த. அம்= அழகிய. உளி= உள்ளி - நினைத்து. கிளைபடு= தொடர்ந்து அமைந்த. தொறுவர்= இடையர். கேழ்கிளர்= ஒளிமிக்க. கிட்டி= நெருங்கி. விளைதரு தளவம்= மலர்ந்த முல்லை. அளி= வண்டுகள். விளரி= விளரிப்பண். பொருவ= ஒத்து. குளம்மலி= குளங்கள் மிக்க. கண்ணன் தரு= கண்ணபிரானுக்குரிய புன்னைமரங்களுடைய.

**பொழிப்புரை** : நாடோறும் தயிர்கடைந்ததால் அதுபடிந்ததும் தளிர்போன்றதுமாகிய உடம்புடைய ஆய்ச்சியர்களின் தயிர்கடையும் மத்தின் ஒலியும்; அழகிய குடமொத்த மடியுடன் கூடிய முலைகள்விம்மத் தமது கன்றுகளை எண்ணிப்பசுக்கூட்டம் கத்தும் ஒலியும்; புல்லாங்குழலில் தொடர்ந்து அமைந்த துளைகளைத் தமது விரல்களால் மூடியும் திறந்தும் இடையர்கள் ஒலிக்கும் விளரிப்பண் அமைந்த ஒலியும்; காட்டுக்கோழிகள் கூடி அடுத்துஅடுத்துக் கூவும் ஒலியும்; மலர்ந்த முல்லைமலர்களில் மொய்க்கும் பலவண்டுகளின் முளரிப்பண் முழங்கும் சிறந்தஒலியும் ஆகிய இவை விடியற்காலையில் கடலொலிபோல் மிக்கு விளங்குவதும், கண்ணபிரானின் புன்னைமரங்கள் செறிந்ததுமாகிய திருப்போரூர் முருகப்பிரானே! சிறுபறை கொட்டுக. குவியலாக முத்தமிழை மிகவும் வளர்த்தவனே! சிறுபறை கொட்டுக.

**விளக்கம்** : விளரிப்பண் நெய்தல் நிலத்துக்குரியது. திருப்போரூர் முல்லையும் நெய்தலும் கலந்தவிடமாதலின் இருவகைக் கருப்பொருளும் கூறினார். ( 7 )

( 79 ) கிளிமொழி புகல்வார் கீதம் பயில்வார் கின்னரி வாசிப்பார்
கேழ்கலன் அணிவார் மாலைகள் புனைவார் கிளர்மயில் நடம்இடுவார்
அளிசுழல் பூம்பந்(து) எறிவார் குங்குமம் அள்ளிஇ றைத்திடுவார்
ஆடவர் புயஅணை மீதில் துயில்வார் அழகுபணிக்(கு) அருள்வார்
களிரிடை வருவார் சிவிகையில் வருவார் கவனப் பரிவருவார்
காமன்இல் வருவார் மாமன்இல் வருவார் கஞ்சன்இல் வந்(து)அருள்வார்
குளிர்தமிழ் புனைவார் திகழ்போ ரூர்உறை கொட்டுக சிறுபறையே
கொத்துறு முத்தமிழ் மெத்த வளர்த்தவ கொட்டுக சிறுபறையே.

**குறிப்புரை** : கின்னரி= வீணை. கேழ்கலன்= ஒளியுடைய அணிகலன். சுழல்= சூழ்ந்து மொய்க்கும். அழகுபணி= அழகுபடுத்தும் வேலை. கவணம்= விரைவு. இல்= போன்று. மாமன்= திருமால். கஞ்சன்= பிரமன்.

**பொழிப்புரை** : கிளிபோல் இன்மொழி பேசுவார், இசை கற்பார், வீணை வாசிப்பார், ஒளிபொருந்திய அணிகலன் அணிவார், மாலைகள் அணிவார், அழகிய மயில்போல் நடனமாடுவார், வண்டுகள் சுழன்று மொய்க்கும் மலர்களால்ஆன பந்தாடுவார், குங்குமத்தை வாரிஇறைப்பார், தமதுகணவரின் தோள்களாகிய மெத்தையில் உறங்குவார், அழகுபடுத்தும் வேலைக்கு உதவுவார், யானைமேல் வருவார், பல்லக்கில் வருவார், விரைந்துஓடும் குதிரையில் வருவார், மன்மதன்போன்ற அழகுடன் வருவார், திருமால்போன்று கார்மேகவண்ணத்தில் வருவார், பிரமனைப்போல் வெண்ணிறத்தில் வருவார், மனத்துக்குக் குளிர்ச்சிதரும் தமிழ்ப்பாக்கள் இயற்றுவார் ஆகியோர்வாழும் திருப்போரூர் முருகப்பெருமானே! சிறுபறை கொட்டியருள்க. குவியலாக அமைந்த முத்தமிழை மிகவும் வளர்த்தவனே! சிறுபறை கொட்டுக.

**இலக்கணக்குறிப்பு** : புய அணை - உருவகம். இடை, இல் - ஏழாம்வேற்றுமை உருபுகள் ( 78 ).

( 80 ) உதடு கடந்த நெடும்பல்லும் உட்குழி கணும்எக் கியவயிறும்
ஊர்அர வங்கள் நெளிந்திடு செவிகளும் உளநெட் டைப்பலபேய்
கதழ்எரி வெம்பசி அற்றனம் என்று களிப்பொடு கைகொட்டக்
ககனகர்(கு) அர(சு)இகல் அற்றனம் என்(று)அணிகடகத் தோள்கொட்ட
மதவலி அவுணர்உ ளம்பறை கொட்டிட வானவர் நகரிஎலாம்
மன்னிய வீரப் பேரிகை கொட்ட மணிக்குடர் உதிரநிணம்

குதிகொளும் வெற்றிச் சத்தி தரித்தோய் கொட்டுக சிறுபறையே
கொத்துறு முத்தமிழ் மெத்த வளர்த்தவ கொட்டுக சிறுபறையே

**குறிப்புரை** : கணும்= கண்ணும். கதழ்= விரைந்து. எரிவெம்பசி கதழ் அற்றனம் என்க. ககனகர்= தேவருலக அமராவதி நகர். இகல்= பகை. மதவலி= வெறிகொண்ட வலிமை. பறைகொட்ட= துடிக்க. நகரி= நகரினர். மன்னிய= பெருமைபொருந்திய. மணிக்குடர்= நன்மைதரும் குடல். உதிர நிணம்= குருதியும் புலாலும். குதிகொளும்= கீழேவிழுந்து துடிக்கும். சத்தி= வேல்.

**பொழிப்புரை** : உதட்டினை விஞ்சிய நீண்டபல்லும், உட்குழிந்த கண்ணும், எக்கிய வயிறும், காதில் அணிந்த ஊர்ந்துசெல்லும் பாம்புகள் நெளியவும் உள்ள உயரமான பலபேய்கள், தின்னப்பிணங்கள் கிடைத்ததால் எரிக்கும் பசிதீர்ந்தோம் என்று களிப்புடன் கைகொட்டி மகிழ, வானுலக அமராவதிநகரை ஆளத்தடையாக இருந்த அசுரர்பகை தீர்ந்தோம் என்றுதேவர்கள் கடகம் அணிந்த தோள்கொட்டிமகிழ, வெறிகொண்ட வலிமையுடைய அசுரர்களின் இதயம் அச்சத்தால் துடிக்க, தேவருலகில் எங்கும் பெருமைபொருந்திய வெற்றிப்பேரிகை கொட்ட, நன்மைதரும் குடலும் குருதியும் புலாலும் கீழேவிழுந்து துடிக்க, வெற்றிவடிவான வேலினை ஏந்தியவனே! சிறுபறை கொட்டுக. குவியலாக அமைந்த முத்தமிழை வளர்த்தவனே! சிறுபறை கொட்டுக.

**இலக்கணக்குறிப்பு** : கணும், உள - இடைக்குறைகள். ககனநகர், ககனகர் ஆனது செய்யுள்விகாரம். **( 9 )**

( 81 ) மரகத மணிக்குவடு தழைசிறை விரித்(து)உரகன் மணிமுடி நெளிக்கஇருமூ
வளம்உள முடிப்பவள வரையினை எடுத்துநடம் இடல்எனம யில்பரியின்மேல்
அருள்விழி கொழிக்கமுக மதிநில(வு) எறிக்கநினை அடியவர் களிக்கவருவோய்
அமணர்கள் பிதற்றுகலை அலைகடல் முழக்கம்அற அருமறைமு ழக்கமுறையே
இருமதுரை யிற்பெரிய நதிவிடு திருப்பதிகம் எதிர்செலவி டுத்தபெருமான்
இருள்என மலைக்கும்மலம் அறஉன(து) அடிக்கமலம் எனதுபுன்மு டிக்கண்அருள்வோய்
செருஎன முழக்குநிசி சரர்கெட உருத்தஇறை சிறுபறை முழக்கியருளே
செழுமணி மதில்சமர புரியில்உறை சிற்பரம சிறுபறை முழக்கியருளே.

**குறிப்புரை :** மரகத மணிக்குவடு= பசிய அழகியஉச்சி. தழைசிறை= பெரிய சிறகன்= சேடன். இருமூவளம் = ஆறுவகைத் தகுதிகள் - தன்வயத்தனாதல், தனக்கு முதல் இலனாதல், உடம்பு இலனாதல், எல்லாநலமும் உளன்ஆதல், எங்கும் வியாபகன் ஆதல், எவைக்கும் காரணன் ஆதல் என்பன. முடிப்பவள வரை= முடிகள் ஆகிய பவளமலை - ஆறு திருமுடிகளுடைய பவளமலையாகிய ஆறுமுகன். முகமதி நிலவு= முகமாகிய நிலவின் ஒளி. எறிக்க= ஒளிர. இரு= பெருமை. நதி= வைகையாறு. திருப்பதிகம்= வாழ்க அந்தணர் என்ற திருப்பதிகம். பெருமான்= திருஞானசம்பந்தராகிய முருகப்பிரான். மலைக்கும்= வருத்தும். மலம்= மும்மலம். புன்முடி= அற்ப அறிவில். செரு= போர். நிசிசரர்= அசுரர். உருத்த= சினந்த. இறை= இறைவனாகிய முருகப்பிரானே. செழுமணி மதில்= பருத்த அழகிய மதில். சிற்பரம= ஞானமேன்மையனே.

**பொழிப்புரை** : ஆதிசேடனின் மணியுடைய தலைநெளியுமாறு, தனது பசிய அழகிய உச்சி, நீண்டசிறகுஆகின அசைய ஆடும் மயில், ஆறுவகைத் தகுதிகள்பொருந்திய திருமுடிகள்பெற்ற பவளமலையாக விளங்கும்முருகப்பிரானகிய தன்னைச்சுமக்க, விழிகளில் அருள் கொழிக்க, திருமுகமாகிய முழுநிலவுஒளிர, உன்னை நினைக்கும் அடியவர் களிகொள்ள வருகிறவனே! சமணர்கள் பிதற்றும் கலைகளாகிய அலைகடல் முழக்கம் ஒழிய, சிறந்த மறைமுழக்கம் முழங்க, பெருமைபொருந்திய மதுரையில் பெரியஆறாகிய வைகையில் இட்ட “வாழ்க அந்தணர்’ பதிகஏடு வைகையின்போக்கை எதிர்த்துச்செல்லுமாறு செய்த திருஞானசம்பந்தராகிய முருகப்பிரானே! இருளாக மறைத்து வருத்தும் மும்மலமும் ஒழிய, உனது திருவடித்தாமரைகளை என் அறிவில் சூட்டியருள்கிறவனே! போர்புரிய முழங்கிவரும் அசுரர் அழியச் சினந்த இறைவனே! சிறுபறை முழக்கியருள்க. பருத்த அழகிய மதில்சூழ்ந்த திருப்போரூரில் எழுந்தருளியுள்ள ஞான மயனான பரம்பொருளே! சிறுபறை முழக்கியருள்க.

**விளக்கம்** : திருஞானசம்பந்தரை முருகப்பெருமானாகக் கூறியுள்ளது பற்றிய முன்னைய விளக்கப்பகுதிகளின் செய்திகளை நினைவுகூர்க. **( 10 )**

## 9. சிற்றில்பருவம்

( சிறுமியர் இழைத்த சிற்றிலை அழிக்காதே என்று வேண்டல். இது மூன்றாம் ஆண்டில் நிகழ்வது )

( 82 ) தேமாங் கனியின் அடுப்(பு) அமைத்துத் திகழ்ஊன்கழிந்த வலம்புரியின்
செந்தேன் உலைப்பெய்(து) அரவுஈன்ற செழுமா மணிவெங் கனல்மூட்டிப்
பூமா தளையின் விதைஅரிசி புகட்டிச் சமைத்துக் கதலிமடல்
பொங்கப் பிழியும் அதன்கனியும் பொருந்த அளவிக் கறிஅட்டுக்
காமா தவிப்பூம் பந்தரிடைக் கயல்கண் ஆயம் இழைத்தவண்டல்
கருதும் புவனக் கோடிஎல்லாம் கரந்தும் படைத்தும் காக்கும்ஒரு
சீமான் உனக்(கு)ஓர் இலக் கோசொல் சிறியேம் சிற்றில் சிதையாதே
தேரூர் வீதிப்போரூரா சிறியேம் சிற்றில் சிதையேலே.

**குறிப்புரை** : திகழ்= விளங்கும். பூ= அழகிய. பொங்கப்பிழியும்= பருக்கவெளிப்படும் . கா= சோலை. ஆயம்= மகளிர் கூட்டம். வண்டல்= விளையாட்டாக இழைத்த சிற்றில். கரந்தும்= மறைத்தும். சீமான்= தலைவனே. இலக்கோ= அழிக்கும் குறிக்கோளுடையதோ.

**பொழிப்புரை** : இனிய மாம்பழங்களால் அடுப்புக்கூட்டி, சதையற்று விளங்கும் வலம்புரிச் சங்கினால் புதுத்தேனை முகந்து உலைநீராக ஊற்றி, நாகங்கள் ஈன்ற சிறந்தஇரத்தினங்களை நெருப்பாக மூட்டி, அழகிய மாதுளம்பழத்தின் விதைகளை அரிசியாகஅதில் இட்டுச் சோறாக்கியபின், வாழையின் மடல்கள் பருக்க வெளிப்படும் வாழைக்கனியைப் பொருத்தமாகக் கலந்து கறி சமைத்து, சோலையில் மாதவிக்கொடிகள் அழகுறப்படர்ந்த பந்தலில், கெண்டைமீன்போன்ற கண்களுடைய மகளிர் கூட்டம் விளையாட்டாக அமைத்த சிற்றிலை; நினைக்கும் கோடிக்கணக்கான உலகங்களைஎல்லாம் மறைத்தும் படைத்தும் காக்கின்ற தலைவனே! உன்இலக்கு எமது சிற்றிலை அழிப்பதுதானா? எளியஎம் சிற்றிலை அழிக்காதே! தேர்ஓடும்வீதிகளுடைய திருப்போரூர் முருகப்பெருமானே! எளியஎமது சிற்றிலை அழிக்காதே!

**இலக்கணக்குறிப்பு** : இச்செய்யுள் முற்றுருவகவணி. ( 1 )

( 83 ) அங்கைத் தலத்தில் குண்(டு)அகழ்நீர் அடக்கும் முனிவர் ஏ(று)அனையான்
அகத்தின் ஞான விளக்(கு)எற்றும் அடிகேள் பவள விளக்(கு)அவியேல்
செங்கண் திரள்மெய் உடையோற்குச் செழுங்கற் பகத்தின் நிழல் தருவோய்
செந்தேன் துளிக்கும் குருந்தநிழல் தீர்க்கேல் மேன்மேல் புடைத்(து)எழுந்த
கொங்கைச் சுமையோ(டு) அரும்களபம் கூடச்சுமந்து வாடும்இடைக்
கொம்பர் அரம்பை மடமகளிர் குலவச் சிதையா வீ(டு)அளித்தோய்
திங்கள் கிரண நித்திலப்பூம் சிற்றில் சிதையேல் சிதையேலே
தேர்ஊர் வீதிப் போரூரா சிறியேம் சிற்றில் சிதையேலே.

**குறிப்புரை** : அங்கைத்தலம்= உள்ளங்கை. குண்டு அகழ்நீர்= சகரரால்ஆழமாகத் தோண்டப்பெற்ற கடல்நீர். முனிவர் ஏறு அனையான்= முனிவருள் தலைமை வாய்ந்த அகத்தியமுனிவர். பவளவிளக்கு= பவளத்தால் ஆன எமது வீட்டுவிளக்கு. செழுங்கண்திரள் மெய்உடையோன்= கண்களின் கூட்டத்தை உடம்பெல்லாம் பெற்றவன் - ஆயிரங்கண்ணனான இந்திரன். குருந்த நிழல் தீர்க்கேல்= குருந்தமரநிழலில் கட்டிய சிற்றிலை அழிக்காதே. கொம்பர் = மலர்க்கொம்பு. அரம்பை மட மகளிர்= தேவருலக இளமகளிர். குலவ= கொண்டாட. வீடு= தேவருலகம். திங்கள் கிரணம்= நிலவின் ஒளி. நித்திலப் பூம்சிற்றில்= முத்துகளால் கட்டிய அழகிய சிறுவீடு.

**பொழிப்புரை** : தனது உள்ளங்கையில் கடல்நீர் முழுவதையும் அடக்கியவரும், முனிவருள் தலைமையரும் ஆகிய அகத்தியமுனிவரின் உள்ளத்தில் ஞானமாகிய விளக்கேற்றிய அடிகளே! எமது பவளத்தால் ஆன வீட்டு விளக்கை அணைத்துவிடாதே! இந்திரனுக்கு வளமான கற்பக மரநிழலுடைய தேவருலக ஆட்சியை அசுரர்களிடமிருந்து மீட்டு இந்திரனுக்கேஅளித்தவனே! சிறந்ததேன் துளிக்கும் குருந்தமர நிழலில் கட்டிய எம் சிற்றிலை அழிக்காதே! மேலும்மேலும் புடைத்துஎழும் கொங்கைகளின் சுமையோடு மிகுதியாகப் பூசிய சிறந்த களபச்சாந்தின் சுமையும்சுமந்து அச்சுமைகளால் வருந்தும் இடையுடைய பூங்கொம்பு ஒத்த தேவருலக இளமகளிர் கொண்டாட அவர்களுக்கு அழியாத வீடுதந்தவனே! நிலவின் ஒளிபோல் ஒளிரும் முத்துகளால் கட்டிய அழகிய எமது சிற்றிலை அழிக்காதே! தேரோடும் வீதிகளுடைய திருப்போரூர் முருகப்பெருமானே! எளியஎம்சிற்றிலைச் சிதைக்காதே. ( 2 )

( 84 ) விதையாய் இருக்கும் ஐந்தெழுத்தும் வேதா கமமும் முத்தமிழும்

விளங்கும் சரியா திகள்நான்கும் வீறா கியமெய்ச் சிவமதமும்
சுதைஆ தரிக்கும் திருநீறும் சோதி நயனத் திருமணியும்
துகள்தீர் பத்தி விதிநெறியின் தொடர்பும் செடிதீர் மெய்அடியார்
இதயா லயத்தைப் பிரியா(து)அங்(கு) இருள்தீர் ஞான மணிவிளக்கும்
இலங்கு மவுனம் துளும்பாத இன்ப வளனும் சந்ததமும்
சிதையா(து) அளிக்கும் ஓர்இறையே சிறியேம் சிற்றில் சிதையாதே
தேரூர் வீதிப் போரூரா சிறியேம் சிற்றில் சிதையாதே.

**குறிப்புரை :** விதை= மூலம். வீறு= பொலிவு. மெய்= ஞானம். சுதை= வெண்மை. நயனத்திருமணி= கண்மணி - உருத்திராக்கம். செடி= குற்றம். ஞானமணி விளக்கு= ஞானம் வழங்கும் மணியாகியவிளக்கு. துளும்பாத= தடுமாறாத. சந்ததமும்= எப்போதும். சிதையாது= குறைவுபடாது. ஓர்= ஒப்பற்ற.

**பொழிப்புரை :** அனைத்துக்கும் மூலமாக விளங்கும் திருவைந்தெழுத்தும், வேதங்களும் ஆகமங்களும், முத்தமிழும், உயர்வுக்கு விளங்கும் சரியை கிரியை யோகம் ஞானம் ஆகியநான்கால், பொலிவுபொருந்திய ஞானம்வழங்கும் சைவசமயமும், வெண்மையை இயல்பாகக் கொண்ட திருநீறும், ஒளிதரும் உருத்திராக்கமும், குற்றமற்ற பத்திமை விதியின் தொடர்பும், குற்றம்தீர்ந்த மெய்அடியார்களின் இதயத்தைப்பிரியாது இருந்து அங்கு மலம்தீர்க்கும் ஞானம்வழங்கும் மணியாகிய விளக்கும், விளங்கும் மோனநிலையில் தடுமாறாத இன்பவளமும், எப்போதும் குறைவுபடாது வழங்கும் ஒப்பற்ற இறைவனே! எம்சிற்றிலை அழிக்காதே! தேரோடும் வீதிகளுடைய திருப்போரூர் முருகப்பெருமானே! எளியஎம்சிற்றிலை அழிக்காதே.

**விளக்கம் :** சிவம், சத்தி, உயிர்கள், மறைப்பு, மலம் ஆகியன கொண்டது உலகு. இவற்றுக்கு முறையே சிவயநம என்ற ஐந்தெழுத்தும் குறியீடு. எனவே திருவைந்தெழுத்தை அனைத்துக்கும் விதை - மூலம் என்றார். ( 3 )

( 85 ) மறையின் சிரமெய் வாக்கியமும் மருவும் கருவி ஆ(று)ஆறின்
வயங்கு முடியில் பேரருளும் வானோர் முடியின் நறுந்தொடையும்
கறைகொள் மிடற்றோன் திருப்புயத்துக் கடிஆர் இதழிச் செழுந்தாரும்
கவுரி கருணை நறவுபொழி கண்ணென் கமலத் தண்மலரும்
அறையும் தணிகை மலைச்சுனைக்குள் அலரும் மலரும் மணக்கும்உன(து)
அரும்சீ ரடிசிற் றிலின்புழுதி அளவி மணப்பத் தகுமோதான்
சிறைவண் தோகைக்(கு) இறையோனே சிறியேம் சிற்றில் சிதையேலே
தேரூர் வீதிப் போரூரா சிறியேம் சிற்றில் சிதையேலே.

**குறிப்புரை :** மறையின் சிரம்= உபநிடதம். மெய்வாச்சியம்= ஞானப்பொருள். மருவும்= உயிர்களைப் பொருந்திய. கருவி= உயர்வதற்குரிய கருவி - சாதனம். ஆறு ஆறு= தத்துவங்கள் முப்பத்தாறு தத்துவங்கள். முடியில்= உச்சியில். வானோர் முடி= தேவர்கள் தலை. கடி= மணம் தார்= மாலை. கவுரி= உமையம்மை. கண்ணென்= கண்களாகிய. அறையும்= புகழ்ந்துகூறும். அலரும்மலரும்= மலரும் மலர்களும். அளவி= சேர்ந்து - படிந்து. தகுமோ= தகாது. வண்சிறை தோகை= வளமான தோகையுடைய மயில்.

**பொழிப்புரை :** நீண்ட வளமான தோகையுடைய மயிலில்வரும் இறைவனே! உபநிடதங்களின் முடிந்த முடிவாகிய ஞானப்பொருளும், உயிர்களைப்பொருந்திய முப்பத்தாறு தத்துவங்களின் உச்சியில் விளங்கும் அளவிடற்கரிய அருளும், தேவர்கள் தமதுதலையில் சூட்டிக்கொண்ட நறுமணமிக்க மலர் மாலையும், கழுத்தில் நஞ்சுக்கறையுடைய சிவபிரானின் திருப்புயத்தில் உள்ள மணம்மிக்க வளமான கொன்றைமாலையும், உமையம்மையின் கருணையாகிய தேன்பொழியும் கண்களாகிய தண்ணிய தாமரை மலரும், புகழப்பெறும் திருத்தணிகைமலைச் சுனையில் மலர்ந்த மலரின் மணமும் மணக்கும் உமது அரிய சிற்றடியில் எமது சிற்றில்புழுதி படிந்து விளங்கலாமா ? புழுதிபடியக்கூடாது என்பதால் எமது சிற்றிலை அழிக்காதே! தேரோடும் வீதிகளுடைய திருப்போரூர் முருகப்பெருமானே! எளியஎமது சிற்றிலை அழிக்காதே.

**விளக்கம்** : ஆன்மதத்துவம் 24 + வித்யாதத்துவம் 7 + சிவதத்துவம் 5 ஆகத் தத்துவங்கள் 36. எல்லாவகையிலும் மிகச்சிறந்த உன்திருவடிகளில் புழுதிபடியக்கூடாது என்பதால் சிற்றிலை அழிக்காதே என்றார்.

**இலக்கணக்குறிப்பு** : தோகை - சினையாகுபெயர். தகுமோ - ஓகாரம் எதிர்மறை. ( 4 )

( 86 ) அடியார் நிமலத் திருஅகத்துள் அன்பு பொறுமை அவாஅறுத்தல்
அடுப்(பு)ஆங்(கு) அமைத்து மலக்காட்டத்(து) அதிக ஞானக் கனல்மூட்டி
மடியா(து) இருந்த உயிர்க்கலசம் வழிய அருள்பே ருலைவார்த்து
மாறாப் பெருமைச் சிவானந்த மதுரச் சோறு தினம்பொங்கி
விடியாச் சீவ போதஇருள் வீய மவுனச் சுடர்விளக்கு
விளக்கி இருந்த படிஇருந்து மேலாம் சிற்றில் விளையாடும்
செடிதீர் அகத்தோர் புகழ்வாலைச் சிறுவா சிற்றில் சிதையாதே
தேரூர் வீதிப் போரூரா சிறியேம் சிற்றில் சிதையேலே.

**குறிப்புரை** : நிமல= மலமில்லாத. திருஅகம்= சிறந்த மனம். ஆங்கு= அந்த மனத்தில். மலக்காட்டம்= மும்மலவிறகு. மடியாது= கனலால் அழியாத. கலசம்= பானை. விடியா= அழியாது இருந்த. சீவபோத இருள்= உயிரின் அறிவைப் பற்றியிருந்த ஆணவஇருள். வீய= ஆற்றல் ஒழிய. சுடர்= ஒளி. விளக்கி இருந்தபடி= காட்டியவாறு. இருந்து= வாழ்ந்து. செடிதீர் அகத்தோர் புகழ்வாலை விளையாடும் மேலாம் சிற்றில்= குற்றம் ஒழிந்த மனத்தவர் புகழும் வாலைப்பருவச் சிறுமியர் விளயாடும் சிறந்த சிற்றில்.

**பொழிப்புரை** : அடியவர்களின் மலங்களற்ற சிறந்த உள்ளத்தில், அன்பு பொறுமை ஆசைகளை அறுத்தல் ஆகியவற்றால் அடுப்புஅமைத்து, அதில் மலங்களாகிய விறகினால் மிக்கஞானமாகிய தீமூட்டி, அத்தீயால் அழியாத உயிராகிய பானையில் அதுவழிய அருளாகிய உலைப்பொருள்கள் ( நீர் அரிசி ) இட்டு, என்றும் மாறுபடாத பெருமையுடைய சிவானந்தமாகிய இனியபொங்கலை நாடோறும் பொங்கி, அழியாத உயிரைப்பற்றிஇருந்த ஆணவஇருளின் ஆற்றல் கெட, மோனமாகிய ஒளிவிளக்குக் காட்டியவாறு வாழ்ந்து, குற்றம்தீர்ந்த மனத்தவர் புகழும் வாலைச்சிறுமியர் கட்டிவிளையாடும் சிற்றிலை, சிறுவனாகிய நீ அழிக்காதே! தேரோடும் வீதிகளுடைய திருப்போரூர் முருகப்பெருமானே! எளியஎம்சிற்றிலை அழிக்காதே.

**விளக்கம்** : எந்தநிலையிலும் ஆணவம் முற்றாகக்கெடுவதில்லை. முத்திநிலையில் அதன் தீய ஆற்றல் கெட்டு, நல்லஆற்றலுடன் செயல்படும்என்பர். ஆணவம், முற்றாக அழிவதில்லை என்பதைத் திருமூலர் " பதியினைப்போல் பசுபாசம் அநாதி " (திருமந்திரம்) என்பார். ( அநாதி= தோற்றமும் கேடும் இல்லாதது ) எனவே உயிர் இறைவனடி சேர்ந்தகாலத்தும் ஆணவம் தன்தீயஆற்றல் கெட்டு, இறைதரும் இன்பத்தை உயிர்க்கு மிகுவித்துக் கொண்டிருக்கும் என்பார் திருவதிகை மனவாசகம் கடந்தார், அது :

" முத்திதனில் மூன்று முதலும் மொழியக்கேள்
சுத்தஅநு போகத்தைத் துய்த்தல் அணு - மெத்தவே
**இன்பம் கொடுத்தல்இறை இத்தைவிளை வித்தல்மலம்**
அன்புடனே கண்டுகொள்அப் பா. ( உண்மை விளக்கம். 50) ( 5 )

( 87 ) ஆறு வதனத் தாமரைகள் அலரும் மதுரச் சுவைமடுவே
அடியார் இதய தாமரையுள் அரும்பி மாறாப் பரிமளமே
வீறும் அமரர் கணம்சூழ்ந்து வியப்ப முளைத்த முழுமதியே
வெவ்வாள் அவுணக் கருங்கடலை விழுங்கி எழுந்த வடஅனலே
மாறு படுபுன் சமயவனம் மலைத்து முறித்த மதகளிறே
மாயாப் பிறவிக் கனல்அவிய வளரும் கருணை பொழிகாரே
தேறும் உயிருள் பூரணமே சிறியேம் சிற்றில் சிதையேலே
தேரூர் வீதிப் போரூரா சிறியேம் சிற்றில் சிதையேலே.

**குறிப்புரை** : வீறு= பெருமை. சூழ்ந்து= ஆராய்ந்து. புன்சமயவனம்= அற்பச்சமயங்களாகிய காடு.

**பொழிப்புரை**: ஆறு திருமுகங்களாகிய தாமரைமலர்கள் மலரும் இனிய சுவையுடைய ஆழமான நீர்நிலையே! அடியவர்களின் இதயமாகிய தாமரைமலரில் தோன்றி என்றும் நிலைத்த நறுமணமே! பெருமைபொருந்திய தேவர்கூட்டம் ஆராய்ந்து வியக்குமாறு தோன்றிய முழுநிலவே! வாளேந்திய கொடிய

அசுரர்களாகிய கொடியகடலினை வற்றச்செய்யத் தோன்றிய வடஅனலே - ஊழித்தீயே! உண்மைக்கு மாறுபட்ட அற்பச்சமயங்கள் ஆகிய காட்டுடன் போரிட்டு அழித்த திருஞானசம்பந்தராகிய மதமுடைய ஆண்யானையே! பிறவற்றால் அழியாத பிறவியாகிய பெருந்தீ அவியுமாறு பெருகும் கருணைபொழியும் கார்மேகமே! உன்னைத்தெளிந்த உயிர்களின் உள்ளத்தில் விளங்கும் முழுமையனே! தேரோடும் வீதிகளுடைய திருப்போரூர் முருகப்பெருமானே! எளிய எம்சிற்றிலை அழிக்காதே.

**விளக்கம்** : திருஞானசம்பந்தர், முருகப்பிரான் அல்லர் என்பதற்கு முன்பு விளக்கப்பகுதியில் கூறியவற்றை நினைக.

**இலக்கணக்குறிப்பு** : வதன தாமரைகள், மதுரச்சுவைமடு, இதயதாமரை, மாறாப்பரிமளம், முழுமதி, கருங்கடல், வட அனல், சமயவனம், மதகளிறு, பிறவிக்கனல், கார் - உருவகங்கள். இச்செய்யுள் இயைபு உருவகவணி. ( 6 )

( 88 ) கரியின் கோடும் அகில்திரளும் கடிச்சந் தனமும் கழைமணியும்
கடுஊற்(று) இருந்த தொளைஎயிற்றுக் கடுங்கண் அரவின் முழுமணியும்
விரியும் தரங்கக் கரங்கள்கொடு விரவிக் கொழித்து நிலம்கிழித்து
வேலை புகுதப் பாதலத்தில் மிளிரும் இராச அரசுபடம்
பரியும் மணிகள் நீர்கதுவல் பரிதி உருவம் பலஎடுத்துப்
பரமா னந்தக் கடல்படிவான் பரிந்து மூழ்கித் தவம்செயல்போல்
தெரியும் பாலித் திருநாடா சிறியேம் சிற்றில் சிதையேலே
தேரூர் வீதிப் போரூரா சிறியேம் சிற்றில் சிதையேலே.

**குறிப்புரை** : கடி= நறுமணம். கழை= மூங்கில். கடு= நஞ்சு. மணி= நாகரெத்தினம். கிழித்து= பிளந்து. வேலை புகுத= கடலுக்குள் புகுந்து. வேலை புகுத நிலம் கிழித்து என்க. இராச அரசு= ஆதிசேடன். நீர்கதுவல்= நீரில் மூழ்கிக்கிடத்தல். பரிதி= ஞாயிறு. படிவான்= மூழ்கித்திளைக்கும்பொருட்டு. பாலி= பாலியாறு.

**பொழிப்புரை** : பாலாறு; யானைத்தந்தமும், அகில்மரத்தின் கூட்டமும், மணக்கும் சந்தனக் கோடுகளும், மூங்கில்முத்துகளும், நஞ்சு ஊறும் தொளையுடையதும் சினம்மிக்க கண்களுடையதும் ஆகிய நாகத்தின் மாணிக்கங்களையும் தனது அலைகளாகிய கைகளால் இழுத்துக்கொண்டு போய்க் கடலில் புகுந்து, கடலடித்தரையைக் கிழித்துக்கொண்டு பாதாளத்தில் விளங்கும் ஆதிசேடனின் மாணிக்கமணிகளை நீரில் மூழ்கிக்கிடந்து ஒளிவிடுமாறு செய்யும். அக்காட்சி சூரியன் பல உருவங்கள் எடுத்துக்கொண்டு விருப்புடன் மேலான இன்பக்கடலில்மூழ்கித் தவம்செய்தல்போல் தோன்றும் தொண்டை நாட்டுக்குரியவனே! எளியஎமது சிற்றிலை அழிக்காதே! தேரோடும் வீதிகளுடைய திருப்போரூர் முருகப்பெருமானே! எளிய எமது சிற்றிலை அழிக்காதே! ( 7 )

( 89 ) தருவில் படரும் வல்லிஎனத் தகும்ஆ டவரை மடவார்கள்
தழவப் புயத்தின் முலைக்கோடு தைப்பத் தெரியல் முகைஉடைந்து
முரு(கு)ஊற்(று) எழுந்து துகில் நனைக்கும் மூரிச் சுதைமா ளிகைஇழைத்த
முதிரும் பதும ராகஒளி முழுமீன் திகழும் அகல்வானப்
பருநித் திலவெண் பந்தருக்குப் பவள நெடுங்கால் பலநாட்டும்
பண்பா மதியம் பந்தர்நடுப் பால்வெண் தரளப் புஞ்சம்எனத்
தெரியும் பாலித் திருநாடா சிறியேம் சிற்றில் சிதையேலே
தேரூர் வீதிப் போரூரா சிறியேம் சிற்றில் சிதையேலே.

**குறிப்புரை** : தரு= மரம். வல்லி= கொடி. கோடு= நுனி. தெரியல் முகை= மாலையின் மொட்டு. முருகு= தேன். மூரிச்சுதை= பெருமைபொருந்திய வெண்சுண்ணாம்பு. முழுமீன்= மிகுந்த விண்மீன்கள். பண்பா= இயல்பாக. மதியம்= முழுநிலா. புஞ்சம்= திரட்சி.

**பொழிப்புரை** : மரத்தைப் பற்றிப் படரும் கொடிபோல ஆண்மக்களை மகளிர் தழுவ, ஆண்மக்களின் தோள்களில் அணிந்த மாலைகளின் மொட்டுகள் மகளிரின் முலைநுனிகள் தைத்ததால் மலர்ந்து தேன்பெருக்கி அவர்களின் ஆடைகளை நனைக்கும். பெருமைபொருந்த விளங்கும் வெண்சுண்ணாம்பினால் கட்டப்பெற்ற மளிகைகளில் பதிக்கப்பெற்ற செந்நிறத்துப் பதுமராகமணிகளின் ஒளி, மிக்கவிண்மீன்களாகிய பருத்த முத்துப்பந்தர் இட்டஅகன்ற வானத்தில் அந்தமுத்துப் பந்தரைத் தாங்கும்

பவளத்தாலான நீண்டதூண்களாக விளங்க, பந்தர் நடுவில் வெண்மையுடன் விளங்கும் பருத்த முத்துகளின் திரட்சி, இயல்பாகவே முழுநிலாப்போல் விளங்கும் தொண்டை நாடனே! எளிய எமது சிற்றிலை அழிக்காதே. தேர் ஓடும்வீதிகளுடைய திருப்போரூர்ப் முருகப்பெருமானே! எளிய எமது சிற்றிலை அழிக்காதே.

**இலக்கணக்குறிப்பு** : இச்செய்யுள் உவமைத் தற்குறிப்பேற்றவணி. ( 8 )

( 90 ) கமலக் களைசெந் நெலில் களையும் கடைச்சி மகளிர் வளைஒலியால்
கயல்போய் கரும்பை வளைத்(து)ஒடிப்பக் கலித்த கொழுஞ்சாறு ஒழுகுவழித்
தமரக் களிவண்(டு) ஒழுங்(கு)ஏறல் சம்ப ராரி நாண்ஏற்றும்
தனுவைப் பொருவ மலர்ஓடை தருக்கும் அவன்தூ ணியைநிகர்ப்ப
நிமலக் கமுகின் குடப்பணிலம் நிலவுக் கவிகை தனைஏய்ப்ப
நெடுமா ளிகையின் மகளிர்அவன் நேரும் ஞாயில் படைஏய்க்கும்
திமிலப் பாலித் திருநாடா சிறியேம் சிற்றில் சிதையேலே
தேரூர் வீதிப் போரூரா சிறியேம் சிற்றில் சிதையேலே.

**குறிப்புரை** : கமலக் களை= தாமரையாகிய களை. நெலில்= நெல்வயலில். களையும்= பறித்து எறியும். கடைச்சியர்= மருதநிலமகளிர். வளைத்து= சூழ்ந்து. கலித்த= பெருகிய. தமரக்களி வண்டு - களி தமர வண்டு= களிப்புடன் பேரொலி எழுப்பும் வண்டுகள். ஒழுங்கு ஏறல்= வரிசையாகக் கரும்பின்மேல் ஏறுதல். சம்பராரி= மன்மதன். நாணேற்றும் தனுவைப் பொருவ= நாண்பூட்டும் வில்போல் விளங்க. தருக்கும்= வீரம்காட்டும். தூணியை நிகர்ப்ப= அம்புக்கூட்டி ஒத்து விளங்க. நிமலக் கமுகு= (சேறுஆகிய) அழுக்குப் படாத பாக்குமரம். குடப்பணிலம்= குடம்போல் பருத்த சங்கு. நிலவுக் கவிகை= வெண்ணிலாவாகிய குடை. நேரும்= வாய்த்த. ஞாயில்படை ஏய்க்கும்= பாதுகாப்புப் படை ஒக்கும். திமிலம்= பேரொலி.

**பொழிப்புரை** : நெல்வயலில் முளைத்த தாமரையாகிய களைகளை மருதநிலமகளிர் பறித்து எறிய; அவர்களின் வளையல் ஒலியால் அஞ்சிய கெண்டைமீன்கள் கரும்பைச்சூழ்ந்து கொண்டு வளைக்க; வளைந்த கரும்பிலிருந்து ஒழுகும்சாற்றின் வழியே பெருங்களிப்புடன் பேரொலி எழுப்பும் வண்டுகள் கரும்பின்மேல் ஏற; அது மன்மதன் (தனது கரும்புவில்லில்) நாணேற்றுவதுபோல் விளங்க; சேற்று அழுக்குப்படாத கரும்பில் உள்ள குடம்போல் பருத்தசங்கு மன்மதனின் வெண்குடைடையாகிய முழுநிலவு போல் விளங்க; உயரமான மாளிகைகளில் உள்ள மகளிர்கூட்டம் மன்மதனது பாதுகாப்புப்படை ஒத்து விளங்கும். பாலாறு முழங்கிப்பாயும் இத்தகு வளமான தொண்டைநாடனே! எளிய எமது சிற்றிலை அழிக்காதே! தேரோடும் வீதிகளுடைய திருப்போரூர் முருகப்பெருமானே! எளிய எமது சிற்றிலை அழிக்காதே.

**இலக்கணக்குறிப்பு** : இச்செய்யுள் முற்றுருவகவணி. ( 9 )

( 91 ) அருணன் தபனம் செவ்விளநீர் அகற்றப் பசும்பொன் புரவிஇளைப்(பு)
அரும்பும் பொதும்பில் துயில்முகில்நீர் ஆற்றக் கமுகு குடைநிழற்றக்
கருவின் இருந்து நிமிர்ந்துதலை கவிழ்க்கும் சாலிக் கதிர்க்கற்றை
கவரி மருங்கின் கால்அசைப்பக் கடிச்சண் பகங்கள் மணம்வீச
தருண வாழை ஆலவட்டம் சந்தப் பொதியக் கால்எறிய
தரணி இதயம் களிசிறப்ப தயங்கு மணித்தேர் மெலச்செலுத்தும்
திருவண் பாலிச் செழுநாடா சிறியேம் சிற்றில் சிதையேலே
தேரூர் வீதிப் போரூரா சிறியேம் சிற்றில் சிதையேலே.

**குறிப்புரை** : அருணன்= சூரியன். தபனம்= தாகம். பசும்பொன் புரவி= வளமான அழகிய குதிரை. அரும்பும்= விரிவான. பொதும்பு= சோலை. நீர்முகில்= நீர்த்துளியுடைய மேகம். இளைப்பு ஆற்ற= களைப்பைத் தணிக்க. குடை நிழற்ற= குடையாக நிழல்தர. நிமிர்ந்து= நிமிர்ந்து நின்று. தலை கவிழ்க்கும்= முற்றியதால் தலைகவிழ்ந்துள்ள. சாலிக்கதிர்க் கற்றை= நெற்கதிரின் தொகுதி. கவரி மருங்கின் கால் அசைப்ப= கவரியாகப் பக்கத்தில் காற்றினை எழுப்ப. கடி= மணம். தருண வாழை= இளம்வாழை.

சந்தப்பொதியக் கால் எறிய= சந்தனமரங்களுடைய பொதிகைமலைக் காற்று - தென்றல்வீச. தரணி= உலகவர். தயங்கு= ஒளிரும். செலுத்தும்= செலுத்துகிற. திருவண்= அழகும் வளமும்.

**பொழிப்புரை** : சூரியனின் தாகத்தைச் செவ்விளநீர் போக்க, சூரியனது வளமான அழகிய குதிரைகளின் களைப்பினை விரிந்து பரந்த சோலையில்தங்கிய நீருடைய மேகம் தனது குளிர்ச்சியால் ஆற்ற, பாக்குமரங்கள் குடையாக நிழல்தர, கருக்கொண்டிருந்து நிமிர்ந்துபின்னர் முற்றித் தலைகவிழ்ந்த நெற்கதிர்த் தொகுதி பக்கங்களில் காற்றினை அசைத்துத்தர, மணக்கும் சண்பக மலர்கள் மணம்பரப்ப, இளவாழையின் இலைகள் ஆலவட்டமாகச் சந்தனமரங்கள் நிறைந்த பொதிகையின் தென்றலை விசிற, உலகவர் இதயம் சிறந்த களிப்புக்கொள்ள, ஒளிரும் அழகிய தன்தேரினை மெதுவாகச் சூரியன் செலுத்துவான். இத்தகு அழகும் வளமும் பெற்ற பாலாறுபாயும் வளமான தொண்டை நாடனே! எளிய எமது சிற்றிலை அழிக்காதே! தேரோடும் வீதிகளுடைய திருப்போரூர் முருகப்பெருமானே! எளிய எமது சிற்றிலை அழிக்காதே! ( 10 )

## 10. சிறுதேர்ப் பருவம்

( சிறிய தேர் உருட்டுவது. இது நாலாம் ஆண்டில் நிகழ்வது )

மதுகரம் புக்(கு)இடற விரைநறும் குறுமுகை வாய்விண்டு மடல்மடக்கி
மதுமாரி பொழிகின்ற தொங்கல்ஆ கண்டலன் வயத்தொடும் தேர்உருட்ட
விதுகரமும் மட்கஓர் ஆயிரம் கரம்கொடு வேலை இருள் அள்ளிஉண்டு
வெற்பின்முடி எழுகடவுள் சூர்மகற்(கு) அஞ்சாது தேர்உருட்ட
கதழ்எரிச் செங்குஞ்சி வெண்பல் பசுங்கண் கரும்பேய்கள் அவுணர்உடலக்
கார்வரை உருட்டமால் அட்டதிசை தன(து)ஆணை கைகொள்சக் கரம்உருட்டச்
சிதைவு)அறு பெருந்தேர் உருட்டுபோ ரூர்இறைவ சிறுதேர் உருட்டியருளே
சிமயம்மொய்த் திடும்இமய மயில்வயிற்(று) உதயமணி சிறுதேர்உருட்டியருளே.

**குறிப்புரை** : மதுகரம்= வண்டு. இடற= கிண்ட. வாய்விட்டு= மொட்டவிழ்ந்து.. மடல்மடக்கி= இதழ்களைத் தொங்கவிட்டு. ஆகண்டலன்= இந்திரன். விது கரமும்மட்க= சந்திர கிரணமும். மட்க= மங்குமாறு. வேலை இருள்= கடல்போன்ற இருள். வெற்பின்முடி எழுகடவுள்= மலைஉச்சியில் எழும் சூரியன், சூர்மகற்கு= பானுகோபனுக்கு. வியன் மணி= பெரிய அழகிய. கதழ்எரி= உக்கிரமான தீ. செங்குஞ்சி= சிவந்த தலைமுடி. பசுங்கண்= பசியகண். உடலக் கார்வரை= உடலாகிய கரியமலை. மால்= திருமால். கைக்கொள்= ஏந்திய. சகரம்= சக்கராயுதம். சிமயம் மொய்த்திடும்= மலையுச்சிகள் மிக்க. இமயமயில்= பார்வதிதேவி. உதயமணி= தோன்றிய மாணிக்கமாகிய முருகனே.

**பொழிப்புரை:** வண்டுகள் புகுந்துகிண்ட, அதனால் குறுமொட்டுகள் மொட்டவிழ்ந்து மடல்களைத் தொங்கவிட்டு தேன்மழை பொழிகின்ற மாலையணிந்த இந்திரன் வெற்றியுடன் தேர்செலுத்த; சந்திரனின் ஒளிமங்க ஆயிரம் கிரணக்கைகளால் கடல்போன்ற இருளை அள்ளியுண்டு மலைஉச்சியில் எழும் சூரியன் பானுகோபனுக்கு அஞ்சாது பெரிய அழகியதேரோட்ட, உக்கிரமான தீப்போன்ற தலைமுடியும் வெண்பல்லும் பசியகண்ணும் கரியநிறமும் உடையபேய்கள் அசுரர்களின் உடலைதின்னும்பொருட்டுப் புரட்டிப்பார்க்க, எண்திசைகளிலும் ஆணைசெலுத்தத் திருமால் தன்கையில் சக்ராயுதம் சுழற்ற, அழியாத அண்டமாகிய பெரியதேரினைச் செலுத்தும் திருப்போரூர் முருகப்பெருமானே! சிறுதேர் உருட்டியருள்க. சிகரங்கள் பலஉடைய இமயமலையில் மயில்போன்ற மேனைக்குத் தோன்றிய மாணிக்கமே! சிறுதேர் உருட்டியருள்க.

**இலக்கணக்குறிப்பு** : இச்செய்யுள் சொல்பொருள் பின்வருநிலையணி. ( 1 )

( 93 ) மருகுவளி எறியும் கடும்சிறைப் புலிநகம் வளைத்(து)உண்ட வெண்டலைச்செம்
மாமுது(கு) உடைக்கருடன் மீ(து)இவர்ந்(து) ஒளிபெருகு மரகத நிறக்கடவுளும்
முறு(கு)எரி கடுக்கும்சி கைப்பவள வாய்வெண்மை மொய்த்தசிறை விள்ளாஅடி
மூ(து)ஓதி மத்(து)இவர்ந்(து) ஆரணம் முழக்குநா முண்டக மனைக்கடவுளும்
குறுகிஇரு புறனும்வர நடுஇடைப் பைஞ்சிறைக் குரகதம் கடவிஅடியார்
குறைகளைந்(து) ஆறுமதி வதனவழி கருணைபொழி கொண்டலே அண்டர்அரசே
சிறு(கு)இடைப் பெருமுலைத் தேவகுஞ் சரிகணவ சிறுதேர் உருட்டியருளே
சிமயம்மொய்த் திடும்இமய மயில்வயிற்(று) உதயமணி சிறுதேர் உருட்டியருளே.

**குறிப்புரை** : மருகுவளி= சுழலும்காற்று. எறியும்= வீசும். சிறை= சிறகு. வளைத்துண்ட= வளைவாகக் கொண்ட. செம் மாமுதுகு= சிவந்த அகன்ற முதுகு. மரகத நிறக்கடவுள்= திருமால். முறுகு எரி= முதிர்ந்த நெருப்பு. கடுக்கும்= ஒக்கும். சிகை= தலைமுடி. வெண்மை மொய்த்த= மிகவெண்மையான. விள்ளா அடி= பிளவுபடாத பாதம். மூதுஓதிமம்= வலிமையான அன்னப்பறவை. ஆரணம்= வேதம். முண்டகமனைக் கடவுள்= தாமரையை இருப்பிடமாகக் கொண்ட நான்முகன். குறுகி= நெருங்கி. நடுஇடை= நடுவில். பைஞ்சிறைக் குரகதம்= பசிய சிறகுகளுடைய குதிரை - மயில். கடவி= செலுத்தி. அண்டர் = தேவர். தேவகுஞ்சரி= தெய்வயானையம்மை.

**பொழிப்புரை:** சுழல்காற்றுவீசும் வலிமையான சிறகுகளும், வளைந்த புலிநகம் போன்ற நகமும், வெண்மையான தலையும், சிவந்த அகன்ற முதுகுமுடைய கருடன்மேல் ஏறி வரும் மரகதம்போல் ஒளிமிக்க நிறமுடைய திருமாலும், முதிர்ந்த நெருப்புப்போன்ற தலைமுடியும், பவளம் ஒத்த அலகும், மிகவெண்மையான சிறகும், பிளவுபடாத பாதமும் கொண்ட வலிமையான அன்னப்பறவை மேலேறி வேதம் முழங்கிவரும் நான்முகனும் நெருங்கிநின்று இருபக்கமும் வர, இவர்களுக்குநடுவில் பசிய சிறகுடைய மயிலாகிய குதிரையைச் செலுத்திக்கொண்டு அடியவர் குறைகளைக் களைந்துகொண்டு, ஆறு நிலவுபோன்ற முகத்தின்மூலம் கருணைபொழியும் மேகமே! தேவர்கட்கெல்லாம் அரசே! சிற்றிடையும் பருத்த முலையுடைய தெய்வயானையம்மைக்குக் கணவனே! சிறுதேர் உருட்டியருள்க. சிகரங்கள் பலவுடைய இமயமலையில் மயில்போன்ற மேனைக்குத் தோன்றிய மாணிக்கமே! சிறுதேர்உருட்டியருள்க.

**விளக்கம்** : முருகனின் மயிலைப் பரி எனல் : " வண்சிறை மயில்பரி நடாத்தும் சேவகப்பெருமாள் " ( முத்துகுமாரசுவாமி பிள்ளைத்தமிழ் ). " மயிலேறு ராவுத்தனே "( திருப்புகழ் ) ( 2 )

( 94 ) பாததிகி ரியும்எலும் புப்பெரும் பலகையும் பகர்நாடி உருவாணியும்
பரியமரு மத்தட்டும் அரியசீர்க் கூவிரம் படிறுசெறி பொறியாடியும்
காதல்தரு குஞ்சிகொ டிஞ்சியும் பலமொழி கலித்தபல் லியராசியும்
கணமொடு மலிந்தஉடல் எனஉரை தரும்பெரிய கடுவேக முடையநால்நா
பேதம்உறு தேர்கள்மீ(து) ஆருயிர்ப் பிளையைப் பிறங்கிட இருத்திவெற்றி
பேசரு மனப்புரவி கட்டிவினை வடவழிப் பெருமநின் அருள்வலவனால்
தீ(து)அற நடத்திடச் செய்தகும ரேசனே சிறுதேர் உருட்டியருளே
சிமயம்மொய்த் திடும்இமய மயில்வயிற்(று) உதித்தமணி சிறுதேர் உருட்டியருளே.

**குறிப்புரை** : பாத திகிரி= பாதங்களாகிய சக்கரங்கள். நாடி உரு ஆணி= நரம்பு வடிவிலான இணைப்பு ஆணி. மருமத்தட்டு= மார்பு ஆகிய பலகை - தேர்த்தட்டு. கூவிரம்=கொடிஞ்சி. படிறு செறி பொறி ஆடி= குற்றம்மிக்க பொறிகளாகிய அசைந்தாடிகளும் ( இது தேர்த்தட்டுக்குமேல் தேரைச்சுற்றி அழகுக்காகத் தொங்கவிடப்பெற்றுக் காற்றில் அசைந்தாடுவது.) காதல்= ஆசை. குஞ்சிக்கொடிஞ்சி= தலைமயிராகிய மேல் மொட்டு. பலமொழி கலித்த= பல இசையில் ஒலிக்கும். பல்லியராசி= பல்லாகிய பல இசைக்கருவிகளின் கூட்டம் - வாத்தியங்களின் கூட்டம். கணமொடு மலிந்த= மிக்க நோயுடைய. நானா பேதம்= பலவகை வேறுபாடுகள். ஆருயிர்ப் பிளை= சிறந்த உயிரகிய குழந்தையை. பேசரு மனப்புரவி= சொல்லுதற்கரிய விரைவில் செல்லும் மனமாகிய குதிரை. வினைவட வழி= இருவினையாகிய வடங்களின் மூலம். நின்அருள் வலவன்= உனதுஅருளாகிய தேரோட்டி. தீது அற நடத்திட= தீங்கின்றிச் செலுத்த.

**பொழிப்புரை** : பாதங்களாகிய சக்கரங்கள், எலும்புகள் ஆகியபெரிய பலகைகள், புகழ்பெறும் நரம்புவடிவிலான ஆணிகள், அகன்றமார்பு ஆகிய தேர்த்தட்டுப் பலகை, குற்றம்மிக்க ஐம்பொறிகளாகிய அசைந்தாடிகள், ஆசைதரும் தலைமயிராகிய மேல்மொட்டு, பற்களாகிய பல இசையில் ஒலிக்கும் பலவகை வாத்தியங்களுடன் கூடியதும், மிக்கநோயுடைய உடல் என்று கூறபெறுவதில் சொல்லுதற்கரிய வேகமுடைய மனமாகிய குதிரைகள் கட்டியதும், பலவகைவேறுபாடுடையதும் ஆகிய தேரில், சிறந்த உயிராகிய குழந்தையைச் சிறப்புற அமர்த்தி, இருவினைகளாகிய வடங்களால், உனது அருளாகிய தேரோட்டிமூலம் குற்றமற இயக்கும் குமரேசனே! பெருமானே! சிறுதேர்உருட்டியருள்க. சிகரங்கள் பலஉடைய இமயமலையில் மயில்போன்ற மேனைக்குத் தோன்றிய மாணிக்கமே! சிறுதேர் உருட்டியருள்க.

**விளக்கம்** : நம் உடம்பில் உள்ள பாதங்கள், பெரிய எலும்புகள், நரம்புகள், அகன்றமார்பு, ஐம்பொறிகள், தலைமுடி, பற்கள், உடம்பு, தேரில் இருக்கும் குழந்தை, மனம், இருவினை, திருவருள் ஆகியவற்றைத் முறையே; தேரின் உறுப்புகளாகிய சக்கரம், பலகைகள், இணைப்பு ஆணிகள், தேர்த்தட்டு, கட்டப்பெற்றுத் தொங்கும் பலவண்ண அசைந்தாடிகள், மேல்மொட்டு, தேர்தட்டில் அமர்ந்து பல்லிசை

முழக்கும் இசைக்கலைஞர்கள், தேரில் கட்டிய குதிரைப்பொம்மைகள், தேரில் ஆசையுடன் இருக்கும் குழந்தை, தேர் வடங்கள், தேரோட்டியாகிய நான்முகன் என்று உருவகப்படுத்தியுள்ளார்.

**இலக்கணக்குறிப்பு :** இச்செய்யுள் முற்றுருவகவணி. ( 3 )

( 95 ) உலகினொடு சரஅசரம் எவையுமாய் ஒன்றினொடும் ஒருபற்(று) இலாத பொருளாய்
உறும்அறிவை அறிவிடத்(து) எழுகின்ற சிற்றசைவில் உயிர்உலகு மயலில் பரமும்
இலகும்அவை எங்ஙனம்எனில் கருதும்அறி(வு)ஒன்(று)அ(து) எழுநினைவு சுட்டுப்பொருள் ஒன்(று)
இவைஓர் இரண்டையும் பிரித்தும் இயக்கிவரு பொருளொன்றும்ஆம்
கலகமுறும் அந்தநினை(வு) இன்றாகின் முப்பொருளும் இன்றுபர
கதியும்இதுவே காண்என்று கடையேனை வாஎன்று முடிமீது கஞ்சமலரடி தரித்(து)என்
சிலைமனம் கனிசெய்த குமரசற் குரவனே சிறுதேர் உருட்டியருளே
சிமயம்மொய்த் திடும்இமய மயில்வயிற்(று) உதயமணி சிறுதேர் உருட்டியருளே.

**குறிப்புரை :** சர அசரம்= இயங்குதிணை, நிலைத்திணைப்பொருள்கள் ( கிருமிகள் முதல் மனிதன் ஈறானவை இயங்குதிணை. புல்முதல் மரம்ஈறானவை நிலைத்திணை. ) உறும் அறிவை= ஞானமயனை. சிற்றசைவு= சிறிய சிந்தனை. மயல் இல் பரம்= மயக்கம் இல்லாத இறைவன். அது எழும்நினைவு= அந்த அறிவில் தோன்றும் பொருள். சுட்டுப்பொருள்= சுட்டிகாட்டப்பெறும் பொருள் - உலகம். பிரித்தும்= வேறுவேறாகவும். இயக்கிவரு பொருள்= இறையருள். முப்பொருளும் இன்று= இறை உயிர் தளை ( பாசம்) என்பன இல்லை. பரகதி= வீட்டுலகம். இதுவே= இவ்வுலகவாழ்வே. கலக்கமுறும்கடையேனை= அஞ்சும் கீழான என்னை. கஞ்சமலரடி= தாமரைமலர்போன்ற திருவடி. சிலைமனம்= கல்போன்றமனம்.

**பொழிப்புரை :** உலகமும், உலகிலுள்ள இயங்குதிணை நிலைத்திணை ஆகிய எல்லாப் பொருள்களாகவும், அவை எந்த ஒன்றோடும் சிறிதளவு பற்றும் இல்லாத பொருளாகவும் உள்ள ஞானமயனாகிய இறைவனை; அறிவில் தோன்றும் சிறிய சிந்தனையில் உயிரும், உலகும், மயக்கமில்லாத இறைவனும் விளங்கும் என்றால், நினைக்கும் அறிவு, அதில்எழும்சுட்டுப்பொருள் ஒன்று - உலகம் ஒன்று - இவை இரண்டையும் இயக்கிவரும் பொருள் - திருவருள் ஒன்றுஆக முப்பொருள் நினைவு இல்லாவிடில்; இறை உயிர் தளை என்பன இல்லை; வீட்டுலகம் என்பது இவ்வுலகமே என்று மனம்அஞ்சும் கீழானஎன்னை அருகில் அழைத்துத் தனது தாமரைமலர்போன்ற திருவடிகளைச் சூட்டிக் கருங்கல்போன்ற என்மனத்தை கனியச்செய்த குமரனே! ஞானகுருவே! சிறுதேர் உருட்டியருள்க. சிகரங்கள் பலஉடைய இமயமலையின் மயிலாகிய மேனைக்குத்தோன்றிய மாணிக்கமே! சிறுதேர் உருட்டியருள்க.

( 97 ) ஒருபொரு ளிடத்தினில் சச்சிதா னந்தமுடன் உருவநா மமும்உள(து)என்(று)
உரைதந்து முன்னர்பினர் உண்டாய் விளங்கியுறு பிரியமாய் உளமூன்றுளே
மருள்இரிய வருமெய்ம்மை உருவநா மம்பொய்மை வன்பழுதை உரகஉருவின்
மாறா(து) அறிந்திடுதி பின்பழுதை நன்றாம தித்தவர்க்(கு) அர(வு)இன்மையின்
இருள்அறும் பிரமமே நிகழும்மற்று ஒருபொருளும் எதிரிட்(டு) இலங்கா(து)என
ஏழ்பிறவி வாரிதியில் ஆழும்எனை வாஎன்(று) எடுத்(து)அருள் அளித்தகுரவா
தெருள்உறும் கலைமுனிவர் பரவுபோ ரூர்முருக சிறுதேர் உருட்டியருளே
சிமயம்மொய்த் திடும்இமய மயில்வயிற்று உதயமணி சிறுதேர் உருட்டியருளே.

**குறிப்புரை :** சத்து சித்து ஆனந்தம்= உண்மை அறிவு ஆனந்தம் ( அப்பன் அம்மை முருகன் என்பதுமரபு ) உருவம்நாமம்= வடிவம் திருப்பெயர். முன்னர் உரைதந்து= முதலில் கூறி. பினர்= பின்னர். பிரியம்= விருப்பம். மூன்றுளே= சத்து சித்து ஆனந்தம் ஆகிய மூன்றுள். மருள் இரிய வருமெய்ம்மை= அறியாமை கெடத்தோன்றும் உண்மை. உருவம் நாமம் பொய்மை= உருவமும் பெயரும் பொய். வன்பழுதை= வைக்கோலாலான பருத்தபழுதை. உரக உருவின் மாறாது= மாறிப்பாம்பாகாது. நன்றாய் மதித்தவர்= உள்ளபடியே நினைத்தவர்க்கு - பழுதையாகவே நினைத்தவர்களுக்கு. அரவு இன்மையின்= பாம்பாகத் தோன்றாமயால். இருள் அறும்= அறியாமை நீங்கும். பிரமமே நிகழும்= பரம்பொருளாகவே தோன்றும். மற்று ஒருபொருளும் எதிரிட்டு இலங்காது= மாறாக பரம்பொருள் தவிர வேறுஒன்றும் தோன்றாது. என= என்று. ஏழ்பிறவி வாரிதி= எழுவகைப் பிறவியாகிய கடல். ஆழும்= மூழ்கிக்கிடக்கும். அருள் அளித்த= உபதேசித்த. குரவா= குருவே. கலை தெருள்= சாத்திரத்தில் தெளிந்த.

**பொழிப்புரை** : ஒப்பற்ற பொருளுக்கு பரம்பொருளுக்கு, சத்து சித்து ஆனந்தம் ஆகியவற்றுடன் தனித்தனியே வடிவமும் திருப்பெயரும் உண்டு என்று முதலில் கூறி, பின்னர் அப்பொருளுக்கு உள்ளதாக விளங்கும் விரும்பிக்கூறிய மூன்றுள், அறியாமை கெடத் தோன்றும் ஞானப்[பொருளுக்கு ஆசையுடன் வடிவமும் திருப்பெயரும் வைத்தது பொய்யாகும் - ஞானவடிவான அதற்கு வடிவமும் திருப்பெயரும் இட்டுக் கூறியது பொய்யாகும். அது எதுபோல் எனின் வலிய வைக்கோல்புரியைப் பாம்பாக நினைப்பதால் அது பாம்பாக மாறாது என்பதை அறிக. வைக்கோல்புரி வைக்கோல்புரியே. அதுபோல் ஞானமாக விளங்கும் அந்தப் பொருளுக்குக் கற்பித்தவடிவம் திருப்பெயர் ஆகியன தோன்றாமல் ஞானப்பொருளாகத் தோன்றுமே தவிர, மாறாக வேறொன்றாகத் தோன்றாது என்று எழுவகைப் பிறவிக்கடலில் மூழ்கிக்கிடக்கும் எனக்கு உபதேசித்த குருவே! தெளிவு தரும் சாத்திரக்கலை வல்ல முனிவர்கள் போற்றி வணங்கும் திருப்போரூர் முருகப்பெருமானே! சிறுதேர் உருட்டியருள்க. சிகரங்கள் பல உடைய இமயமலையின் மயிலாகிய மேனக்குத்தோன்றிய. மாணிக்கமே! சிறுதேர் உருட்டியருள்க. . ,

**விளக்கம்** : மெய்ப்பொருள் ஞானவடிவினதே தவிர அதற்குப் பெயர்களும் வடிவங்களும் இல்லை. பிறவடிவமும் பெயரும் இட்டுவழங்குதல் பொய்யேதவிர மெய்யன்று. இது பழுதையை இருளில்பாம்பாக நினைத்தல் போன்றது என்றார்.

**இலக்கணக் குறிப்பு** : இச்செய்யுள் உவமையணி ( 5 )

( 97 ) வடவைக் கனல்என உதரக் கனல்மிக மண்டப் பசிவிஞ்சி
மண்டையின் மூளையை அளைஎன முதுபேய் வாரிவி ழுங்கிஅதின்
புடையில் சிறுபேய் கெஞ்சிக் கெஞ்சிப் பொருமிஅழத் தேர்கள்
புணரிக் களனில் குருதிக்கடலில் போகக் காகநிற
மிட(று)அற்(று) ஆடு கவந்தக் குழுவினை விரிதலை முதுகூளி
வெங்கள நாடக சாலையின் ஆட்ட வெகுண்(டு)எழும் அவுணர்கணத்(து)
உடலைக் கறியின் அரைத்(து)எழு தேர உருட்டுக சிறுதேரே
உமைஒரு பாகற்(கு) அருமைக் குமரன் உருட்டுக சிறுதேரே.

**குறிப்புரை** : வடவைக்கனல்= ஊழித்தீ. என= போல. உதரக்கனல்= வயிற்றுப் பெரும்பசி. அளை= வெண்ணெய். புடை= பக்கத்தில். பொருமி= தேம்பி. புணரிக்களனில்= கடலில். போக= அடித்துக்கொண்டு செல்ல. காகநிற மிடறு= கரியகழுத்து. அற்று= வெட்டப்பெற்று. கவந்தம்= அசுரரது தலையற்ற முண்டம். முதுகூளி= வயது முதிர்ந்த பேய். வெங்கள= விரும்பத்தக்க இடம். ஆட்ட= இயக்க. அவுணர் கணம்= அசுரர் கூட்டம். கரியின்= தொடுகறிபோல்.

**பொழிப்புரை** : ஊழித்தீப்போன்று மிகமூண்ட வயிற்றுப் பசியைத்தீர்க்க, போர்க்களத்தில் வீழ்ந்து இறந்தவர்களின் மண்டையில் இருந்த மூளையை வெண்ணெய் என்று முதுபேய் வாரிவிழுங்க, பக்கத்தில் இருந்த சிறுபேய்கள் தமக்கும்தருமாறு கெஞ்சிக்கெஞ்சி வேண்டியும் தராமையால் அவை தேம்பி அழ,, தேர்கள் குருதிக்கடலில் செல்லும் படகுகள்போல் செல்ல, குருதிக்கடலில் கழுத்து அறுக்கப்பட்டுப் போகும் கவந்தங்களைக் கரியநிறமுடைய தலைவிரித்த முதுபேய்களின் கூட்டம், விரும்பத்தக்க நாடகசாலையில் நடிப்பவர்களை ஆட்டுவிப்பவர்போல் இயக்க, சினந்து வந்த அசுரர்கூட்டத்தின் பிணங்களைக் கறிக்குஅரைப்பதுபோல் தேர்கள் அரைத்துக்குருதியில் கலக்குமாறுசெய்யச் சிறுதேர்உருட்டுக. உமையம்மையை இடப்பாகம் உடைய சிவபிரானுக்கு வாய்த்த அருமையான மகனே! சிறுதேர் உருட்டியருள்க.

**இலக்கணக்குறிப்பு** : கெஞ்சிக் கெஞ்சி - அடுக்குத்தொடர். உவமை,உருவகங்கள் தக்கவிடங்களில் அமைந்துள்ளமை காண்க. ( 6 )

( 98 ) கவைதரு குறுமுள் தாள்ஞெண்(டு) அரு(கு)உறு கண்டல் கரிஎயிறு
காண்என வெண்முகை உண்டாய் விண்(டு)அது காலும் துகள்அள்ளி
நவையறு பெண்நண்(டு) உங்(கு)உத விப்பகல் நள்ளிருள் அளைமனைவாய்
நண்(பு)உறும் அஃதொடுபுக்குக் கொண்டல் நடுங்குறு துளிவீசத்
தவநனி குளிரான் உளையக் கடல்தன் தண்திரை வண்கையால்
தரளக் கதவும் பவளக் கதவும் தம்தம் மனைமூடும்
உவமைஇல் நெய்தல் போரூர் இறைவன் உருட்டுக சிறுதேரே

உமைஒரு பாகற்(கு) அருமைக் குமரன் உருட்டுக சிறுதேரே.

**குறிப்புரை** : கவைதரு= பிளவுபட்ட. குறுமுள் தாள்= மிகச்சிறிய கால். ஞெண்டு= நண்டு. கண்டல் கரி எயிறு= தாழையின் கருமையான பல். என= என்று கூற. உண்டாய்= தோன்றி. விண்டு= பிளந்து. காலும் = வெளிப்படுத்தும். துகள் = நறுமணப்பொடியை. உங்கு= மேலே. அளைமனைவாய்= சேற்றாலான வளையில். நண்பு உறும்= உறவுகொள்ளும். கொண்டல்= கீழ்காற்று. துளி= பனித்துளி. தவநனி= மிகமிகப்பெரிய. உளைய= வருந்த. தரளக்கதவு= முத்துஆகிய கதவு. பவளக்கதவு= பவளமாகிய கதவு.

**பொழிப்புரை** : பிளவுபட்டதும் மிகச்சிறு முட்களுடையதுமாகிய கால்களுடைய பெண் நண்டு, அருகேஉள்ள தாழையின் கரியமுள்ளாகிய பற்களைப்பார் என்று கூற, அப்போது தாழையில் வெண்மையான மொட்டுத் தோன்றிப்பிளக்க, அதில்வெளிப்பட்ட நறுமணப்பொடியை அள்ளிக்குற்றமில்லாத அப்பெண்நண்டின் மேல்தூவி, பகலும்நடுஇரவும் சேற்றாலான அவ்வீட்டில் அதனுடன் உறவுகொள்ளும். ஆண்நண்டுடன் வளைஉள்ளே புகுந்த கீழ்காற்று, நண்டுகள் நடுங்குமாறு பனித்துளிகளை வீச, அது கண்ட கடல், தனது குளிர்ச்சியான அலைஎன்றகைகளால், வளையின் முத்துஆகிய கதவையும் பவளம் ஆகிய கதவையும் மூடும். இத்தகு உவமை இல்லாத நெய்தல்நிலத்துப் போரூர் முருகப்பெருமானே! சிறுதேர் உருட்டுக. உமையம்மையை இடப்பாகம் கொண்ட சிவபிரானின் அருமைமகனே! சிறுதேர் உருட்டுக.

**விளக்கம்** : பெண்நண்டு, தாழைமுட்களைக் காட்டியதன் நோக்கம் புணர்ச்சிவேட்கையும், அதனைத்தூண்டும் தாழையின் மகரந்தமண வேட்கையுமாகும். ( நறுமணம் காமஇச்சையைத்தூண்டும் என்பது உளவியல். ( 7 )

( 99 ) பசுமைப் புல்லிச் செந்நிற அல்லிப் பங்கே ருகமீதும்
பால்பாய் தாறொ(டு) அடுக்கும் மடல்குலை பரியும் கதலியினும்
நசைஉற் றிடுகள் தேறல் பாளை நறும்பூ கத்திடையும்
நவைதீர் ஈர்வாள் நெட்டிலை முண்டக நறுவெண் துணர்தோறும்
திசைஉற்(று) அருமணம் வீசுபுன் னாகம் செறிபுளி னத்திடையும்
சினைவளை மதிஅமு தத்திரள் சிந்தும் செய்தியின் மணிசிந்தும்
உசிதக் கல்வியர் சூழ்போ ரூரன் உருட்டுக சிறுதேரே
உமையொரு பாகற்(கு) அருமைக் குமரன் உருட்டுக சிறுதேரே.

**குறிப்புரை** : புல்லி= புறஇதழ். அல்லி= அல்லிமலர். பங்கேருகம்= தாமரைமலர். பால்பாய்= வரிசையாக அமைந்த. தாறொடு= வாழைத்தாறுடன். பரியும்= விரியும். கதலி= வாழை. நசை உற்றிடு= விருப்பம்தரும். கள்தேறல் - தேறல்கள்= தெளிந்த கள். பூகம்= கூந்தற்பனை. நவைதீர்= குற்றமில்லாத. ஈர்வாள்= நெய்ப்பும் ஒளியும். முண்டகம்= தாமரை. துணர்= இதழ். திசைஉற்று= எல்லாத்திசைகளிலும் பரவி. புன்னாகம்= புன்னை. புளினம்= மணற்குன்று. சினை வளை= கருப்பம் முதிர்ந்த சங்கு. மதிஅமுதத் திரள்= முழுநிலவின் இனிய அமுதஒளி. செய்திஇன்= செயல்போல். மணிசிந்தும்= முத்துகளை ஈனும். உசிதகல்வியர்= மேன்மைதரும் கல்வியுடையவர்.

**பொழிப்புரை** : வளமான புறஇதழும், சிவந்த அகஇதழும் கொண்ட செவ்வல்லி, செந்தாமரை ஆகிய இவை மேலும், வரிசையாக அமைந்ததும் தாறுடன் கூடியதும் ஆகிய மடல்விரியும் வாழையின் மேலும், விரும்பத்தக்க தெளிந்த கள்தரும் பாளையுடையதும் மணப்பதுமாகிய கூந்தற்பனை மேலும், குற்றமற்ற நெய்ப்பும் ஒளியுமுடைய நீண்ட இதழ்களுடைய வெண்டாமரை மேலும், திசைஎங்கும் மணம் பரப்பும் புன்னாகமரங்கள் செறிந்த மணற்குன்றுகளிலும், முழுநிலவின் அமுதஒளி சிந்தும் செயல்போல்; கருமுதிர்ந்த சங்குகளின் முத்துகள் எவ்விடங்களிலும்ஒளிவீசும் தன்மையுடையதும், மேன்மைதரும் கல்வியுடையவர்கள் சூழ்ந்துள்ளதுமாகிய திருப்போரூரனே! சிறுதேர் உருட்டுக. உமையம்மையை இடப்பாகமுடைய சிவபிரானுக்கு அருமைமகனே! சிறுதேர் உருட்டுக.

**விளக்கம்** : தேறல்= சுண்ணாம்பிடாத தெளிந்தகள். சுண்ணாம்பிட்டகள் கலங்கல் - பதனீர். " எமக்கே கலங்கல் தருமே தமக்கே தேறல் உண்ணும் மன்னே " புறம். 298. ( 8 )

( 100 ) தரளவெண் மணியும் சங்கும் துகிரும் தடவாள் வாய்முரணும்
தண்திரை எறியும் வண்கட லிடையே தந்திக் கனகோடு
நரைதரு கவரியும் நாவியும் அகிலும் நற்சந் தனக்குறடும்
நாடுறு திரையால் உந்திப் பலநதி நண்ணுறல் பண்ணுறவே

இருநிலம் முழு(து)ஆள் அரையர்க்(கு) அங்கங்கு எய்திய நிருபர்எலாம்
ஏர்திறை இட்(டு)அங்(கு) அவனுள் அடங்கி இருந்திடு முறைமானும்
உருமலி நெய்தல் போரூர் இறைவன் உருட்டுக சிறுதேரே
உமைஒரு பாகற்(கு) அருமைக் குமரன் உருட்டுக சிறுதேரே.

**குறிப்புரை :** வெண்மணி= வெண்முத்து. தடவாள் வாய் முரணும்= பெரிய வாளின் நுனியுடன் வெண்மையால் முரண்பட்ட. வண்கடல்= வளமுடைய கடல். தந்திக் கனகோடு= யானையின் கனமான தந்தம். நரை= வெண்மை. நாவி= கத்தூரி. நாடுறு= விரும்பத்தக்க. உந்து= தள்ளிக்கொண்டுவந்து. நண்ணுறல்= கூடுதல். பண்ணுறவே= அழகுசெய்ய. அரையர்= அரசர். நிருபர்= அரசர். ஏர்திறை= பொலிவு உடைய கப்பம். மானும்= ஒக்கும். உரு= அழகு

( **பொழிப்புரை :** வெண்மையான முத்து, சங்கு, பவளம் ஆகியவற்றைப் பெரிய வாளின் நுனியுடன் வெண்மையால் முரண்பட்ட தண்ணிய அலைகள் கரையில் எறியும் வளமான கடலில்; யானையின் கனமான தந்தம், வெண்மையான கவரி, கத்தூரி, அகில், விரும்பத்தக்க சிறந்த சந்தனமரத்தின் கிளை ஆகியவற்றை அலையால் தள்ளிவந்து பலபேறாறுகள் கடலுக்கு அழகுசெய்தல்; பெரிய உலகம் முழுவதையும் ஆளும் பேரரசனிடம் வந்த பிறஅரசர்கள் எல்லாரும் அழகிய கப்பப்பொருள்களைச் செலுத்திப் பேரரசனுக்கு அடங்கி இருப்பதை ஒப்ப விளங்கும் அழகுமிக்க நெய்தற்பரப்புடைய திருப்போரூர் முருகப்பெருமானே! சிறுதேர் உருட்டுக. உமையம்மையை இடப்பால்கொண்ட சிவபிரானுக்கு அருமையான மகனே! சிறுதேர் உருட்டுக.

**இலக்கணக்குறிப்பு :** மானும் - உவம உருபு. இச்செய்யுள் உவமையணி ( 9 )..

( 101 ) வடவரை ஓர்ஆ யிரம்முழைதொறும் வரும்கொடி மினல்எனவே
வாள்தரு கவைநா நீளவி ரித்திடு மாசுண ராசனையே
கடகரி எட்டும் சென்னி கவிழ்த்துக் கால்கள் மடித்திடவெங்
கடுவே கத்துடன் ஓடிக் குத்திக் கதிர்செறி புஞ்சம்எனப்
படமுடி தாழ எடுத்(து)உத றிப்பர தத்தின் நடித்திடுமோர்
பருமயில் கடவும் பவளக் குன்றே பால சமுத்திரமே
உடல்உறும் உயிர்கட்(கு) இனி(து)அருள் அமுதம் உருட்டுக சிறுதேரே
உமையொரு பாகற்(கு) அருமைக் குமரன் உருட்டுக சிறுதேரே.

**குறிப்புரை :** வடவரை= மேருமலை. முழை= குகை. கொடிமினல்= கொடிபோன்ற மின்னல். வாள் தரு= கூர்மையான. கவை= பிளவுபட்ட. மாசுண ராசன்= ஆதிசேடன். கடகரி எட்டு= மதம்மிக்க திசையானைகள் எட்டு. கால்கள் மடித்திட= கால்மடங்குமாறு விழ. குத்தி= அலகினால் குத்தி. கதிர்செறி புஞ்சம்= ஒளிபொருந்திய குவியல். பரதத்தின் நடித்திடு= பரதம் ஆடுவதுபோல் ஆடும். கடவும்= செலுத்தும். பாலசமுத்திரம்= எப்போதும் இளமை மிக்கவனே. அமிதம்= அமுதமே.

**பொழிப்புரை :** மேருமலையின் ஆயிரம் குகைகள்தோறும்தோன்றி வருகின்ற மின்னல்கொடி போன்றுஒளிரும் மெல்லிய கூர்மையான பற்களுடன் பிளவுபட்ட நாவினை நீளநீட்டும் ஆதிசேடனை, மதமிக்க திசையானைகள் எட்டும் பாரத்தால் தலைதாழுமாறு ஓடிப்போய், இரத்தினங்களுடன் கூடிய ஒளிபொருந்திய குவியல் என்னுமாறு சேடனின் படமுடைய தலைதாழுமாறு தன்அலகினால் குத்தி அப்பாம்பை இரத்தினங்களின் ஒளிபொருந்திய குவியல்போலாக்கி, அதன் படமுடி தொங்க எடுத்துஉதறிப் பரதநாட்டியம் ஆடும் ஒப்பற்ற பருத்த மயிலினைச்செலுத்திவரும் பவளக்குன்றமே! எப்போதும்இளமை மிக்கவனே! உடம்பெடுத்த உயிர்கட்கெல்லாம் இனிய அருளாகிய அமுதமே! சிறுதேர் உருட்டுக. உமையம்மையை இடப்பாகம் கொண்ட சிவபிரானுக்கு அருமையான மகனே! சிறுதேர் உருட்டுக.

**இலக்கணக்குறிப்பு :** மினல் - இடைக்குறை. கொடிமினல் என - உவமையணி. ( 10 )

திருச்சிற்றம்பலம்